69-2

இலக்கிய வரிசை 1

# கம்பன் கண்ட தமிழகம்



ஆக்கியோன்;

**சாமி. சிதம்பரனார்**



விற்பனை உரிமை:

**ஸ்டார் பிரசுரம்**

திருவல்லிக்கேணி மேலக் கோபுரத் தெரு
சென்னை-5. மதுரை.

# பொருள் அடக்கம்







# பிழையும் திருத்தமும்

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 9 | 33 | சுந்தரகாண்டம் என்னும் | சுந்தரகாண்டம், யுத்த காண்டம் என்னும் |
| 10 | 14 | பேசுகின்றர் | பேசுகின்றனர் |
| 22 | 2 | அகநாற்று | அகநானூற்று |
| ,, | 22 | மூகங்களை | முகங்களை |
| 28 | 27 | அரக்கண் ஒன் கயிலை | அரக்கன் ஒண்கயிலை |
| 34 | 5 | ஒழிது விடும் | ஒழிந்து விடும் |
| ,, | 6 | பிறத்த | பிறந்த |
| 50 | 4 | எம் அழை | எம் உழை |
| 52 | 20 | மதுவின் நெறி | மநுவின் நெறி |
| 57 | 12 | எனன்லோடும் | என்னலோடும் |
| ,, | 16 | எனகொல் | என்கொல் |
| 58 | 14 | விடங்களிளும் | விடங்களிலும் |
| 66 | 21 | அடக்கம் ; அற்ற வெறியர்க்ள் | அடக்கம் அற்ற வெறியர்கள் ; |
| 73 | 14 | திவினை | தீவினை |
| ,, | ,, | மர்திரப் | மந்திரப் |
| 77 | 18 | யுத்க | யுத்த |
| 80 | 29 | அறத்தின் | இராமனை அறத்தின் |
| 81 | 2 | பபழியொடும் | பழியொடும் |
| 89 | 29 | இராவணனுடை தேரும் | இராவ்ணனுடைய தேரும் |
| 91 | ,, | தமிழர் வீரர் | தமிழர் வீரம் |
| 100 | 10 | உடு பதுவும் | உடுப்பதுவும் |
| 101 | 32 | அரு ணையும் | அருவினையும் |
| 111 | 7 | வாயக் | வாய்க் |
| 126 | 4 | பல கேல்வி | பல்கேள்வி |
| 136 | 2 | அண் மரபின | அனை மரபின |

# முன்னுரை



கம்பனைப் பற்றி எத்தனையோ பேர் எழுதியிருக்கின்றார்கள்; கம்பன் பெயரால் பல நூல்கள் வெளிவந்திருக்கின்றன. கம்பனைப் பற்றிப் பல்லாண்டுகளாகப் பலர் பேசிக்கொண்டே யிருக்கின்றார்கள். இன்னும் எத்தனையோ நூல்கள் வெளிவரலாம். வெளிவரவேண்டியதும் அவசியம்தான். கம்பனைப் படிக்கும் அறிஞர்கள் அவனைப் பற்றிப் பேசிக்கொண்டேதான் இருப்பார்கள்; எழுதிக் கொண்டேதான் இருப்பார்கள்.

இவ்வளவுக்கும் தகுதியுடையவன் கம்பன். கம்பனைப் பற்றிய சிறந்த ஆராய்ச்சி நூல்கள் பல வெளி வர வேண்டும்; அவனுடைய உயர்ந்த கருத்துக்களை உலகத்தார்க்கு எடுத்துச் சொல்லத்தான் வேண்டும்.

உயர்ந்த காவியங்களைப் பெற்றிருக்கும் ஒவ்வொரு மொழியினரும் இப்படித்தான் செய்கின்றனர். அக்காவியங்களின் கருத்தைப் பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை. அக்காவியப் புலவனும், அக்காவியமும் தங்கள் மொழியின் வளர்ச்சிக்கு—பெருமைக்கு—துணை செய்திருக்கும் ஒன்றையே உயர்வாகக் கருதிப் போற்றுகின்றனர். அக்கவிஞனையும், அவன் நூலையும் கொண்டாடுகின்றனர்.

"தமிழுக்குக் கதியாவார் இருவர். ககரத்தைக் கம்பராகவும், திகரத்தைத் திருவள்ளுவராகவும் கொள்ளுக" என்ற கருத்தை வெளியிட்டார் காலஞ்சென்ற செல்வக்கேசவராய முதலியார் எம். ஏ. அவர்கள். இது மிகவும் பொருத்தமான பொய்யாமொழி.

வள்ளுவரைப் போற்றுவது போலவே கம்பன் காவியத்தை—கவிதையைப் போற்றும் புலவர்களும் பலர்; ஆயினும் தூற்றும் புலவர்களும் சிலர் உண்டு. ஒரு நூலை ஆராய்ச்சி முறையிலே படித்து அதில் உள்ள குற்றங் குறைகளை நடு நிலைமையிலே நின்று எடுத்துக் கூறுவது தவறன்று; இந்த முறை இலக்கிய ஆராய்ச்சி யில் சேர்ந்ததுதான். இந்த முறையிலே கம்பனைப் பற்றி ஆராய்வதை அறிஞர்கள் வரவேற்க வேண்டும். இம் முறை மொழி வளர்ச்சிக்குத் துணை செய்யுமே யன்றித் தடை செய்யாது.

சிலர் இலக்கிய ஆராய்ச்சி முறைக்கு மாருகக் குறுக்கு வழியிலே புகுந்து கம்பனைப் பற்றி ஏதேதோ எழுதுகின்றனர்; பேசுகின்றனர். அரசியல் கொள்கை, இன வெறுப்பு, சாதி வெறுப்பு, மத வெறுப்பு, மொழி வெறுப்பு, பண் பாட்டு வெறுப்பு இவைகளை அடிப் படையாக வைத்துக் கொண்டு கம்பன் மீது காய்ந்து விழுகின்றனர்.

கம்பன் தமிழர் நாகரிகத்தின் விரோதி; தமிழ் நாட்டின் வளர்ச்சிக்கு எதிரி; தமிழ் மொழியின் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டை; நாட்டுப் பற்றில்லா தவன்; மொழிப் பற்றில்லாதவன்; கலாசாரப் பற்றில்லா தவன்; என்றெல்லாம் ஒரு சிலர் ஓங்கிப் பேசுகின்றனர். இது உண்மைக்கு மாருன பேச்சென்பதே கம்பனை நடு நிலையிலிருந்து கற்றவர்களின் கருத்து.

கம்பன் கண்ட தமிழகம் கம்பனுடைய கவிதை யின் நயத்தைப் பற்றி ஆராய்வதன்று; அவன் எடுத்துக் கொண்ட கதையின் தெய்வீகத்தன்மையைப் பற்றி ஆராய்வதன்று. கம்பன் கவிச் சிறப்பை எடுத்துக் காட்டும் நூல்கள் எத்தனையோ வெளி வந்திருக்கின்றன; கட்டுரைகள் எவ்வளவோ வெளிவந்திருக்கின்றன; இன்றும் வெளி வந்துகொண்டே யிருக்கின்றன. அதைப் போலவே இராம சரிதத்தின் சிறப்பைப் பற்றியும் பேசு வோர் எழுதுவோர் எவ்வளவோ பேர் இருக்கின்றனர்.

ஆதலால் அந்த் ஆராய்ச்சியிலே இந்நூல் தலையிட வில்லை.

இந்நூல் கம்பன் பாடிய கதைப் பகுதியைப் போற்றுவதும் அன்று; தூற்றுவதும் அன்று. அந்தப் போற்றல் தூற்றல் போராட்டம் எப்பொழுதும் தொடர்ந்து நடந்து கொண்டுதான் இருக்கும்; அது தீராத சண்டை என்று கூடச் சொல்லி விடலாம்.

கம்பன் ஒரு உயர்ந்த கவிஞன்; ஒப்பற்ற புலவன்; நாட்டு மக்களின் கருத்தை ஒட்டி நயமான கவிதை புனைவதிலே வல்லவன்; காலப் போக்கை உணர்ந்தவன்; மக்கள் மனப் பான்மையை அறிந்தவன்; சான்றோர்களின் கொள்கையைத் தழுவியவன்; தமிழர் நாகரிகத்தையும், பண்பாட்டையும் மறவாதவன்; தமிழ் அன்னைக்குச் சிறந்த காவிய மென்னும் முடி சூட்டியவன்; தமிழ்த் தாயையும், தமிழ் நாட்டையும் போற்றிப் புகழ்ந்தவன். தமிழ் மக்கள் தவறான வழிகளிலே சென்று தடுமாறாமல் உயர்ந்த ஒழுக்கத்தைப் பின்பற்றி ஒன்று பட்டு வாழ வேண்டும் என்ற சிறந்த சிந்தை படைத்தவன்.

உயிரினும் ஒழுக்கமே சிறந்தது என்பதிலே உறுதியான பற்றுள்ளவன். தமிழ் மக்கள், மதம், சாதி, மொழி வெறுப்புக்கள் இல்லாமல் ஒன்றாக இணைந்து வாழ வேண்டும் என்னும் கருத்துள்ளவன்.

இவ்வுண்மைகளை எடுத்துக் காட்டுவதே இந்நூலின் நோக்கம். கம்பன் காலத்திலே தமிழ் நாட்டிலிருந்த அரசியல், சமுதாய நிலை, சீர்திருத்தம், நாகரிக வளர்ச்சி இவைகள் எப்படி யிருந்தன வென்பதை இந்நூலின் மூலம் அறியலாம்.

சுருங்கக் கூறினால் இந்நூல் கம்பன் இலக்கியத்தின் இனிமையை எடுத்துக் காட்டும் நோக்க முள்ளதன்று. அவன் கால நாகரிக நிலைமையை எடுத்துக் காட்டும் வரலாற்று நூல் என்றே கூறலாம்.

இது கம்பன் காலத் தமிழகத்தைப் பற்றி முற்றும் ஆராய்ந்துரைக்கும் முழு நூல் அன்று. இன்னும் ஆராய வேண்டியவை எவ்வளவோ உண்டு. கம்பன் காலத்திலே தமிழகம் எந்நிலையிலிருந்தது என்ற செய்தியை ஓரளவு எடுத்துக் காட்டுகின்றது.

இந்த முறையிலே கம்பனை ஆராய்ந்தால் அவன் பெருமையை—அறிவை—உயர்ந்த கருத்தை—கவிதா சக்தியைக் காணமுடியும். இம்முறையிலே கம்பனை நெருங்குவதற்கு ஒரு வழிகாட்டியாக நிற்க வேண்டும் என்பதே இந்நூலின் கருத்து. இக்கருத்து நிறைவேறுமானல் கம்பனைக் கடிவோரும் அவன் அருமையை அறிந்து அமைதி அடைவார்கள்.

அறிஞர்கள் கம்பன் கண்ட தமிழகத்திற்கு ஆதரவளிப்பார்கள் என்பது என் நம்பிக்கை.

| | |
|---|---|
| நெ 9, ஏழாவது தெரு,<br>சவுராஷ்டிர நகர்,<br>சென்னை 24. | அன்பன்<br>**சாமி. சிதம்பரன்**<br>15–10–'55 |



# கம்பன் கண்ட தமிழகம்



## 1. கம்பன் பெருமை

கல்வியிற் சிறந்தவன் கம்பன் என்பது புதுமொழியன்று; தமிழ் நாட்டிலே தொன்று தொட்டு வழங்கும் பழமொழி. சக்கரவர்த்திப் பட்டம் பெற்றவன் கம்பன். கம்ப நாடுடைய வள்ளல் கவிச் சக்கரவர்த்தி என்று பழம் புலவர் ஒருவர் கம்பனைப் பாராட்டினர்.

தமிழ்ப் புலவர்களிலே கவிச் சக்கரவர்த்திப் பட்டம் பெற்றவர்கள் மூவர்; அவர்கள் கம்பர், ஒட்டக் கூத்தர், ஜெயங்கொண்டார் என்பவர்கள். இவர்களில் ஒட்டக் கூத்தரையும், ஜெயங் கொண்டாரையும் 'கவிச் சக்ரவர்த்திகள் என்று அழைப்பவர்கள் இன்றில்லை. கம்பனை மட்டுமே கவிச் சக்கரவர்த்தி என்று அழைக்கின்றனர். இது ஒன்றே கம்பன் பெருமைக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும். இவர்கள் ஏறக்குறைய சம காலத்தினர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

கற்றோர்களின் உள்ளத்தைக் கவரும் வகையிலே காவியம் புனைந்த புலவர்களிலே தலை சிறந்தவன் கம்பன். கம்பனுக்கு இணையான கவிஞன் அவனுக்கு முன்னும் இருந்ததில்லை; இன்றும் இல்லை; பின்னும் தோன்றுவான் என்ற துணிவும் இல்லை. இத்தகைய ஒப்பற்ற உயர்ந்த தமிழ்க் கவிஞன் கம்பன்.

### புலவர்கள் பாராட்டு

புகழ்க் கம்பன் பிறந்த தமிழ் நாடு என்பது புரட்சிப் புலவன்—சிந்தனைக் கவிஞன்—பாரதியின் வாக்கு. பாரதி தன் வாயார மனமாரப் பாராட்டிப் பாடிய தமிழ்ப் புலவர்கள்

மூவர். அவர்கள் கம்பன், வள்ளுவர், இளங்கோ என்பவர்கள்.

யாம் அறிந்த புலவரிலே கம்பனைப்போல்,
வள்ளுவர்போல், இளங்கோவைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை ;
உண்மை ; வெறும் புகழ்ச்சியில்லை.

என்று இம் மூன்று புலவர்களையும் முழு மனத்தோடு பாராட்டினன் பாரதி. இம் மூவரிலே முதலில் நிற்பவன் கம்பன்.

பாரதி பிறப்பதற்குப் பல நூற்றுண்டுகளுக்கு முன்பே கம்பன் கவிஞர்களால் பாராட்டப் பட்டான்.

கம்பநாடன் கவிதையைப் போல்
கற்ருேர்க்கு இதயம் களியாதே.

என்பது ஒரு பழந்தமிழ்ப் புலவர் பாட்டு. கம்பன் கவியைப் படிப்பவர்க்குத்தான் அதன் அருமை தெரியும். தமிழின் அருமையை அறிந்தவர்—இனிமையை உணர்ந்தவர்—கம்பன் கவிதையிலே ஈடுபட்டால் கவலைகளையெல்லாம் மறந்து விடுவர் ; களிப்புக் கடலிலே நீந்தி விளையாடுவர். உள்ளத்திலே கவிச் சுவையைப் பாய்ச்சிக் களிப்பூட்டுவதிலே கம்பன் கவிக்கு நிகர் கம்பன் கவியேதான். மேலே காட்டிய பழந் தமிழ்ப் பாட்டின் பகுதி இவ்வுண்மையை உணர்த்தும்.

கம்பன் புலமையை விளக்க மற்ருெரு பழமொழியும் வழங்குகின்றது. கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும் என்பதுதான் அப்பழமொழி.

கம்பனுடன் தொடர்பு கொண்டவர்கள் அனைவரும் கவிஞர் ஆகிவிடுவார். கம்பன் வீட்டிலே வாழ்கின்றவர்கள் எல்லோரும் இனிய தமிழ்க் கவிஞர்கள். எல்லோருக்கும் நல்ல தமிழ் அறிவையும், சிறந்த கவி உணர்ச்சியையும் உண்டாக்குவதிலே வல்லவன் கம்பன். இவ்வுண்மையை விளக்குவதுதான் இப்பழமொழி. இதை ஒரு பழந்தமிழ்ச் செய்யுள் எடுத்துப் பாராட்டியுள்ளது.

"அரும்பெரும் சொற்சுவை யுணரும் புலவர்களே! கம்பர் வீட்டிலேயுள்ள ஒரு சிறிய கட்டுத்தறியும் கவிதை பாடும்; இவ்வுலகில் உள்ள மக்கள் அனைவரும் இவ்வாறு கூறுகின்றனர். இதைக் கேட்டு நாம் மகிழ்ச்சியடைந் தோம்."

கம்பர் வீட்டுள் ஒரு சிறு புன்
கட்டுத்தறியும் கவிசெயும் என்று
இம்பர்நாட்டு மன்பதை கூறும்;
இரும்சொல், புலவீர்கேட்டு உவந்தாம்.

இதுவே அத்தமிழ்ச் செய்யுள். கம்பன் காவியத்திலே ஈடு பட்டோர் கவிதை பாடும் வல்லமை பெறுவர் என்ற கருத் தும் இதில் அடக்கம். கம்பன் காலத்திலே தமிழ் மொழி வளர்ச்சியடைந்திருந்தது; கம்பன் தமிழ் வளர்ச்சிக்காகத் தன் வாழ் நாள் முழுவதும் உழைத்தான்; தன்னைச் சேர்ந் தவர்களுக்கெல்லாம் தமிழ் மொழியைக் கற்றுக் கொடுப் பதிலே அலுப்படையாமல் ஆர்வம் கொண்டிருந்தான்; இவ்வுண்மையையும் இப்பாட்டு நமக்குக் காட்டுகின்றது.

## இணையற்ற இலக்கியம்

கம்பன் கவிதை—காவியம்—இணையற்ற இலக்கியச் சிறப்புள்ளது. தமிழ் நாட்டிலே கம்ப ராமாயணத்தைப் பற்றியே சொற்பொழிவாற்றி வாழ்ந்த தமிழ்ப் புலவர்கள் பலர் இருந்தனர். இவர்களுக்குக் கம்ப ராமாயணப் பிரசங் கிகள் என்றே பெயர்.

இவர்கள் கற்றவர்களும், மற்றவர்களும் நிறைந்த கழ கங்களிலே கம்ப ராமாயணத்தைப் பற்றிப் பேசுவார்கள். கம்பன் கவிதைகளில் உள்ள கற்பனைகள், கருத்துக்கள், உவமைகள், சொல் நயம், பொருள் நயங்கள் இவைகளைப் பற்றி எடுத்துக் கூறுவார்கள். இவர்கள் சொற்பொழிவு எல்லா மக்கள் மனத்திலும் இன்பத் தேனைப் பாய்ச்சும். கம்பன் கவிதையைப்பற்றி இவ்வாறு சொற்பொழி வாற்று வதையே பரம்பரைத் தொழிலாகக் கொண்ட புலவர்கள் தமிழகத்திலே பலர் இருந்தனர்.

தமிழகத்தில் பல நூற்றுண்டுகளாகக் கம்ப ராமாயணச் சொற்பொழிவுகள் நடைபெற்று வந்தன. எல்லா மக்க

ளிடமும் இனிய தமிழ்ப்பற்றை வளர்ப்பதற்கே கம்ப ராமாயணம் பயன்பட்டு வந்தது ; கம்பன் கவிதையை—காவியத்தைக் கேட்டோர் அனைவரும் அதனை அரிய தமிழ் இலக்கியமாகவே போற்றிப் பாராட்டி வந்தனர்.

இராம பக்தியிலே ஈடுபட்டவர்கள் பெரும்பாலும் வான்மீகி ராமாயண காலட்சேபங்களையே கேட்டுவந்தனர். கம்ப ராமாயணம் பெரும்பாலும் இலக்கிய ஆராய்ச்சியாகவே வழங்கிவந்தது ; காலட்சேபமாக நடைபெற்றது சிறிய அளவில்தான்.

கம்பன் காவியம் தமிழ் நாடெங்கும் பரவியதோடு மட்டும் நிற்கவில்லை. வெளி நாடுகளிலும் அவன் கவிதையின் புகழ் பரந்தது. இன்றும் தொலை கிழக்கு நாடுகளிலே அவன் காவியக் கருத்துக்கள் புகுந்து நிலைத்திருக்கின்றன. தூரக் கிழக்கு நாடுகளில் வழங்கும் இராமாயணக் கதைகள் கம்பன் காவியத்தையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன.

தூரக் கிழக்கு நாடுகளிலேயுள்ள கோவில்களின் தூண்களிலே இராமாயணக் கதைகள் சிற்பமாகச் செதுக்கப்பட்டிருக்கின்றன ; சுவர்களிலே ஓவியங்களாக வரையப்பட்டிருக்கின்றன. அவைகள் எல்லாம் கம்பன் காவியத்தை அடிப்படையாகக் கொண்டவைகள்.

இதனால் இராமாயணக் கதை பல நாட்டினரும் பாராட்டிப் போற்றும் ஒரு சிறந்த வரலாறாக வழங்கியிருந்தது என்ற உண்மையை அறியலாம்.

கம்பன் தன்னுடைய இராமாயணத்திற்கு **இராமாவதாரம்** என்று பெயர்வைத்தான். ஆனால், யாரும் அவன் விருப்பப்படி இராமாவதாரம் என்று வழங்குவதில்லை. கம்பனுக்குப் பெருமை கொடுக்கும் வகையிலே **கம்ப ராமாயணம்** என்றே வழங்கிவந்தனர்.

கம்ப ராமாயணம் என்னும் இப்பெயர். அதன் தனிச் சிறப்பை விளக்கும். வால்மீகி ராமாயணம் உண்டு ; பௌத்தராமாயணம் உண்டு ; சமண ராமாயணம் உண்டு; இன்னும் பல ராமாயணங்களும் இருக்கின்றன. அவை

களுக்கு இல்லாத தனிச்சிறப்பு கம்பன் பாடிய இராமா யணத்திற்கு உண்டு. கம்பன் சூட்டிய இராமாவதாரம் என்ற பெயர் உலக வழக்கில் இல்லை. செய்யுள் வழக்கில் மட்டும் இருக்கின்றது. இதற்குமாருகக் கம்பன் புனைந்து பாடிய இராமாயணம் என்ற பொருளில் கம்ப ராமாயணம் என்ற பெயரே நின்று நிலவுகின்றது.

கம்பன் காலத்திலே தமிழகத்திலே ஐம் பெருங்காவி யங்கள் வழக்கிலிருந்தன. சீவக சிந்தாமணி, குண்டலகேசி, வளையாபதி, சிலப்பதிகாரம். மணிமேகலை என்பன ஐம் பெரும் காப்பியங்கள். ஐம் பெருங் காப்பியங்களுக்குப் பின்னே தோன்றியவை ஐஞ்சிறு காப்பியங்கள். அவைகள் சூளா மணி, உதயணகாவியம், நீலகேசி, நாககுமார காவியம், யசோதர காவியம் என்பன. இக்காவியங்களில் சூளாமணி கம்பர் காலத்தில் வழங்கிய ஐஞ்சிறு காவியங்களில் ஒன்று.

## கம்பன் காலக் காவியங்கள்

ஐம்பெரும் காப்பியங்களிலே சிவக சிந்தாமணி, குண் டலகேசி, வளையாபதி மூன்றும் மொழி பெயர்ப்பு நூல்கள். இவை மூன்றும் சமண மதக் கொள்கைகளைப் பரப்பும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டவை. சிலப்பதிகார மும், மணிமேகலையும் மட்டும் தமிழ் நாட்டு வரலாற்றை அடிப்படை யாகக் கொண்டவை இவை இரண்டும் முதல் நூல்கள்; முன்னைய மூன்றும் வழி நூல்கள்.

வழி நூல்களாகிய மூன்று பெருங் காவியங்களிலே இரண்டு மறைந்துவிட்டன. சிவக சிந்தாமணி ஒன்று மட்டுமே புலவர்களுக்கு அமுதமாய்ப் புகழ்பெற்று விளங்கு கின்றது. சிறந்த கவிச்சுவை நிரம்பியிருக்கும் காரணத் தால்தான் சிந்தாமணி நந்தா விளக்காகச் சுடர்விட்டு நிற்கின்றது. கவிச்சுவையற்ற காரணத்தால்தான் குண்டலகேசியும், வளையாபதியும், மறைந்துவிட்டன என்று கருதலாம்.

சிலப்பதிகாரம் சமணமதக் கொள்கையை வலி யுறுத்துவது; ஆயினும் மதக் கொள்கைகளைவிட, அரசி யல் நீதிகளும், தமிழர் பண்பும், கவிச்சுவையும், காவியச் சுவையும் நிறைந்திருக்கின்றன. தமிழ இலக்கியத்தின்

தனிப்பெருஞ் சிறப்பின் தலைமணியாகத் திகழ்வது சிலப்பதிகாரம். ஆதலால் அது கற்போர் "நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம்" என்று கவிஞர் புகழக் கதிர்விட்டு நிற்கின்றது. மணிமேகலை முழுக்க முழுக்க பௌத்தமதக் கொள்கைகளை வலியுறுத்துவது; அதுவும் சிறந்த செந்தமிழ்ச் சோலையாகும்.

ஐஞ்சிறு காப்பியங்கள் அனைத்தும் மொழி பெயர்ப்பு நூல்களே. இவற்றுள் சூளாமணி ஒன்றே காலத்தால் முற்பட்டது; கம்பன் காலத்தில் நின்று நிலவியது; இந்நூலின் செய்யுட்கள் சிறந்தவை; இனிமையானவை; சிந்தாமணிச் செய்யுட்களுக்கு ஒப்பானவை; கம்பன் கருத்தைக் கவர்ந்தவை. இச்செய்யுட்களைப் பின்பற்றிக் கம்பன் பல பாடல்களைப் பாடியிருக்கின்றான்.

கம்பன் காலத்திலே பாரதமாகிய பெருங் காவியமும் தமிழிலே வழங்கியிருந்தது; அக்காலத்திலே வழங்கிய பாரதம் பெருந்தேவனார் பாரதமாகும். அது வெண்பா வடிவில் செய்யப்பட்டது. இராமாயணக் கதையும் தமிழிலே வழங்கி வந்தது. ஆசிரியப் பாவினாலும், வெண்பாவினாலும் இராமாயண நூல்களும் இருந்தன. இவைகள் கம்பன் காலததில் முழு உருவில் வழங்கிவந்தன என்று கூறமுடியாது.

பெரிய புராணம் என்னும் நூலும் கம்பர் காலத்திற்குச் சிறிது முன்பு தோன்றி நிலவியிருந்தது.

இவைகளைக்கொண்டு கம்பன் காலத்தில் இருந்த தமிழ் மக்கள் கவிச்சுவை நிறந்த காவியங்களைப் படிப்பதிலே ஆவல்கொண்டிருந்தனர் என்பதை அறியலாம். தமிழ் நாட்டில் அக்காலத்தில் வழக்கிலிருந்த காவியங்கள் மக்களின் ஆசையை நிறைவேற்றும் அளவுக்குப் போதுமானவைகளாக இல்லை. சிந்தாமணியைத் தவிர, சிலப்பதிகாரத்தைத் தவிர, சூளாமணியைத் தவிர ஏனைய காவியங்கள் கருத்தைக் கவரும் கவிச்சுவை நிறைந்தவை அல்ல. பெரிய புராணம் காவியமாகாமல் சமய நூலாகவே போற்றப்பட்டது.

மக்களின் இந்த மனோநிலையையறிந்த கம்பன் ஒரு மகா காவியத்தைப்பாடி மன்பதைக்கு மகிழ்ச்சியூட்ட எண்ணினான். ஆதலால் கம்பன் தானே தான் இராமாயணத்தைப் பாட முடிவு செய்திருக்கவேண்டும்; பிறர் வேண்டுகோளின்படியோ—பிறர் உத்தரவுக்குக் கீழ்ப்படிந்தோ பாடியிருக்க முடியாது. "சடையப்ப வள்ளலின் வேண்டுகோளுக்காகக் கம்பன் இராமாயணம் பாடினான்; குலோத்துங்க சோழன் கட்டளைக்குக் கிழ்ப்படிந்து இராமாயணம் பாடினான்" என்று கதைகள் வழங்குகின்றன. இக்கதைகள் உண்மையானவைகளாக இருக்க முடியாது.

எச்செயலானாலும் தானே முழுமனத்தோடு—ஊக்கமுடன்—செய்யும் செயல்தான் சிறந்த வெற்றிபெறும்; உள்ளத்தில் உணர்ச்சியில்லாமல்—ஊக்கமில்லாமல் பிறர் வலியுறுத்தலுக்காகச் செய்யப்படும் செயல் சிறப்படையாது. உள்ளத்திலே உணர்ச்சியில்லாமல் எழுதப்படும் எழுத்திலே உயிரோட்டம் இராது. பிறரால் தூண்டப்படாமல்—தானே துள்ளியெழுந்த உள்ளத்துடன் எழுதப்படும் கவிதைகளிலே—காவியங்களிலே—கதைகளிலே—கட்டுரைகளிலே தான் உயிர்த்துடிப்பிருக்கும்.

கம்பன் பிறர் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து — பொருளுக்கோ புகழுக்கோ ஆசைப்பட்டு—இராமாயணத்தைப் பாடி யிருப்பானாயின், அது ஒரு செத்த காவியமாகவே போயிருக்கும். இன்றிருப்பதுபோல் உலகப் புகழ்பெற்ற—ஒப்பற்ற— உயிர்க் காவியமாக நின்று நிலவாது.

> ஆசைபற்றி அறையல் உற்றேன் மற்றுஇக்
> காசுஇல் கொற்றத்து இராமன் கதை அரோ.

என்று கம்பனே சொல்லிவிட்டான். "யாருடைய தூண்டுதலாலும் நான் இராமாயணத்தைப் பாடவில்லை. குற்றமற்ற வெற்றியையுடைய இராமன் வரலாற்றில் உள்ள ஆசையால்—அதைத் தமிழ் மக்கள் படிக்கும்படி இனிய சொற்சுவைக் காவியமாகச் செய்து தரவேண்டும் என்ற ஆசையால்—நானே தான் பாடினேன்" என்று விளக்கமாகச் சொல்லிவிட்டான்.

**கம்பனைப்பற்றி**

கம்பன் சோழ நாட்டிலே வாழ்ந்தவன். தேரழுந்தூரிலே இருந்தவன். தேரழுந்தூருக்குச் சிறிது தொலைவிலே இருந்த வெண்ணெய் நல்லூரிலே வாழ்ந்த சடையப்ப வள்ளல் என்னும் பெருநிலக் கிழவரின் ஆதரவு பெற்றவன். மன்னர்களாலும், கவிஞர்களாலும் மதிக்கப்பட்டவன். இவ்வளவுக்குத்தான் அவனுடைய உண்மை வரலாற்றை உணர முடிகின்றது.

ஆதித்தன் குலத்திலே பிறந்தவன்; ஓச்சன் குடியிலே வளர்ந்தவன்; கம்ப நாட்டிலே செல்வத்தோடு வாழ்ந்தவன்; என்று அவன் பிறப்பைப்பற்றிப் பலவாறு கூறுவோர் உண்டு.

கம்பன் பிறந்தபோது ஒரு கம்பத்தின் அடியிலே கிடத்தப்பட்டான்; அவன் கையிலே கம்பு வைத்திருந்தான்; அவன் இளம் வயதிலே கம்பங் கொல்லையைக் காத்திருந்தான்; ஆதலால் கம்பன் என்று பெயர் பெற்ருன்; என்று கூறுவோரும் உண்டு. ஏகம்பன் என்பது சிவபெருமான் பெயர். ஏ, என்ற எழுத்து மறைந்து கம்பன் என்ற பெயர் மட்டும் நிலைத்தது என்று உரைப்போரும் உண்டு.

கம்பன் என்பது காரணப்பெயர் அன்று; கம்பனுடைய இயற்பெயர் கம்பன்தான். தமிழ் நாட்டிலே கம்பன் என்று பெயர் வைக்கும் வழக்கம் உண்டு என்று கல் வெட்டுக்களால் தெரிகின்றது. ஆதலால் கம்பன் என்பதைக் காரணப் பெயராகக் கொள்ளாமல் இயற்பெயர்—அதாவது இடுகுறிப் பெயராகக் கொள்ளுவதே ஏற்றதாகும்.

கம்பன் வெண்ணெய்நல்லூரிலே தங்கி இருந்து இராமாயணம் பாடினன். அவன் இக்காவியத்தைப் பாடும்போது, அவனுக்கு எக்கவலையும் தோன்ருமல் சடையப்ப வள்ளல் உதவிசெய்து வந்தார்.

**தோமறு மாக்கதை,**
**சடையன் வெண்ணெய் நல்லூர்**
**வயின் தந்ததே.**

என்பது கம்பன் வாக்கு. "சடையப்ப வள்ளல் வாழ்ந்த வெண்ணெய்நல்லூரிலே உறைந்து, குற்றமற்ற இப் பெருங் காவியத்தைப் பாடி முடித்தேன்" என்பதே இதன் பொருள்.

இக் காவியம் சீரங்கத்திலே திருவரங்கப் பெருமாள் முன்னிலையிலே அரங்கேற்பட்டதாகும்.

எண்ணிய சகாத்தம் எண்ணூற்று
ஏழின்மேல், சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர்
நன்னிலே, கம்ப நாடன்
பண்ணிய இராம காதை,
பங்குனி, அத்த நாளில்,
கண்ணிய அரங்கர் முன்னே
கவி அரங் கேற்றினனே.

என்ற தனிச் செய்யுள் இவ் வரலாற்றை விளக்கும். "சடையப்ப வள்ளல் சிறந்து வாழ்ந்த வெண்ணெய் நல்லூரிலே இருந்து, எண்ணப்பட்ட நூற்றுண்டு எண்ணூற்றேழிலே செய்த இராமகாதை; பங்குனி மாதம், அத்த நட்சத்திரத்திலே, சிறந்த அரங்கநாதர் முன்னிலையிலே, கவிஞனுகிய கம்பன் அரங்கேற்றினன்" என்பதே இப் பாடலின் பொருள்.

## அழியாத இலக்கியம்

கம்பன் இராமாயணத்தைப் பன்னீராயிரம் பாடல்களால் பாடிமுடித்தான் என்பர். இன்று அச்சிடப்பட்டுள்ள இராமாயணங்களிலே—ம. சண்முகம் பிள்ளை அவர்களால் பரிசோதித்து அச்சிடப்பட்டுள்ள இராமாயணத்திலே 12097 பாடல்கள் இருக்கின்றன. ஏழு காண்டங்களிலும் உள்ள பாடல்களின் எண்ணிக்கை யிதுவாகும். ஏழாவது காண்டமாகிய உத்தர காண்டமும் கம்பனுல் பாடப்பெற்றதென்றே குறிப்பிடப்பட்டுள்ளது.

கம்பன் உத்தர காண்டம் பாடவில்லை; பால காண்டம். அயோத்தியா காண்டம், ஆரண்ய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம் என்னும் ஆறு காண்டங்களை

மட்டுமே பாடினன்; இவைகளைப் பதினுயிரம் கவிகளிலே பாடி முடித்தான்; என்பர். கம்பனைப் பற்றி வழங்கும் கதைகளும் இவ்வுண்மையை வலியுறுத்துகின்றன. உத்தர காண்டப் பாடல்கள் ஏனைய ஆறு காண்டப் பாடல்களைப்போல் அவ்வளவு சுவையுள்ள பாடல்களாக இல்லை என்பதும் இவ் வுண்மையை விளக்கும்.

கம்பன் பாடிய ஆறு காண்டங்களிலே இன்றுள்ள பாடல்கள் 10587 ஆகும். இவ்வெண் ம. சண்முகம் பிள்ளை பதிப்பில் கண்டவை.

கம்பன்மீது இன்று சிலர் காய்ந்து விழுகின்றனர். தமிழின் சிறப்பைத் தரணியிலே விளக்கி நிற்கும் இக் காவியத்தைக் கொளுத்த வேண்டும் என்றுகூடச் சிலர் கூறுகின்றனர். கம்பன் காவியத்தைக் கையினல் தொடக்கூடாது என்றும் பேசுகின்றனர்.

சிறந்த காவியங்கள்—உயர்ந்த இலக்கியங்கள்—எந்தக் காலத்திலும் மக்கள் உள்ளத்திலிருந்து ஓடிப்போய்விட மாட்டா. அவைகளை அழிக்க முயன்றவர்கள் யாரா யினும் வெற்றிகாணமாட்டார்கள். இந்த உண்மையை நாம் தமிழ் இலக்கிய வரலாற்றிலே காணலாம்.

தமிழ் இலக்கியங்களிலே சீவக சிந்தாமணி ஒரு சிறந்த காவியம். அது சமணமத காவியம். ஆயினும் அதன் கவிச்சுவை கருதித் தமிழ் நாட்டினர் அனைவரும் அந் நூலைப் பாராட்டி வந்தனர். மன்னர்களுடைய சபை களிலே சிந்தாமணியைப் பற்றிப் புலவர்கள் சொற்பொழி வாற்றி வந்தனர். மதபேதமில்லாமல் சைவர்கள், வைண வர்கள், பௌத்தர்கள், சமணர்கள் அனைவரும் அந் நூலின் தமிழ்ச் சுவையை நுகர்ந்து வந்தனர்.

சைவ மதத்திலே பற்றுக்கொண்ட சேக்கிழார் சிந்தாமணிக்கு நிகராக சைவ காவியம் ஒன்று இருக்க வேண்டும் என்று எண்ணினர். தமிழ் மக்கள் சமண காவியத்தைக் கற்பதை விட்டுச் சைவ காவியத்தைக் கற்க வேண்டும் என்று கருதினர். இதற்காகப் பெரிய புராணத்தை இயற்றினர். சோழ மன்னன் அவையிலே

நாள்தோறும் நடைபெற்ற இலக்கியச் சொற்பொழிவாகிய சிந்தாமணிச் சொற்பொழிவை நிறுத்தும்படி செய்தார். பெரிய புராணச் சொற்பொழிவு நடைபெறச் செய்தார். இவ் வரலாற்றை உமாபதி சிவாச்சாரியார் இயற்றிய சேக்கிழார் புராணம் கூறுகின்றது.

மதப்பற்றுக் காரணமாகச் சிந்தாமணி வெறுக்கப் பட்டாலும் அதன் மாண்பு சிதறிவிடவில்லை; சிந்தாமணிக்கு எதிராகப் பெரிய புராணம் பிறந்தாலும் அதன் பெருமை அழிந்துவிடவில்லை. கவிச் சுவை பொருந்திய சிறந்த நூலாகவே அது சிறந்து நிற்கின்றது. தமிழ் கற்ற அறிஞர் அனைவரும் அந் நூலின் இனிமையை நுகர்ந்து இன்புறுகின்றனர்.

கம்ப இராமாயணம் தமிழ் நாட்டிலே சிறந்த இலக்கியமாகப் பரந்து வருவதைக் கண்டு அந்தக் காலத்திலேயே சைவப் புலவர்களிலே சிலர் பொறாமை கொண்டனர். இராமாயணம் வைணவ காவியம்; அதற்கு எதிராகச் சைவ காவியம் ஒன்றைப் பாடவேண்டும் என்று எண்ணினர். இவ்வெண்ணத்தின் காரணமாகவே கந்த புராணம் தமிழிலே பாடப்பட்டது. உருவத்திலும் கம்பன் காவியத்தைப்போல் இருக்கும்படி பத்தாயிரம் பாடல்களிலே கந்த புராணம் பாடப்பட்டது. இன்று அச்சிடப்பட்டுள்ள கந்த புராணத்திலே 10300 செய்யுட்கள் இருக்கின்றன. இதைப் பாடிய ஆசிரியர் கச்சியப்பசிவாச்சாரியார் என்பவர், காஞ்சி நகரிலே வாழ்ந்தவர்.

கந்தபுராணக் கதையும், இராமயணக் கதையும் ஏறக் குறைய ஒரே போக்கில் உள்ளவை. இரண்டையும் படிப்போர் கந்த புராணத்திலிருந்து இராமாயணம் பிறந்ததா? இராமாய்ணத்திலிருந்து கந்த புராணம் பிறந்ததா? என்ற ஐயத்திலே அகப்பட்டுத் தவிப்பார்கள்.

கம்பனுக்குப் போட்டியாகக் கந்த புராணம் தமிழிலே பாடப்பட்டாலும், கம்பன் பெருமை மங்கிவிடவில்லை; அவன் கவிதை வளம் குன்றிவிடவில்லை. முருகனிடத்திலே அன்புள்ளவர்கள் கந்த புராணத்தைப்

படித்து இன்புறுகின்றனர். சிந்தாமணியைப் போல்—கம்பனைப்போல்—எல்லா மதத்தினராலும் படித்துக் கவி யின்பம் நுகரும் நூலாகக் கந்த புராணம் விளங்கவில்லை.

உயிரோவியமாகச் சிறந்து விளங்கும் இலக்கியங்கள் ஒருநாளும் அழிந்துபோக மாட்டா. அவைகளை அழிக்க எவ்வளவுதான் முயன்றாலும் அம் முயற்சி வீண் முயற்சி யாகவே முடியும்; இவ்வுண்மையை மேலேகண்ட வரலாறுகள் மெய்ப்பிக்கும்.



# 2. கம்பன் காலத் தமிழகம்

கம்பன் காலத்திலே தமிழகம் எப்படி யிருந்தது? தமிழ் மக்களின் சமுதாய வாழ்க்கை எப்படி யிருந்தது? தமிழர்களின் மனப்பான்மை என்ன? பெரும்பாலான தமிழர்கள் அக்காலத்தில் விரும்பியது என்ன? இவை களைத் தெரிந்துகொள்ள வேண்டும். இவைகளைப் பற்றித் தெரிந்துகொண்டால் இராமாயணக் கதையைக் கம்பன் விரும்பியது ஏன்? அதனைச் சிந்தைக்கும், செவிக்கும் இனிமை யூட்டும் பெருங் காவியமாகப் பாடியது ஏன்? என்ற உண்மைகள் விளங்கும்.

## கதையும் கருத்தும்

எந்தக் காலத்திலும் கதைகளைக் கேட்பதிலே மக்களுக்கு ஆர்வம் அதிகம். நகை, அழுகை, இழிவு, வியப்பு, அச்சம், வீரம், வெகுளி, உவகை, கருணை முதலிய நவரசம் பொருந்திய கதைகளைக் கேட்பதிலே அனைவருக்கும் ஆசையுண்டு.

கதைகளின் வாயிலாக மக்கள் அறிவை வளர்க்க முடியும். மக்களிடம் வீர உணர்ச்சியை ஊட்டலாம்; நாட்டுப் பற்றைப் பெருக்கலாம்; இரக்கம், அன்பு, ஒற்றுமை முதலிய நல்லொழுக்கங்களை வளர்க்கலாம். உண்மை வரலாறுகளாயினும் சரி, கட்டுக் கதைகளா யினும் சரி மக்கள் மனதைக் க்வரும் வகையிலே எழுதப் பட்டால் அவைகளால் மக்கள் நன்மையடைவார்கள்.

நமது முன்னோர்கள் கதைகளின் மூலம் பொது மக்களுக்கு ஏற்படும் நன்மையை அறிந்திருந்தனர். ஆகையால்தான் கதை உருவிலே இதிகாசங்கள், புராணங்கள், காவியங்கள் எழுதி வந்தனர். கட்டுப் பாட்டை மீறி நடப்பவர்கள் தண்டனைக்கு ஆளாவார்கள்; நீதிமுறையிலே தவறாதவர்கள் நிலைத்த புகழுடன் விளங் குவார்கள்; கல்வி, செல்வம், செல்வாக்கு முதலிய வற்றிலே எவ்வளவுதான் சிறந்திருந்தாலும் அடாத

வற்றைச் செய்பவர்கள் அழிந்தே போவார்கள்; நீதியிலும், ஒழுக்கத்திலும் நிற்பவர்கள் எவ்வளவு தொல்லைக்கு ஆளானாலும் இறுதியில் இன்பமும், புகழும் பெறுவார்கள். இவ்வுண்மைகளைக் கதைகளின் மூலம் காட்டி வந்தார்கள்.

சமுதாயக் கட்டுப்பாட்டைச் சிதைப்பவன் அக்கிரமக்காரன்; சமுதாயக் கட்டுப்பாட்டை அழியாமல் காப்பாற்றுகின்றவன் அனைவராலும் போற்றப்படுவான். அறநூற் கொள்கைக்குப் புறம்பாக நடப்பவன் யாராயினும் தூற்றப்படுவான்; அறநூற் கொள்கைகளைப் பின்பற்றி நடப்பவன் மனிதனாயினும் மக்களால் தெய்வமாகப் போற்றப்படுவான். நாட்டை ஆளுபவர்கள் தந்நலத்தைக் குறிக்கோளாகக் கொண்டு குடிகளைத் துன்புறுத்துவார்களாயின் அவர்கள் கொடுங்கோலர்கள். மக்கள் துன்பத்தைப் போக்கி அவர்களை இன்புறச் செய்வதே கடமை என்று எண்ணி நாட்டை ஆளுகின்றவர்களே சிறந்த செங்கோலர்கள்; உயர்ந்த வீரர்கள்; சிறந்த அறிஞர்கள்; ஒப்பற்ற தியாகிகள். இத்தகைய நீதிகளைக் கதைகளிலே அமைத்து எழுதினர்கள். இக்கதைகளை மக்களும் விரும்பிப் படித்தனர்.

மதப் பற்றும், தெய்வப் பற்றும் மக்களிடம் தலை தூக்கிநின்ற காலத்தில் கதைகளின் மூலம் இவைகளை மக்களுக்குப் போதித்து வந்தனர். மக்களிடம் உள்ள தெய்வ பக்தியையும், மத பக்தியையும் வலுபடுத்தக் கதைகளிலே பல உறுப்புக்களை அமைத்தனர். தெய்வ—மத பக்தியுள்ளவர்களை நல்லவர்களாக—உயர்ந்த ஒழுக்கமுள்ளவர்களாக— வீரர்களாக—அறிஞர்களாக—குருமார்களாகச் சித்திரித்தனர்; அவர்களைச் சிறந்த மகான்களாக—அவதார புருஷர்களாகக் காட்டினர். தெய்வ பக்தியும், மத பக்தியும் உள்ளவர்களையே தெய்வ தண்டனைக்கு அஞ்சி அறத்தைப் பின்பற்றி நடப்பவர்களாகக் குறித்தனர்.

தெய்வ பக்தி அற்றவர்களை—மத பக்தி அற்றவர்களை—கொடுமையின் உருவமாகக் கற்பனை செய்தனர்.

அவர்கள் காமுகர்கள்—சமுதாயச் சட்டத்தை மதிக்காத வர்கள்—தங்கள் நன்மை ஒன்றையே குறியாகக் கொண்ட வர்கள்—தம் இன்பத்திற்காக எத்தகைய கொடுமையையும் செய்வார்கள்; யாரையும் பலி கொடுப்பார்கள்.—என்று காவியங்களிலும், கதைகளிலும் எழுதினர்கள்.

## இராமாயணம் பாடியது ஏன்?

மனித சமுதாயத்தை ஒழுங்கு படுத்தும் உயர்ந்த எண்ணத்துடன் எழுதப்பட்ட இக்கதைகளை நல்ல சொல்நயமும், பொருள்நயமும் பொருந்திய கவிதைகளிலே எழுதினர். இதையே இயற்றமிழ் என்று கூறினர். இவைகளைப் பண்ணுடன் பக்க வாத்தியங்களுடன் பாடும் வகையிலே எளிய, இனிய தமிழிலேயும் எழுதினர். இது இசைத் தமிழ் என்று பெயர் பெற்றது. இவைகளை மேடைகளிலே நடித்துக் காட்டினர். இது நாடகத் தமிழ் என்று பெயர் பெற்றது. இவ்வாறு இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழும் வளர்ந்து வந்த காலத்திலே தான் கம்பன் வாழ்ந்தான்.

நல்ல நோக்கத்துடன் எழுந்த கதைகளும், இதிகாசங் களும், புராணங்களும் கம்பன் காலத்திலே மக்களிடை யிலே மதிப்புப் பெற்றிருந்தன. படிக்காத பொது மக்களும் இத்தகைய வரலாறுகளை—கற்பனைச் சித்திரங் களை—கேட்பதிலே காதல் கொண்டிருந்தனர். அவர்கள் படித்தவர்களானாலும் சரி, படிக்காதவர்களானாலும் சரி தாங்கள் படித்த கதைகளை—கேட்ட கதைகளை—பிறருக் குச் சொல்லுவதிலேயும் ஆசை கொண்டிருந்தனர்.

இந்தச் சூழ்நிலைதான் கம்பனை ஒரு காவியத்தைச் செய்யும் துறையிலே இழுத்துச் சென்றது. அவன் இராமாயண காவியத்தைப் பாடும் முயற்சியிலே ஈடுபட்ட தற்கு இது முதற்காரணமாகும்.

கம்பன் காலத்திலே வழக்கிலிருந்த நூல்களையும் அறிஞர்கள் படித்துப் பாராட்டிக் கொண்டுதான் இருந் தனர். ஆயினும் அக்காலக் காவியங்கள் எல்லாம் சமண—பவுத்த மதக் கொள்கைகளை வலியுறுத்துவன என்பதை மறந்துவிடக் கூடாது.

கம்பன் காலத்திலே தமிழ் நாட்டிலே சமண—பவுத்த மதங்களின் செல்வாக்குக் குறைந்து விட்டது. அம் மதங்களைப் பெரும்பாலான தமிழர்கள் வெறுக்கவும் தொடங்கினர். சைவ, வைணவ மதங்களே தமிழ் மக்களால் பாராட்டப்பட்டு வந்தன. தமிழின் சுவை கருதி மட்டுந் தான் ஐம்பெருங் காப்பியங்களைப் படித்தார்கள். அவை களின் கொள்கைகளிலே அவர்களுக்குப் பற்றுதல் இல்லை. அவர்கள் சைவ, வைணவக் கொள்கைகளைக் கொண்ட சிறந்த காவியங்களும், கவிதைகளும் வேண்டும் என்று விரும்பினர். இவ் விருப்பத்தின் காரணமாகவே பெரிய புராணம் எழுந்தது. மக்களின் இத்தகைய ஆசையை நிறைவேற்றவே கம்பன் இராமர்யணத்தைப் பாடினான். இது இரண்டாவது காரணம்.

கம்பன் காலத்திலே அறிஞர்களின் உள்ளத்தைக் கவரும் உயர்ந்த சுவையுள்ள இனிய செந்தமிழ்ப் பெருங் காவியம் ஒன்றும் இல்லை. ஐம்பெருங் காப்பியங்கள் கருத்தில் பெருங் காப்பியங்களாக இருக்கலாம். உருவத் தில் பாரதம்போல், இராமாயணம்போல் பெருங் காவியம் அல்ல. அக்காலத்தில் பெருந் தேவனார் பாரதம் வழக்கி லிருந்தாலும், அதன் செய்யுட்கள் அறிஞர்களின் உள்ளத்தைக் கொள்ளைகொள்வனவாக இல்லை. இராமா யண காவியம் தமிழில் ஒரு உருவான காவியமாக வழங்க வில்லை. கம்பன் இராமாயண காவியத்தைப் பாடுவதற்கு இது மூன்றாவது காரணம்.

கம்பன் காலத்திலே தமிழ் நாட்டிலே இராமாயணக் கதை மிகவும் புகழ் பெற்றிருந்தது. இராமாயணக் கதை வெறும் வரலாறாக மட்டும் வழங்கி வரவில்லை; பொழுது போக்குக் கதையாக மட்டும் வழங்கி வரவில்லை. தெய்வத் தன்மை பொருந்திய கதையாக வழங்கிற்று; புண்ணிய கதையாக வழங்கிற்று. அறம் வெல்லுமா? பாவம் வெல்லுமா? நீதி வெல்லுமா? அநீதி வெல்லுமா? தந் நலம் வெற்றி பெறுமா? தியாகம் வெற்றி பெறுமா? என்ற கேள்விகளுக்கு ஏற்ற விடையளிக்கும் கதையாக வழங்கிற்று.

இராமாயணக் கதையிலே ஏதேனும் ஒரு பாகத்தைக் கேட்டாலும் புண்ணியம் உண்டு; அதில் வழங்கும் கதைகளிலே ஏதேனும் ஒரு கதையைக் கேட்டாலும் நன்மையுண்டு; என்று கம்பன் காலத்து மக்கள் நம்பி வந்தனர். இந்த நம்பிக்கை காரணமாக அவர்கள் இராமாயணக் கதையைக் கேட்டும், பாடியும், நடித்தும் வந்தனர். இவ் வுண்மையை இராமாயணத்தைப் புகழ்ந்து பாடி இருக்கும் ஒரு தனிப் பாடலிலே காணலாம்.

"இலங்கையிலே வாழ்ந்தவன் இராவணன்; அவனும் பல போர்களிலே வெற்றி கண்டவன்; அந்த வீரனை வென்றவன் இராமன்; அந்த இராமன் திருமாலின் அவதாரம்; ஆதலால் இராவணனை அவனால் வெல்ல முடிந்தது. இந்தத் திருமால் அவதாரமாகிய இராமனுடைய வீரத்தை எடுத்துக் கூறுவதற்காகவே இராமாயணம் வழங்கி நிற்கின்றது. இந்த இராமாயணத்திலே உள்ள கதைகளிலே ஒரு கதையைப் படித்தாலும் போதும், அக் கதையைப் பிறர் சொல்லக் கேட்டாலும் போதும், உயர்ந்த கதை என்று பாராட்டினாலும் போதும் அவர்கள் நரகம் என்னும் துன்பத்தை அடையவே மாட்டார்கள்" என்று கூறுகிறது அப்பாடல்.

*வென்றிசேர் இலங்கை யானை*
*வென்றமால் வீரம் ஓத,*
*நின்ற ரா மாயணத்தில்,*
*நிகழ்ந்திடு கதைகள் தம்மில்,*
*ஒன்றினைப் படித்தோர் தாமும்*
*உரைத்திடக் கேட்டோர் தாமும்*
*நன்றிது என்றோர் தாமும்*
*நரகம்அது எய்தி டாரே*

இதுவே மேலேகண்ட பொருளமைந்த பாடல்.

"இராமாயணக் கதையைக் கேட்போர் நீதி வழியிலே நடப்பர்; நீதிக்கு மாறானவைகளை நெஞ்சிலே நினைக்க மாட்டார்கள். கட்டுப் பாட்டுக்கு அடங்கி நடந்து வாழ்க்கையிலே களிப்படைவார்கள். வரை துறையற்ற வாழ்க்

கையிலே வீழ்ந்து வசை மொழிக்கும் துன்பத்திற்கும் ஆளாகமாட்டார்கள்." இக்கருத்துக்கள் இப்பாடலில் அமைந்திருப்பதைக் காணலாம். கம்பனும் இக்கருத்தை மதித்துத் தன் கவிதா சக்தியை இராமாயண காவியம் இயற்றுவதிலே காட்டினன். கம்பன் இராமாயணத்தைப் பாடுவதற்கு இது நான்காவது காரணம்.

கம்பன் காலத்திலே தமிழ் நாட்டில் திருக்குறள் சிறந்தவொரு இலக்கியமாகத் திகழ்ந்து நின்றது. மக்கள் அனைவரும் அந்த அறநூலைப் போற்றிப் புகழ்ந்தனர். வாயளவிலேதான் வள்ளுவர் நீதிபோற்றப்பட்டது; செயலி லிலே அதைப் பின்பற்றுவோர் குறைந்து வந்தனர்,

கடவுள் ஒன்றே; ஒழுக்கமே உயர்ந்தது; குடிப்பிறப் பின் பெருமை ஒழுக்கங் கெடுவதனல் குன்றிவிடும். ஒழுக்கமற்றபின் பிறப்பால் உயர்வு தாழ்வு பேசுவது பொருந்தாது. எக்குடியிலே பிறந்தவனுயினும் உயிரினும் உயர்ந்ததாக ஒழுக்கத்தைப் பின்பற்றுவானுயின் அவன் தான் உயர்குடியினனுக எண்ணப்படுவான். இவை போன்ற உயர்ந்த திருக்குறள் நீதிகளைத் தமிழ் மக்கள் பின்பற்றவில்லை. அன்றியும் வள்ளுவர் அறத்தை அடிப் படையாகக்கொண்ட காவியம் ஒன்றும் தமிழிலே இல்லை. இந்த நிலையைக் கண்டான் கம்பன்.

இராமாயணக் கதையின் வாயிலாக வள்ளுவர் வகுத்த நீதியை நிலை நாட்டலாம் என்று நினைத்தான். பிறப்பால் சாதியில்லை, "தக்க இன்ன தகாதன இன்ன" என்று உணர்ந்து நடப்பவர்கள் யாராயினும் அவர்கள் உயர்ந்த மனிதர்கள். அவர்கள் எக்குடியிலே பிறப்பினும் ஏற்றம் உள்ளவர்கள். உயர்குடியிலே பிறந்த அறிஞர்களுடன் ஒன்ருக—ஒரு குடியிலே பிறந்தவர்களாக—எண்ணத் தகுதி வாய்ந்தவர்கள். இக்கொள்கையைத் தமிழ் மக்க ளிடையிலே மீண்டும் நிலவச் செய்யவேண்டும் என்பது கம்பன் கருத்து. இவ்வாறு வள்ளுவர் அறத்தை இராமா யணக் கதையின் வாயிலாகத் தமிழகத்தில் வழங்கச் செய்யலாம் என்று உறுதிகொண்டதே கம்பன் இராமா யணத்தைப் பாடியதற்கு ஐந்தாவது, காரணம்.

ஆரியர் தமிழர் என்ற பிரிவினை கம்பன் காலத்தில் இல்லை. ஆரியர் நாகரிகம் இது; தமிழர் நாகரிகம் இது; என்ற பேச்சும் அவன் காலத்தில் இல்லை. இராமன் சூரிய குலத்தோன்றல்; சோழர்களும் சூரியர் குலத்திலே பிறந்தவர்கள்; சோழர் குலமுன்னோர்களில் ஒருவன் சிபிச் சோழன் என்பவன்; இவன் ஒரு புருவுக்காக அதை விரட்டிவந்த வேடனுக்குத் தன் உடம்பின் சதையை அறுத்து நிறுத்துக் கொடுத்தான். இறுதியில்தானே துலாத்தட்டில் ஏறி நின்றுவிட்டான். இக்கதை தமிழ் இலக்கியங்களிலே காணப்படுகின்றது. இந்தச் சிபிச் சோழன் சிபிச் சக்கரவர்த்தி என்னும் பெயரால் இராமனுடைய குலமுன்னோனாகக் கூறப்படுகின்றான். சிபிச் சோழன் கதையும் சிபிச் சக்கரவர்த்தியின் கதையும் ஒன்றாகவேயிருக்கின்றன. ஆதலால் இராமனைத் தமிழர் மரபைச் சேர்ந்தவன் என்று எண்ணித்தான் கம்பன் இராமாயணத்தைப் பாடினான் என்று கூறுவோர் உண்டு. இதுவும் பொருத்தமாகத்தான் காணப்படுகின்றது.

மக்கள் கருத்தை நிறைவேற்றுவதே ஒரு கவிஞன் கடமை; அவர்கள் விரும்பும் வழியிலே நின்று, பல நல்ல அறங்களை அவர்களுக்கு எடுத்துக் காட்டி, அவர்களைச் சீர்திருத்த முயற்சி செய்வதே—முன் வருவதே—மக்களோடு இணைந்து வாழும் ஒரு மாபெரும் கவிஞன் கடமை. இத்தகைய கடமையையே கம்பன்தான் பாடிய இராமாயணத்தின் வழியாகச் செய்தான். காலத்தின் நிலையறிந்து—மக்களின் மனப்போக்கறிந்து—என்றும் அழியாத இனிய தமிழ்க் காவியம் செய்த கம்பன் பெருமையே பெருமை!



# 3. கம்பனுக்குமுன் இராமாயணம்

"கம்பன் வடநாட்டு இராமனைத் தமிழ் நாட்டிலே தெய்வமாக்கினான்; எல்லா நற்குணங்களும் நிரம்பிய நம்பியாக—உத்தமனாக—விளங்கச்செய்தான்; தென்னாட்டுத் திராவிடனாகிய இராவணனை அரக்கன் ஆக்கினான்; திராவிடர்களையே வானரங்களாகவும் கூறினான். ஆழ்வார் பட்டம் பெறுவதற்கு ஆசைப்பட்டு இப்படிச்செய்தான். இதனால் கம்பநாட்டாழ்வான் என்று பட்டம் பெற்றான்" என்று கம்பனைப் பழிக்கின்றனர் சிலர்.

இவ்வாறு கம்பனைத் தூற்றுவோர் தமிழ் இலக்கியங்களை முற்றும் கற்றவர்கள் அல்லர். தமிழ் இலக்கியங்களைக் கற்று உண்மை உணர்ந்தவர்கள் இவ்வாறு பழிப்பார்களானால் அவர்கள் உள்ளத்திலே தூய்மை இருக்கமுடியாது. வீண் வெறுப்புக் காரணமாகக் கம்பன்மீது பழி சுமத்துகிறவர்கள் என்றுதான் அவர்களைப் பற்றிக் கருத வேண்டும்.

இராமாயணக் கதை கம்பன் தோன்றுவதற்குப் பல நூற்றாண்டுகளுக்குமுன்பே தமிழ் நாட்டில் வழங்கியிருந்தது. தமிழர்கள் அக்கதையைப் பாராட்டினர். இராமன் தெய்வீகத்தன்மையுள்ளவன். இராவணன் கொடுமையின் மாற்றுருவம். இராமனுக்குத் துணை செய்தவர்கள் வானரர்கள். இந்த இராமாயணக் கதை தமிழ் நாட்டிலே வழங்கிவந்தது. இக்கதையையே கற்றவர்களும், மற்றவர்களும் போற்றிப் புகழ்ந்து வந்தனர்.

கம்பன் காலத்துக்கு முன்பே இராமாயணக் கதை நூல் வடிவிலும் இருந்தது. அது ஆசிரியப்பாவிலும், வெண்பாவிலும் அமைந்திருந்தது. பழந்தமிழ் நூல்கள் ஆசிரியப்பாவிலும் வெண்பாவிலுந்தான் ஆக்கப்பட்டன. ஆகையால் இச்செய்யுட்களால் ஆக்கப்பட்டிருந்த இராமாயணம் ஐம்பெருங் காப்பியங்களின் காலத்ததாகவோ, அதற்கு முற்பட்டதாகவோதான் இருந்திருக்கவேண்டும்,

அந்த ஆசிரியப்பா இராமாயணமோ, வெண்பா இராமாயணமோ இப்பொழுது நமக்குக்கிடைக்கவில்லை. இவைகள் கம்பன் காலத்திலேயே மறைந்திருக்கவேண்டும். ஆகையால்தான் இராமாயணக் கதை முழுவதையும் தொடர்ச்சியாகத் தெரிந்து கொள்ளுவதற்குக் கம்பன் வால்மீகி இராமாயணக் கதையைக் கேட்கவேண்டியிருந்தது.

**சங்க நூல்களில்**

ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவை என்று எண்ணப்படுவன சங்க இலக்கியங்கள். அச்சங்க இலக்கியங்களைச் சார்ந்த எட்டுத் தொகை நூல்களிலே இராமாயணக் கதைக் குறிப்புக்கள் காணப்படுகின்றன,

"இராமன், இராவணனுடன் போர் செய்வதற்காக இலங்கைக்குப் புறப்பட்டான். புறப்பட்ட வழியிலே தனுக்கோடியிலே ஒரு ஆலமரத்தின் அடியிலே தங்கியிருந்தான். வானர வீரர்களுடன் அமர்ந்து இலங்கையைப் பற்றிய செய்திகளை அவர்களுடன் ஆராய்ந்து கொண்டிருந்தான் அப்போது அந்த ஆலமரத்தின்மேல் பறவைகள் அமர்ந்து கூச்சலிட்டுக்கொண்டிருந்தன. அக்கூச்சல் ஆலோசனைக் கூட்டத்திற்கு இடையூறாயிருந்தது. அப்பறவைகளின் கூச்சல் அடக்கப்பட்ட பின்பே, இராமன் அமைதியாக இருந்து ஆலோசனை நடத்தினான்." இது அகநானூற்றில் காணப்படும் இராமாயணக் குறிப்பு.

"வென்வேல் கவுரியர் தொன்முதுகோடி
முழங்கு இரும்பௌவம் இரங்கும் முன்துறை
வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த
பல்வீழ் ஆலம்.

வெல்லுகின்ற வேற்படையைக் கொண்ட பாண்டியனுடைய பழமையான தனுக்கோடியிலே — முழங்கிக் கொண்டிருக்கும் பெரிய கடல் அலைகள் ஓசையிட்டுக் கொண்டிருக்கும் கடல் துறையிலே — வெல்லுகின்ற போர்த்திறமையுள்ள இராமன் தன் நண்பர்களுடன் ஆலோசனை செய்துகொண்டிருந்தபோது பறவைகளின்

ஓசையை அடக்கிய—பல விழுதுகளையுடைய ஆலமரம்.'' இது மேலேகாட்டிய அகநானூற்றுப் பாடற் பகுதியின் பொருள்.

"இமயத்தை வில்லாக வளைத்த பரமசிவன் உமையாளுடன் கைலையிலே வீற்றிருந்தான். அப்பொழுது, பத்துத் தலைகளையுடையவன்—அரக்கர்களின் தலைவன்—இராவணன், காப்புப் பொலியும் தன் வலிமையான கைகளை மலையின் கீழே புகுத்தி அதை எடுக்க முயன்றான்: எடுக்க முடியவில்லை. மலையின் கீழ் மாட்டிக்கொண்டு வருந்தினான்.

இமயவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உமை அமர்ந்து உயர்மலை இருந்தனன் ஆக
ஐயிருதலையின் அரக்கர் கோமான்
தொடிப்பொலி தடக்கையின் கீழ்புகுத்து அம்மலை.
எடுக்கல் செல்லாது உழப்பவன்போல" (38)

இது கலித்தொகையிலே காணப்படும் இராமாயணக் கதைக் குறிப்பு.

"விரைந்து செல்லும் தேர் உள்ள இராமனுடன் சேர்ந்து காட்டுக்கு வந்த சீதையை வலிமை வாய்ந்த கைகளையுடைய அரக்கனாகிய இராவணன் கவர்ந்து சென்றான். அந்நாளில் சீதையால் கழற்றி எறியப்பட்டு நிலத்திலே கிடந்து ஒளிவீசிய ஆபரணங்களைச், சிவந்த முகங்களையுடைய குரங்குகளின் பெரிய கூட்டங்கள் கண்டன.

கடுந்தேர் இராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வௌவிய ஞான்றை
நிலம்சேர் மதர் அணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை" (378)

இது புறநானூற்றுப் பாடலில் காணப்படும் இராமாயணக் கதைக் குறிப்பு.

"இராமன் சீதையுடன்சேர்ந்து காட்டுக்குப் போனான். இராவணன் சீதையைச் சிறைபிடித்துச் சென்றான். போகும் வழியில் சீதை தான்பூண்டிருந்த அணிகலன்

களைக் கழற்றி எறிந்தாள். அவைகள் நிலத்திலே வீழ்ந்து மின்னிக்கொண்டிருந்தன. அவைகளைக் குரங்குகள் கண்டு கூடியிருந்து வியந்தன" என்ற கதைப் பகுதி இந்தப் புறநானூற்று அடிகளிலே அடங்கிக் கிடக்கின்றது.

இந்த அகநானூற்றுப் பகுதியும் கலித்தொகைப் பகுதியும், புறநானூற்றுப் பகுதியும் சங்க காலத்திற்கு முன்பே தமிழ் நாட்டில் இராமாயணக் கதை வழங்கி யிருந்ததைக் காட்டுகின்றன.

## காவியங்களில்

ஆழ்வார்களுக்கும் நாயன்மார்களுக்கும் முன்னே தோன்றியவை ஐம்பெருங் காவியங்கள். அவைகளுள் மணிமேகலையிலும், சிலப்பதிகாரத்திலும் இராமா யணத்தைப்பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன.

"திருமால் மயக்கம் உற்று நில உலகிலே இராமனாகத் தோன்றினான். இராவணனைக் கொல்ல — சீதையைச் சிறைமீட்க — இலங்கைக்குப் போகும் பொருட்டு வலிமை சிறந்த கடலிலே அணை போட்டான். அந்நாளில் அணை போடுவதற்காகக் குரங்குகள் தூக்கிக்கொண்டு வந்து கடலிலே வீசிய பெரிய மலைகள் எல்லாம் வருத்தத்தைத் தரும் கடலின் வயிற்றிலே புகுந்தன.

**நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி**
**அடல்அரு முந்நீர் அடைத்த ஞான்று**
**குரங்கு கொணர்ந்து எறிந்த நெடுமலை எல்லாம்**
**அணங்குடை அளக்கர் வயிறுபுக்கு."**

(மணி மே. உலக அறவிபுக்க காதை. 9—12)

இது இராமன் சேதுபந்தனம் செய்தான் என்பதை விளக் கும் பகுதி.

"மீட்சி அளவை என்பது" இராமன் வென்றான், என்று கேட்டவுடன் பெருமையற்ற இராவணன் தோற் றான் என்று எண்ணுதலாகும்"

மீட்சி என்பது இராமன் வென்றுன்என
மாட்சியில் இராவணன் தோற்றமை மதித்தல்."
(ஷை சமயக் கணக்கர் தந்திறம் கேட்டகாதை 53—54)

இவைகள் மணிமேகலையிலே இராமாயணத்தைப் பற்றிக் காணப்படும் குறிப்புக்கள்.

அருங்கான் அடைந்த
அரும்திறல் பிரிந்த அயோத்திபோல
(சில. காதை 13. வரி, 14—15)

அரிய காட்டையடைந்த சிறந்த வல்லமையுள்ள இராமனைப் பிரிந்த அயோத்தி நகரத்தைப்போல" என்பது சிலப் பதிகாரம். கோவலனும் கண்ணகியும் காவிரிப் பூம் பட்டினத்தை விட்டுப் பிரிந்தவுடன், அவ்வூரில் உள்ளவர்கள் வருந்தினுர்கள். கோவலனை நினைத்து உரையாடித் துன்புற்றுர்கள். இராமன் காட்டுக்குப் போனவுடன் அயோத்தியில் உள்ளவர்கள் இராமனைப் பற்றி எண்ணிப் பேசித் துக்கமடைந்ததைப்போல வருந்தினுர்கள்.

"தாதை ஏவலின் மாதுடன் போகிக்
காதலி நீங்கக் கடும்துயர் உழந்தோன்
வேத முதல்வன் பயந்தோன் என்பது
நீ அறிந்திலையோ, நெடுமொழி அன்றே!
(சிலப் 14 காதை. வரி. 46—49)

தந்தையின் கட்டளைப்படி, தன் மனைவியாகிய சீதையுடன் காட்டுக்குச் சென்று, மனைவியைப் பிரிந்து கடுமையான துன்பத்தையடைந்தான் இராமன். அவன் வேதங்களின் முதல்வனுகிய நான்முகனைப் பெற்றவன். இது உனக்குத் தெரியாதா? இது பலகாலமாக வழங்கிவரும் வார்த்தையல்லவா?" கோவலனுக்குக் கவுந்தியடிகள் இவ்வாறு கூறிய தாகச் சிலப்பதிகாரம் உரைக்கின்றது.

"மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பா வகைமுடியத்
தாவிய சேவடிசேப்பத் தம்பியொடும் கான்போந்து
சோஅரணும் போர்மடியத் தொல்இலங்கை கட்டழித்த

சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே !
(சில. காதை 17. படர்க்கைப் பரவரல்)

மூன்று உலகங்களையும், இரண்டு அடிகளால் மாபலியின் வாக்குறுதி நிரம்பாதபடி முழுவதும் தாவி அளந்தவன்; அவ்வடிகள் சிவக்கும்படி தம்பியாகிய இலக்குவனுடன் இணைந்து காட்டுக்குப்போனவன். அசுரர்களுடைய நகரத்தைப் போரிலே அழித்தவன். பழமையான இலங்கையையும் அழித்தவன். இந்தச் சிறந்த வீரனாகிய இராமனுடைய புகழைக் கேட்காத காது என்ன காது? திருமாலின் சிறப்பைக் கேட்காத காது என்ன காது?" ஆய்ச்சியர்கள் குரவைக் கூத்தாடும் போது இவ்வாறு பாடி ஆடுகின்றனர்.

" செயிர்த் தொழில் முதியோன் செய்தொழில் பெருக
உயிர்த்தொகை யுண்ட ஒன்பதிற்று இரட்டி என்று
இயாண்டும், மதியும், நாளும், கடிகையும்
ஈண்டுநீர் ஞாலம் கூட்டி எண்கொள.
(சிலப். காதை. 27. வரி 7—10)

காலனுடைய உயிர்களைக் கவரும் தொழில் பெருகும்படி, உயிர்களைக் கொள்ளைகொண்டு உண்ட போர்கள் எல்லாம் பதினெட்டு என்னும் எண்ணில் முடிந்தன. அவற்றை தேவாசுர யுத்தம் பதினெட்டு ஆண்டுகளில் முடிந்தது; இராம–ராவணயுத்தம் பதினெட்டு மாதங்களில் முடிந்தது; பாண்டவர்—துரியோதனர் யுத்தம் பதினெட்டு நாட்களில் முடிந்தது; செங்குட்டுவன்—கனக விசயர் போர் பதினெட்டு நாழிகைகளில் முடிந்தது; என்று உலகினர் எண்ணிக்கொள்ளும்படி."

இவ்வாறு உலகோர் யுத்தத்தைப்பற்றி பதினெட்டு என்னும் தொகையில் எண்ணும்படி செங்குட்டுவன் போர் செய்து முடித்தான் என்று கூறுகிறது சிலப்பதிகாரம்.

மேலே காட்டியவைகள் சிலப்பதிகாரத்தில் இராமாயணத்தைப்பற்றிக் காணப்படும் பகுதிகள்.

## ஆழ்வார்கள்

ஆழ்வார்கள் அனைவரும் கம்பன் காலத்திற்கு முன்னிருந்தவர்கள். அவர்களுடைய பாடல்களின் தொகுதி நாலாயிர திவ்யப்பிரபந்தம். அவர்கள் திருமாலிடம் ஆழ்ந்த பக்திகொண்டு அவர்மீது அன்புப் பாமாலை புனைந்தவர்கள். அவர்களுடைய பாடல்களிலே இராமனுடைய பெருமையைக் காணலாம். அவர்கள் அனைவரும் இராமனைத் திருமாலின் அவதாரமாகவே எண்ணிப் போற்றியிருக்கின்றனர். பிரபந்தத்தைப் படித்தோர்—படிப்போர் எல்லோருக்கும் இவ்வுண்மை தெரியும்.

திவ்யப் பிரபந்தத்தில் வரும் இராமாயணப் பகுதிகளையெல்லாம் தொகுத்தால் போதும். அவைகளை வரிசைப் படுத்தி வரைந்தால் இராமாயணம் முழுவதையும் எழுதிவிடலாம். இந்த அளவுக்கு இராம சரிதம் ஆழ்வார்களின் அன்பு சொட்டும் தமிழ்ப் பாடல்களிலே பரந்து கிடக்கின்றது. உதாரணமாகச் சில பகுதிகளை மட்டும் குறிப்பிடுகின்றோம்.

1. மன்னுபுகழ்க் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே!
   தென் இலங்கைக் கோன் முடிகள் சிந்துவித்தாய்!
2. திண்திறலாள் தாடகைதன் உரம் உருவச்சிலை வளைத்தாய்.
3. தங்கு பெரும் புகழ்ச்சனகன் திருமருகா!
4. பாராளும் படர் செல்வம் பரதன் நம்பிக்கே அருளி
ஆரா அன்பு இளையவனோடு அருங்கானம் அடைந்தவனே!
5. வாலியைக் கொன்று அரசு இளைய
   வானரத்துக்கு அளித்தவனே.

இவைகள் குலசேகரப்பெருமாள் திருமொழிகள்.

"இராமன் கௌசலையின் குமாரன். இராவணனைக் கொன்றவன். தாடகையைக் கொன்றவன். சீதையை மணந்து ஜனக ராஜனுக்கு மருமகனானவன். தனது அரசைப் பரதனுககு அளித்து, இலக்குவனுடன் காட்டுக்குச் சென்றவன். வாலியைக் கொன்று அவனுடைய அரசாட்சியை அவன் தம்பியாகிய சுக்கிரீவனுக்குக் கொடுத்தவன் இவ்வரலாறுகளை இப்பாடல் பகுதிகள் காட்டுகின்றன.

குலசேகரப் பெருமாள் பதினேரு பாடல்களில் இராமாயணத்தையே சுருக்கிப் பாடிவிட்டார். இது பெருமாள் திருமொழியில் பத்தாவது திருமொழியாக விளங்குகின்றது.

"இலங்கைக்குச் சென்ற அநுமான் சீதாபிராட்டியைக் கண்டான். இராமன் கூறிய சில அடையாளங்களை அவனிடம் உரைத்தான். இராமன் கொடுத்த கணையாழியையும் கொடுத்தான். அதன் பிறகுதான் அநுமானை உண்மையான இராம தூதன் என்று சீதாபிராட்டி நம்பினுள்." இது இராமாயண வரலாற்றில் உள்ள ஒரு பகுதி.

இந்த நிகழ்ச்சியைப் பெரியாழ்வார் பத்துப்பாடல்களிலே அமைத்துப் பாடியிருக்கின்ருர். பெரியாழ்வார் திருமொழியில் பத்தாவது திருமொழியாக விளங்குகின்றது இப்பகுதி.

1. *பைங்கண் விறல் செம்முகத்து வாலிமாளப்*
 *படர்வனத்துக் கவந்தனெடும், படையார்திண்கை*
 *வெங்கண்விறல் விராதன் உக விற்குனித்த*
 *விண்ணவர்கோன் தாள் அணிவீர்.*

2. *கலையிலங்கும் அகல்அல்குல் அரக்கர்குலக்கொடியைக்*
 *காதொடு மூக்குடன் அரியக் கதறி அவள்ஓடி*
 *தலையில் அங்கைவைத்து மலையிலங்கை புகச்செய்த*
 *தடந்தோளன்.*

இவைகள் திருமங்கையாழ்வார் பாடல்களில் உள்ளவை வாலி, கவந்தன், விராதன் இவர்கள் இராமன் வில்லுக்குப் பலியான வரலாறுகளையும், சூர்ப்பநகையின் உறுப்புக்கள் சிதைவுபட்டு அவள் இலங்கைக்கு ஓடிய கதையையும் இவைகள் குறிப்பிடுகின்றன.

"இராமனிடம் போர்செய்து தோற்றுப் போன அரக்கர்கள் இராமனிடமே சரணுகதியடைகின்றனர். அவர்கள் இராவணன் செய்த குற்றத்தை—அடாத செயலை—எடுத்துக்காட்டி அபயம் வேண்டுகின்றனர்" இக்கருத்தை அமைத்து இருபதுபாடல்களைப் பாடியிருக்கின்ருர் திருமங்கையாழ்வார். பெரிய திருமொழி பத்தாவது பகுதி

யிலே, இரண்டாந்திருமொழியாகவும், மூன்றுந் திருமொழியாகவும் இப்பாடல்கள் அமைந்திருக்கின்றன.

1. மன்னுடை யிலங்கை அரண்காய்ந்த மாயவனே
2. கற்பார் இராமனை யல்லால் மற்றும் கற்பரோ!
3. கொம்பு போல் சீதை பொருட்டு இலங்கை நகர்
அம்பெரி உய்த்தவர்.

இவைகள் திருவாய்மொழி. நம்மாழ்வார் பாடல்களில் உள்ளவை.

இவ்வாறு ஆழ்வார்கள் அனைவரும் இராமாவதாரத்தில் ஈடுபட்டுப் பாடியிருக்கின்றனர். இவர்கள் கம்பன் பாடிய இராமாயணத்தைப் படித்து அதன்பின் இராமன் மீது அன்பு செலுத்தியவர்கள் அல்லர்.

## நாயன் மார்கள்

ஆழ்வார்களுடைய பாடல்களில் இராமாயணம் காணபபடுவதுபோலவே நாயன்மார்களின் பாடல்களிலும் இராமாயணக் குறிப்புக்கள் காணப்படுகின்றன. நாயன் மார்களும் இராம காதையை அறிந்திருந்தனர். ஆழ்வார்கள் திருமாலைப் போற்றியவர்கள், ஆதலால் அவர்கள் இராமவதாரத்தைப்பற்றி விரிவாகப் பாடியிருக்கின்றனர். நாயன்மார்கள் சிவபெருமானைப் போற்றிப் பாடியவர்கள். ஆகையால் இராமனைப் போற்றிப் புகழவில்லை. சிவபிரானைப் புகழும் வகையிலே இராம சரித்திரத்தையும் இணைத்துக் கூறியிருக்கின்றனர்.

1. எறியார் கடல் சூழ் இலங்கைக் கோன் தன்னை
முறியார் தடக்கை அடர்த்த மூர்த்தி (சம்பந்தர்)
2. தலைஒருபத்தும் தடக்கையது
இரட்டிதான் உடைய அரக்கன் ஒன்கயிலை
அலைவது செய்த அவன் திறல் கெடுத்த ஆதியார்
(நாவுக்கரசு)
திண்தேர் நெடுவீதி இலங்கையர்கோன்
திரள்தோள் இருபஃதும் நெரித்தருளி (சுந்தரர்)

இவைகள் தேவாரத்தில் உள்ளவை. இவ்வாறு மூவர் பாடல்களிலும் பல விடங்களிலும் இராவணன்

செய்கை கூறப்படுகின்றது. சிறப்பாகத் திருநாவுக்கரசர் தேவாரத்தில் இராவணன் கயிலையைப் பெயர்த்த செய்திஎல்லாப் பதிகங்களிலும் காணப்படுகின்றது.

இராமன் இலங்கைக்குப் போனான்; அரக்கர்களுடன் எதிர்த்துப் போர் செய்தான்; அவர்களை அழித்தான்; இலங்கையிலிருந்து தமிழகத்திற்குத் திரும்பினான்; போரிலே அரக்கர்களைக் கொன்ற பழிதீர இராமேச்சுரத்தில் சிவலிங்கம் வைத்துப் பூசித்தான். இது சைவ புராணங்கள் கூறும் கதை. இராமாயணத்தில் இவ் வரலாறு காணப்படவில்லை.

இராமேச்சுரத்தில் உள்ள சிவலிங்கத்திற்கு இராமலிங்கம் என்று பெயர். இராமனால் பூசிக்கப்பட்டதால் இராமலிங்கம் என்று பெயர் பெற்றது. இராமேச்சுரத்தைப் பற்றித் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் பாடியிருக்கின்றனர். அந்தப் பாடல்களிலும் இராம சரிதம் காணப்படுகின்றது.

1. மான்அன நோக்கி வைதேகி தன்னை ஒரு மாயையால்
கான் அதில் வவ்விய கார் அரக்கன் உயிர் செற்றவன்

2. அணை அலை சூழ் கடல் அன்று அடைத்து
வழி செய்தவன்

இவைகள் திருஞானசம்பந்தர் தேவாரம். திரு விராமேச்சுரத்தைப் பாடிய பதிகத்தில் உள்ளவை. வஞ்சகத்தால் இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றான்; இராமன் அவனைக் கொன்றான். கடலிலே அணை போட்டு இலங்கைக்குப் போக வழி செய்தான். என்ற இராமாயணக் கதைப் பகுதிகள் இவை.

1. கடலிடை மலைகள் தம்மால் அடைத்து
மால் கருமம் முற்றி.

2. குன்றுபோல் தோளுடைய
குணம் இலா அரக்கர்தமைக்
கொன்றுபோர் ஆழி அம்மால்
வேட்கையால் செய்த கோயில்

3. வரைகள் ஒத்தே உயர்ந்த
மணிமுடி அரக்கர்கோன்
விரைய முற்ற ஒடுக்கி
மீண்டுமால் செய்த கோயில்

இவைகள் திருநாவுக்கரசர் பாடல்கள். திருவிராம்மேச்சுரத்தைப் பற்றிய பாடல்களிலே இப்பகுதிகள் காணப் படுகின்றன.

“ இராமன் இலங்கைக்குச் செல்ல மலைகளைக்கொண்டு கடலிலே அணைபோட்டான். தான் எண்ணிய கருமத்திலே வெற்றிபெற்ருன். உருவத்திலே வளர்ந்திருந்தும் குணத்திலே வளராத அரக்கர்களையெல்லாம் கொன்ருன். மலைகளைப்போல் உயர்ந்த மணிமுடிகளையுடைய அரக்கர் மன்னனுகிய இராவணனைக் கொன்ருன். அவன் குலத்தையே அடியோடு அழித்தான்'' என்ற இராமாயண வரலாற்றுப் பகுதிகளை இப்பாடல்கள் குறிக்கின்றன.

நாயன் மார்களும் கம்பர் காலத்துக்கு முன்னிருந்தவர்கள். அவர்கள் தங்கள் காலத்துக்கு முன் தமிழ் நாட்டில் வழங்கியிருந்த இராமாயண வரலாற்றையே தங்கள் பக்திப்பாடல்களிலே பல விடங்களிலும் குறிப்பிட்டனர்.

கம்பன் தோன்றுவதற்குப் பல நூற்ருண்டுகளுக்கு முன்பே இராமாயணம் தமிழ் நாட்டில் பரவியிருந்தது என்பதற்கு இவைகளே சான்றுகளாம்.



# 4. கம்பன் கருத்து

கம்பனுடைய வாழ்க்கை வரலாற்றைப் பற்றி நமக்குத் திட்டமாகத் தெரியவில்லை. செவிவழியாகக் கேட்கும் அவனுடைய வரலாறு அவன் வறுமையால் அடைந்த துன்பங்களை நமக்கு எடுத்துக் காட்டுகின்றது. அரசன் சினத்துக்கு ஆளானன்; பிறந்த நாட்டை விட்டுப் பிற நாடுபுகுந்தான்; எண்ணற்ற அல்லல்களுக்கு இலக்கானுன்: என்று கூறுகின்றது.

வறுமையின் கொடுமையை அவன் நன்றாக அறிந்தவன்; இல்லாதவர்கள் எவ்வளவு இன்னல்களுக்கு ஆளாகின்றனர்; அவர்களுடைய ஒழுக்கங்களும் நடவடிக்கைகளும் எப்படி மாறுகின்றன; என்பவைகளையெல்லாம் கம்பன் கண் கூடாகக் கண்டறிந்தவன்.

கம்பனிடத்தில் கல்விச் செல்வத்திற்குக் குறைவில்லை; கவிச்செல்வமும் குவிந்திருந்தது. கருத்துச் செல்வத்திற்கும் கணக்கில்லை. இருந்தும் பொருட்செல்வம் மட்டும் போதுமான அளவு இல்லை என்பது உண்மை. அதனால்தான் அவன் சடையப்ப வள்ளலின் ஆதரவில் வாழவேண்டிய நிலையிலிருந்தான்; அவருடைய ஆதரவில்லாவிட்டால் அவன் இராம காதையைப் பாடியிருக்கவே முடியாது. இவ்வுண்மையைக் கம்பனே கூறிவிட்டான்.

கம்பன் வறுமையின் கொடுமையைக் கண்ணுற் கண்டவன்; தன் வாழ்க்கையில் அனுபவித்தவன்; ஆகையால் தான் அதை மனித சமுதாயத்திலிருந்தே விரட்டவேண்டும் என்று நினைத்தான். எல்லாமக்களும் இன்னலுக்கு ஆளாகாமல் இன்புற்று வாழ்வதற்கான வழியைப் பற்றிச் சிந்தித்தான்.

மக்கட் சமுதாயத்திலே உயர்வு தாழ்வுகள் ஏன் நிலைத்திருக்கின்றன? வறுமைத் துன்பங்கள் வளர்ந்து வாழ்வதற்கான காரணங்கள் என்ன? என்பவைகளைப்

பற்றி எண்ணினுன். இவைகள் நிலைத்திருப்பதற்கான காரணங்களைக் களைந்து விட்டால் எல்லோரும் இன்ப வாழ்வில் நிலைக்கமுடியும் என்று உறுதி கொண்டான். அவன் தன் உள்ளத்திலே கொண்ட உறுதியான கருத்தைத் தன் காவியத்திலே அமைத்துப் பாடியிருக்கின்ருன். அவைகளிற் சில கருத்துகளைக் காண்போம்.

## பெண் கல்வி

கம்பன் காலத்தில் தமிழகத்தில் ஆண்பெண் சமத்துவம் இல்லை. பெண்கள் வீட்டுப் பிராணிகளாகவே நடத்தப்பட்டு வந்தனர். ஆண்கள் மட்டும் தங்கள் மனம் போன போக்கில் நடக்கும் உரிமையுடன் உறைந்தனர். பெண்கள் கல்விகற்பதுகூடத் தவறு என்ற கொள்கை தமிழ் மக்கள் பலரிடம் குடிகொண்டிருந்தது. இதைக் கண்ட கம்பன் தமிழர்க்கு அறிவுறுத்தும் முறையில் பெண் கல்வி இன்றியமையாதது என்று பாடினுன்.

இல்லறம் இனிது நடைபெற வேண்டுமானுல் இல்லாள் அறிவும் குணமும் அமைந்தவளாயிருக்க வேண்டும். அறிவுக்கும் குணத்திற்கும் அடிப்படை கல்வியாகும். கல்விகற்ற பெண்கள் இல்லற தர்மத்தை உணர்ந்து அவைகளை முட்டுப்பாடில்லாமல் நடத்தி வைக்க முடியும். இவ்வுண்மையைத் தமிழர்களுக்குத்தன் கவிதையின் வாயிலாக நினைவூட்டினுன்.

கம்பராமாயணத்தில் நாட்டுப் படலத்தில் உள்ள ஒரு பாடல் கம்பனுடைய இக்கருத்தை நமக்குக் காட்டுகின்றது.

" பெரும்தடம்கண் பிறைநுதலார்க் கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்,
வருந்தி வந்தவர்க்கு ஈதலும், வைகலும்
விருந்தும் அன்றி, விளைவன யாவையே.

(பால, நாட்டு 36)

நீண்ட அகன்ற கண்களையுடைய பெண்கள்—பிறை போன்ற நெற்றியையுடைய பெண்கள்—அழகிலும் சிறந்தவர்கள். அவர்களுக்கு இல்லறத்திற்கு வேண்டிய எல்

லாச் செல்வங்களும் இருக்கின்றன. அவைகளோடு கல்வியும் இருக்கின்றது. இவ்விரண்டும் அவர்களிடம் மலர்ந்திருக்கின்றன. ஆதலால் ஒவ்வொரு இல்லத்திலும் வறுமையால் வாடிவந்தவர்க்கு வேண்டுவனவற்றைக் கொடுக்கின்றனர். விருந்தினர்களுக்கு உணவிட்டு உபசரிக்கின்றனர். நாள்தோறும் ஒவ்வொரு இல்லங்களிலும் இவைகள் நடைபெறுகின்றன. இவைகளைத் தவிர வேறு ஒன்றும் நடைபெறவில்லை"

கோசல நாட்டுக் குடும்பங்கள் இவ்வாறு குறைவின்றி வாழ்ந்தன; அந்நாட்டுப் பெண்கள் கல்வியும செல்வமும் பெற்றிருந்தமையால் அவர்களுடைய இல்வாழ்வு இவ்வளவு சிறப்புடன் நடைபெற்றது; என்று கூறினான் கம்பன்.

உண்மையில் கோசல நாட்டுப் பெண்கள் இந்த நிலையில் இருந்தனரோ, இல்லையோ, அதைப்பற்றி நாம் ஆராயவேண்டியதில்லை. "பெண்கள் பணம் படைத்திருந்தால் மட்டும் போதாது; கல்வியும் கற்றிருக்கவேண்டும்; அப்பொழுதுதான் இல்லறம் இனிது நடக்கும்; என்று கம்பன் கருதினான். அக்கருத்தையே கோசலநாட்டுப் பெண்களோடு இணைத்துப் பாடினான்.

## சாதி ஒழிப்பு

கம்பன் காலத்திலே தமிழ்நாட்டில் சாதிவேற்றுமை தலைவிரித்தாடியது என்பதில் ஐயம்இல்லை. உயர்ந்தகுடி தாழ்ந்தகுடி என்ற பிரிவுகளும் நிலைத்திருந்தன. கம்பனுக்குப் பன்னூறாண்டுகளுக்கு முன்பே பிறப்பினால் உயர்வு தாழ்வு பாராட்டும் நிலைமை தமிழ்நாட்டிலே வேரூன்றியிருந்தது.

கம்பனுக்கு முன்னிருந்த அறிஞர்களும் பிறப்பினால் உயர்வு தாழ்வு பாராட்டும் கொள்கையை எதிர்த்து வந்தனர். அவர்கள் கல்வியைப் பரப்புவதன் மூலம் உயர்வு தாழ்வுகளை ஒழித்து விடலாம் என்று கருதினர். "கல்விகற்றவர்கள் எக்குடியிலே பிறந்தாலும் எல்லோராலும் உயர்வாக எண்ணப் படுவார்கள்; ஆதரிக்கப்

படுவார்கள். உயர்ந்தகுடியிலே பிறந்தாலும் கல்விகற்காதவர்கள் இழிந்தவர்களாகவே எண்ணப்படுவார்கள். ஆகையால் அனைவரும் கல்விகற்கவேண்டும், கல்விகற்றுவிட்டால் பிறப்பிலே வேற்றுமை பாராட்டும் பேதமை ஒழிந்துவிடும்.'' என்று கூறிவந்தனர்.

"ஒரு குடிப்பிறந்த பல்லோர் உள்ளும்
மூத்தோன் வருக என்னாது, அவருள்
அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்;
வேற்றுமை தெரிந்த நாற்பால் உள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன் கண்படுமே"

(புறம் 183 வரி 5–10)

ஒருகுடியிலே பிறந்த பலருள்ளே வயதால் மூத்தவன் என்பதற்காக, மூத்தவனை வருக என்று அழைக்கமாட்டான் அரசன். அவருள் இளையவனாக இருந்தாலும் கற்று அறிவுள்ளவனாயிருந்தால் அவனை அழைப்பான்; அவனுடைய ஆலோசனையைக் கேட்பான்; அவன் கூறும் அறிவுரையின்படி நடப்பான். உயர்வுதாழ்வு என்னும் வேற்றுமை காணப்பட்ட அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் நான்கு குடியிலும் கீழ்க்குடியிலே பிறந்த ஒருவன் கல்வி கற்றிருப்பானாயின் அவன் உயர்ந்தவனாக மதிக்கப்படுவான். மேற்குடியிலே பிறந்த ஒருவனும் அவன் கீழ் அடங்கி நடப்பான்"

இது புறநானூற்றுப்பாட்டு. சங்க காலத்து அறிஞர்கள்கல்வியைப் பரப்புவதன் மூலம் குடிப்பிறப்பின் உயர்வு தாழ்வுகளை ஒழித்து விடலாம் என்று எண்ணினர். இதற்கு இப்பாடல் ஒன்றேபோதுமானதாகும்.

### சமத்துவம்

கம்பன் சங்ககாலத்திற்குப் பலநூற்றாண்டுகளுக்குப் பின்னே இருந்தவன். உவர்வு தாழ்வுகள் ஒழிவதற்கு வழி காட்டுவதிலே இன்னும் ஒருபடி முன்னே சென்றான். உண்மையில் உயர்வு தாழ்வற்ற சமுதாயம் அமைய வேண்டுமானால் என்ன செய்யவேண்டும் என்பதைத் தன்

சிந்தனையால் — ஆராய்ச்சியால் — பகுத்தறிவால் கண்டறிந்து கூறினான்.

" வண்மையில்லை ஓர் வறுமையின்மையால் ;
திண்மையில்லை, நேர் செறுநர் இன்மையால் ;
உண்மையில்லை, பொய்யுரை இலாமையால் ;
வெண்மையில்லை, பல்கேள்விமேவலால்.
(பால, நாட்டு 53)

கொடை என்பதே இல்லை ; ஒருவகையிலும் ஒருவரிடத்திலும் வறுமையென்பதே இல்லாத காரணத்தால் மக்களிடம் வீரம் என்பதே இல்லை; அவர்களுடன் நேரே எதிர்த்து நின்று போர்புரியும் பகைவர்கள் இல்லாத காரணத்தால். மக்கள் உண்மை பேசுவதே இல்லை; பொய்புகல்கின்றவர்கள் இல்லாத காரணத்தால். மக்களிடம் அறிவின்மை என்பதே இல்லை ; எல்லாமக்களும் நூல்களைக் கற்றவர்களும், கேட்டவர்களுமாயிருப்பதனால்"

இது நாட்டுப் படலத்தில் உள்ள பாட்டு. கம்பன் காலத்திலோ, அதற்கு முன்னோ கோசலநாடு இந்த நிலையில் இருந்ததில்லை. வேறு எந்தநாடுங்கூட இந்த உயர்ந்த நிலையில் இருந்திருக்க முடியாது. "எல்லாமக்களுக்கும் செல்வமும், கல்வியும் இருந்தால் அம்மக்கள் வாழும் நாட்டிலே சண்டையிருக்காது ; சமாதானம் நிலவும். பொய் பேசுவோர் இருக்கமாட்டார்கள் ; எல்லாமக்களும் உண்மைகளையே உரைப்பார்கள்; எல்லாமக்களும் அறிவுள்ளவர்களாயிருப்பார்கள்." என்பது கம்பன் கருத்து. இக்கருத்தையே கோசல நாட்டில் நடைமுறையில் இருந்ததாகக் கூறினான்.

கோசல நாடே இப்படியிருந்தது என்றால் அந்நாட்டின் தலைநகராகிய அயோத்தி நகரம் எப்படியிருந்தது ? அந்நகரமக்களின் வாழ்க்கை எப்படிருந்தது? என்ற கேள்விகள் எழுவது இயல்பு. இக்கேள்விகளுக்கும் கம்பன் விடைகூறியிருக்கின்றான்.

" கள்வார் இலாமைப் பொருள் காவலும் இல்லை, யாதும்
கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும் இல்லை மாதோ.

அந்த நகரத்தில் திருடர்களே இல்லை; ஆதலால் யாரும் பண்டங்களைக் கிட்டங்கிகளிலே பூட்டிவைத்துக் காவல் காப்பதில்லை. பிச்சையேற்பவர் யாருமே இல்லை; ஆதலால் பொருளைக் கொடுக்கும் கொடையாளிகளும் இல்லை."

"கல்லாது நிற்பார் பிறர் இன்மையின் கல்விமுற்ற
வல்லாரும் இல்லை; அவை வல்லர் அல்லாரும் இல்லை;
எல்லாரும் எல்லாப் பெரும் செல்வமும் எய்தலாலே
இல்லாரும் இல்லை; உடையார்களும் இல்லை மாதோ
(பால. நகர. 74)

அந்த நகரத்தில் கல்வி கற்காமல் மரம்போல் வளர்ந்து நிற்பவர்கள் யாருமே யில்லை; தேர்ந்த கல்வி கற்றவரும் இல்லை; கல்வியிலே வல்லவர் அல்லர் என்று சொல்லக் கூடியவரும் இல்லை. எல்லா மக்களும் வாழ்க்கைக்கு வேண்டிய எல்லாப் பெரும் செல்வங்களையும் எய்தியிருக் கின்றனர்; ஆதலால் செல்வமற்ற வறியவர்களும் இல்லை; பொருள் நிறைந்த செல்வர்களும் இல்லை."

கம்பன் காலத்திலோ அவன் காலத்திற்கு முன்போ இந்த நிலையிலே எந்த நகரமும் இருந்ததில்லை. அயோத்தி நகரம் இப்படி யிருந்ததென்று கம்பன் சொல்வதை நாம் நம்பமுடியுமா? மக்கள் வாழும் எல்லா நகரங்களும் இம் மாதிரி இருக்கவேண்டும் என்பது கம்பன் கருத்து.

ஏறக்குறைய தொள்ளாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே கம்பன்கண்ட இக்கனவு இன்று பலமக்கள் உள்ளத்திலும் பதிந்துவிட்டது. எல்லோருக்கும் கல்வி; எல்லோருக்குப் வாழ்க்கை வசதி; எல்லோரும் ஒன்றேயென்னும் தன்மை; இவைகள் வேண்டும் என்பதே எல்லோருடைய ஆவலும். கம்பன் விரும்பிய இந்தச் சமதர்ம வாழ்வையே எல்லா அறிஞர்களும் இன்று விரும்புகின்றனர்.

கம்பன் கவிதையிலே தனது சிந்தையைப் பறி கொடுத்த நமது செந்தமிழ்க் கவிஞன் பாரதி இவ்வுண் மையை விளக்கிக் கூறியிருக்கின்றான்; கம்பன் கருத்தை மிகவும் அழகாக இனிய தமிழிலே, எளிய சொற்களிலே, எல்லார்க்கும் புரியும்படி பாடிவைத்தான்.

"ஏழையென்றும் அடிமையென்றும்
எவனும் இல்லை, சாதியில்
இழிவுகொண்ட மனிதர் என்பது
இந்தியாவில் இல்லையே;
வாழிகல்வி செல்வம் எய்தி
வாழ்வம் இந்த நாட்டிலே;
மனிதர் யாரும் ஒருநிகர்
சமானமாக வாழ்வமே."

இப்பாடல் கம்பன் கருத்தை அப்படியே படம் பிடித்துக் காட்டுவதாகும்,

இங்கே எடுத்துக்காட்டிய உதாரணங்களே ஒப்பற்ற உயர்ந்த கருத்துள்ளவன் கம்பன் என்பதைக் காட்டப் போதுமானவை. எல்லா மக்களும் கல்வியும் செல்வமும் பெற்று வாழும் நாட்டிலே—நகரத்திலேதான் அமைதி நிலவும்; மக்களுக்குள் அன்பு நிலவும்; மக்கள் வாழ்வு உயர்ந்து விளங்கும்.

கம்பன் கருத்திலே எழுந்த இவ்வுண்மையை எந்தக் காலத்திலும் மறுக்க முடியாது; யாராலும் தள்ளிவிட முடியாது. இத்தகைய கருத்திற் சிறந்த கம்பனைத் தம் முன்னோராகப் பெற்ற தமிழர் சிறப்பை யார்தான் அளவிட்டு உரைக்கமுடியும்?



# 5. கம்பனும் மதமும்

கம்பன் காலத்திலே தமிழ்நாட்டிலே மதச் சண்டைகள் மலிந்திருந்தன. கம்பன் காலத்திற்கு முன்பு தமிழ் நாட்டில் தழைத்திருந்த சமண-பவுத்த மதங்கள் ஒடுக்கப் பட்டன. ஆழ்வார்களும், நாயன்மார்களும் அன்பு நெறியைப் பரப்பி அம்மதங்களை ஒடுக்கினர். மக்களிடையிலே சைவமும், வைணவமும் வளர்ந்தன. தேவாரப் பாடல்களையும், பிரபந்தப் பாடல்களையும் மக்கள் மகிழ்ந்து பாடிப் பக்திப் பரவசமாயினர்.

சமண—பவுத்த மதங்களை ஒடுக்குவதில் சைவ சமயத்தினரும், வைணவ சமயத்தினரும் ஒன்றுபட்டு உழைத்தனர். அம் மதங்கள் ஒடுங்கியபின் சைவர்களும், வைணவர்களும் தங்கள் தங்கள் மதமே உயர்ந்தது என்று உரைக்கத் தொடங்கினர். இன்னும் பல, மத தத்துவங்களும் தமிழகத்திலே தலையெடுத்தன. ஒவ்வொரு மதத்தினரும் தங்கள் தங்கள் மதத்தை உயர்த்திப் பேசியதோடு நின்றுவிடவில்லை. மற்றைய மதங்களை இழிந்தவை—பொய்யானவை — மக்களுக்கு நன்னெறி காட்டாதவை என்று வெறுத்துரைக்கவும் தொடங்கினர்.

வேதங்களை அடிப்படையாகக்கொண்ட மதத்தினர்க்குள்ளேயே ஒற்றுமையில்லை. இவர்கள் உபநிடதங்களுக்கு வேறு வேறு பொருள்கள் எழுதித் தங்கள் தங்கள் மதக் கொள்கைகளே உயர்ந்தனவென்று காட்டினர்; தாங்கள் வணங்கும் தெய்வங்களே உயர்ந்தவை; மற்றவர்கள் வழிபடும் தெய்வங்கள் இழிந்தவை; தாங்கள் கூறும் தத்துவங்களே உண்மையானவை; மற்றவர்கள் உரைக்கும் தத்துவங்கள் பொய்யானவை; என்று வேதங்களிலிருந்தும், உபநிடதங்களிலிருந்தும் ஆதரவுகாட்டிச் சண்டையிட்டனர்.

பலவேறுபட்ட மதக் கொள்கைகள் காரணமாகத் தமிழர்களிடையே ஒற்றுமை குலைந்துவந்தது. பலவேறு

பட்ட மதக்கொள்கைகள், கடவுள் வணக்கம் காரணமாக அவர்களிடையே கலகத்தீ மூண்டுவந்தது. தனிப்பட்ட மக்களும் தங்களுக்குள் வாதிட்டு மோதிக்கொண்டனர். இதனால் ஒரு மதத்தைப் பின்பற்றுகின்றவன் மற்றொரு மதத்தைப் பின்பற்றுகின்றவனைக் க்ண்டால் மாற்றானாக மதிக்கத் தலைப்பட்டான்.

சங்ககாலத்திலே தமிழகத்தில் பல தெய்வ வணக்கங்கள் இருந்தன. சிறப்பாகத் திருமால், முருகன், பலதேவன், சிவபெருமான், இந்திரன் முதலிய தெய்வங்களை வணங்கி வந்தனர். ஆனால் அவர்களுக்குள் தெய்வ வணக்கம் காரணமாக எந்தவிதமான ஒற்றுமைக் குறைவும் உண்டாகவில்லை. அக்காலத்தில் சமணர் பவுத்தர்களும் தமிழகத்திலே சிறுபான்மையினராயிருந்தனர். இருந்தும் மதச் சண்டையோ, மதவெறுப்போ தலைகாட்டியதில்லை. அந்த நிலையை மீண்டும் தமிழகத்தில் ஏற்படுத்தவேண்டும் என்பது கம்பன் கருத்து. ஆதலால் எல்லா மதங்களும் ஒன்றே; எல்லோராலும் வணங்கப்படும் பலவேறு கடவுள்களும் ஒரே கடவுளின் தோற்றந்தான்" என்ற உண்மையைத் தனது காவியத்தில் பலவிடங்களில் பாடி வைத்தான்.

## சமரச நோக்கம்

கம்பன் திருமாலிடம் அன்பு பூண்டவன்; ஆனால் அவன் பிற தெய்வங்களைப் பழிப்பவன் அல்லன். அவன் வைணவத்திலே ஆழ்ந்த அன்புள்ளவன்; ஆனால் ஏனைய மதங்களை இழிவாகப் பேசுகின்றவன் அல்லன். பலவேறுபட்ட மதத்தினரும், பலவேறு தெய்வங்களை வணங்குகின்றவர்களும் ஒன்றுபட்டு உடன்பிறந்தவர்கள் போல் வாழமுடியும் என்பதே அவன் கொள்கை.

"உலகம் யாவையும் தாம் உள ஆக்கலும்
நிலைபெறுத்தலும், நீக்கலும் நீங்கலா
அலகுஇலா விளையாட்டு உடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே,

உலகங்கள் எல்லாவற்றையும் தாமே படைப்பதும் படைத்த அவ்வுலகங்களைக் காப்பதும், பிறகு அவற்றை அழிப்பதும் ஆகிய செயல்களை எப்பொழுதும் நீங்காத விளையாட்டாகக் கொண்டிருப்பவரே தலைவர், அத்தலைவரையே நாங்கள் சரணம் அடைகின்றோம்."

இது கம்ப ராமாயணத்தின் கடவுள் வாழ்த்துப் பாடல். எடுத்த எடுப்பிலேயே தன்னுடைய சமரச மனப் பான்மையைக் கம்பன் இவ்வாறு வெளியிட்டான். இதனால் கம்பன் மதவெறி கொண்டவன் அல்லன் என்பதைக் காணலாம். இப்பாடலில் எந்தக் கடவுள் பெயரும் குறிப்பிடப்படவில்லை. எல்லாம்வல்லவனே இறைவன் என்று இயம்பியிருக்கின்றான்.

"மதங்களால் ஒருவரோடு ஒருவர் சண்டைபோட்டுக் கொள்ளுவது தவறு. எங்கள் கடவுள்தான் பெரிது என்று வீணாக வழக்கிட்டுக்கொள்வதிலே பொருளில்லை. மதங்கள் வேறுவேறாக இருக்கலாம்; பழக்கவழக்கங்கள் வேறு வேறாக இருக்கலாம். இறைவன் அருளைப்பெற அவைகள் எடுத்துக்கூறும் வழிகள் வெவ்வேறாக இருக்கலாம். அவைகள் சொல்லும் தெய்வங்கள் வெவ்வேறு தோற்ற முடையனவாக இருக்கலாம். மக்கள் மயங்கும் வகையிலே மதங்கள் இவ்வாறு பற்பல தெய்வங்களைக் காட்டினாலும் தெய்வங்கள் எல்லாம் ஒன்றுதான். கடவுள் என்பது ஒன்றுதான்; வெவ்வேறல்ல. எல்லாம் ஒன்றேதான். மக்கள் எந்தெந்த உருவில் எண்ணுகின்றார்களோ அந்தந்த உருவில் ஒரே கடவுள்தான் பலவாறாகக் காட்சியளிக்கின்றார். ஆதலால் மதவாதிகள்—சமயவாதிகள் எங்கள் கடவுள் உயர்ந்தவர்; உங்கள் கடவுள் தாழ்ந்தவர்; எங்கள் கடவுள் உண்மை; உங்கள் கடவுள் பொய்; என்று மண்டையோடு மண்டை மோதிக்கொள்ளவேண்டாம்."

இவ்வாறு மக்களுக்கு உண்மையை எடுத்துக்காட்ட வேண்டும் என்பது கம்பன் கருத்து. இத்தகைய அறநெறி போதம் கம்பன் காலத்தில் அவசியமாக இருந்தது.

"கல்லிடைப் பிறந்து போந்து
கடலிடைக் கலந்த நீத்தம்,
எல்லையில் மறைகளாலும்
இயம்பரும்பொருள் ஈது என்னத்,
தொல்லையின் ஒன்றே யாகித்
துறைதொறும் பரந்த சூழ்ச்சி ;
பல்பெரும் சமயம் சொல்லும்
பொருளும்போல் பரந்தது அன்றே.

(பால, ஆற்று 19)

ஆற்றுவெள்ளம் மலையிலே பிறந்தது; நிலத்தின் வழியே நடந்தது; இந்தக்காட்சி கடவுளின் இயல்பை ஒத்திருந்தது. அளவற்ற வேதங்களாலும் இன்னது என்று குறித்துச்சொல்ல முடியாதது கடவுள். அந்தக் கடவுள் போல ஆரம்பத்தில் ஒன்றாய் நின்று, பின்னர்ப் பலநீர்த்துறைகளிலும் பரந்து சென்றது அந்த வெள்ளம். இந்தத் தோற்றத்தை ஆராய்ந்தால், பல பெரிய மதங்களும் சொல்லுகின்ற பொருள் வெவ்வேருகக் காணப்பட்டாலும், உண்மையில் அவைகள் ஒரே கடவுளைக் குறிப்பதுபோலவே, அவ்வெள்ளமும் ஓரிடத்தில் தோன்றி வெவ்வேருகப் பிரிந்து—ஓரிடத்திலேயே சேர்ந்தது"

கடவுள் ஒன்றே—மதங்கள் எல்லாம் ஒன்றே—ஒரு கடவுளைப் பற்றியே வெவ்வேறு விதமாகச் சொல்லுகின்றன—என்பதை மற்ருெரு பாட்டிலும் காணலாம்.

"தோள் கண்டார் தோளே கண்டார்,
தொடுகழல் கமலம் அன்ன
தாள் கண்டார் தாளே கண்டார் ;
தடக்கை கண்டாரும் அஃதே ;
வாள்கொண்ட கண்ணுர் யாரே
வடிவினை முடியக்கண்டார் ?
ஊழ்கொண்ட சமயத்து அன்னுன்
உருவுகண்டாரை ஒத்தார்.

(பால, உலாவியல். 19)

இராமனுடைய தோளைப் பார்த்தவர்கள் அந்தத் தோளின் அழகையே பார்த்துக் கொண்டிருந்தனர். அவனுடைய பாதங்கள் தாமரை மலர் போன்றவை; வீர கண்டாமணி அணிந்தவை. அப்பாதங்களில் ஒன்றைப் பார்த்தவர்கள் அதன் அழகையே பார்த்துக் கொண்டிருந்தனர். அவனுடைய திரண்டு நீண்ட கைகளைக் கண்டவர்கள் அந்தக் கைகளையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தனர். அவனுடைய அழகைக் காணவந்த பெண்கள் அனைவரும் எந்த உறுப்பை முதலில் பார்த்தார்களோ அந்த உறுப்பின் அழகிலேயே ஆழ்ந்து நின்றனர். ஒருவராவது அவனுடைய அழகு முழுவதையும் காணவில்லை. பழமையான சமயங்களிலே ஈடுபட்டவர்கள் கடவுளின் ஒவ்வொரு உறுப்பை மட்டும் கண்டு, தாங்கள் கண்ட அதுதான் கடவுள் என்று எண்ணியிருப்பவர்களைப்போல் இவர்கள் எல்லாரும் ஆனார்கள்."

இது இராமனைக்கண்ட பெண்கள் எந்நிலையிலிருந்தனர் என்பதை உரைப்பது. சமயவாதிகள்—தாங்கள் வணங்கும் தெய்வந்தான் உண்மைத் தெய்வம் என்று சண்டையிடும் சமயவாதிகள்—இராமனைக் கண்ட பெண்களைப் போன்றவர்கள்: கடவுளின் முழு வடிவையும் காணாதவர்கள். அவர்கள் கடவுளின் உண்மையை அறிந்திருந்தால் அவர்களுக்குள் சண்டை உண்டாகாது. இக்கருத்தையே மேலே காட்டிய பாட்டில் சித்திரமாகத் தீட்டியிருக்கின்றான் கம்பன்.

## சைவ வைணவ பேதம்

கம்பன் காலத்திலே குறிப்பாகச் சைவர்களுக்கும் வைணவர்களுக்கும் சண்டை வளர்ந்து வந்தது. சைவர்களும், வைணவர்களும் சமண—பவுத்தர்களை எந்த அளவுக்கு வெறுத்தார்களோ அந்த அளவுக்கு அவர்கள் ஒருவரை ஒருவர் வெறுக்கத் தொடங்கினார்கள்.

சைவ—வைணவச் சண்டை தோன்றிய காலத்தில் பல அறிஞர்கள் அவர்களிடையிலே ஒற்றுமையை நிலைநாட்ட முயன்றனர். ஒரே கடவுள்தான் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் புரிந்து வரு

கின்றார். படைத்தல் தொழிலைப் புரியும்போது நான்முகனாகவும், காத்தல் தொழிலைச் செய்யும்போது திருமாலாகவும், அழித்தல் தொழிலை ஆற்றும்போது சிவனாகவும் பெயர் பெற்று நிற்கின்றார்; என்று சமாதானம் கூறி வந்தனர்.

இக்கருத்தைச் சைவர்களும் ஒப்புக்கொண்டனர்; வைணவர்களும் ஒப்புக்கொண்டனர். இதை ஒப்புக் கொண்டபின்னும் அவர்களுக்குள் ஒற்றுமை உண்டாக வில்லை. சிவபெருமானே, பிர்மா, விஷ்ணு, ருத்திரன் என்னும் மும்மூர்த்தியாக நின்று முத்தொழில்களையும் செய்கின்றார் என்று சைவர்கள் உரைத்தனர். திருமால் தான் பிர்மா, விஷ்ணு, சிவனாக நின்று முத்தொழில்களைச் செய்து வருகின்றார் என்று வைணவர்கள் வாதித்தனர்.

இவ்வாறு திருமால் உயர்ந்தவரா? சிவன் உயர்ந்தவரா? என்ற சண்டையும் கம்பன் காலத்திலே வளர்ந்திருந்தது. ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் கடவுளே உயர்ந்தது என்பதைக் காட்டப் புராணங்களும் கதைகளும் எழுதிவந்தனர். சைவ வைணவச் சண்டை வலுத்து வந்தது. இக்காலத்தில்தான் "அரியும் சிவனும் ஒன்று; அறியாதவன் வாயில் மண்" என்ற பழமொழியும் தோன்றியிருக்கவேண்டும்.

கம்பன் இச்சண்டையை விரும்பவில்லை. சிவன் தான் உயர்ந்தவன்: திருமால்தான் உயர்ந்தவன்; என்று சொல்லி மக்கள் ஒருவரோடு ஒருவர் வழக்கிடுவதை வெறுத்தான். ஆதலால் இச்சண்டையைக் கடுமையாகக் கண்டித்தான்.

"அரன் அதிகன், உலகளந்த
அரிஅதிகன், என்றுரைக்கும்
அறிவில்லோர்க்குப்
பரகதி சென்று அடைவரிய
பரிசே போல்.

(கிட்கிந்தா. நாடவிட்ட 24)

சிவன் தான் பெரியவன்; இவ்வுலகை அளந்த திருமால் தான் பெரியவன்; என்று சொல்லுகின்றவர்கள் அறிவற்றவர்கள்; அவர்கள் கடவுளையே வெறுப்பவர்கள்; அவர்களுக்கு உயர்ந்தகதி இல்லை; உயர்ந்தகதியை அடைய முடியாது"

"தன் தெய்வத்தை உயர்த்தியும், பிறர் தெய்வத்தைத் தாழ்த்தியும் பேசுகின்றவர்கள் அறிவற்றவர்கள்; இவர்களால்தான் மனித சமுதாய ஒற்றுமைக்கு உலை வைக்கப்படுகின்றது; மதவெறியும், தெய்வவெறியும் ஊட்டப்படுகின்றது; இவ்வெறிகள் காரணமாக அவர்கள் மிருகமாக மாறி ஒருவரோடு ஒருவர் முட்டி மோதிக் கொள்ளுகின்றனர்;" இதுவே கம்பன் கருத்தாகும்.

கம்பன் காவியத்திலே ஓரிடத்திலாவது சிவபெருமானை இழிவாகக் கூறப்படவில்லை. சிவபெருமானைக் குறிப்பிடும் இடங்களில் எல்லாம் உயர்த்தியே கூறுகின்ருன். கம்பன் கவிதையிலே எந்த இடத்திலும் பிறமத வெறுப்பையோ, பிறதெய்வப் பழிப்பையோ பார்க்க முடியாது. கம்பனுடைய உயர்ந்த சமரச மனப்பான்மை இதனுல் தெளிவாகின்றது.

கம்பன் திருமால் பக்தன் என்பதிலே ஐயமில்லை. அவன் சடையபப வள்ளலால் ஆதரிக்கப்பட்டான் என்பது குறிப்பிடத்தக்கது. சடையன், சடையப்பன், சடையாண்டி என்பன சிவபெருமானைக் குறிக்கும் பெயர்கள். சிவபெருமானைக் குறிக்கும் பெயரைக் கொண்ட சடையப்ப வள்ளல் சைவ சமயத்தைப் பின்பற்றுகின்றவராகவே இருந்திருக்கவேண்டும். இவர் வைணவனுகிய கம்பனை ஆதரித்ததிலிருந்தே கமபன் எல்லா மதத்தாராலும் போற்றக்கூடிய சமரச நோக்கங் கொண்ட வைணவனுக இருந்தான் என்பதைக் காணலாம்.

கம்பன் தன் காலத்திலிருந்த சூழ்நிலையை நன்ருக அறிந்தவன். தமிழர்களுக்குள் மதம், தெய்வம், காரணமாக ஒற்றுமைக்குறைவு உண்டாகக் கூடாது என்று எண்ணியவன். இவ்வெண்ணத்தை அவன் தன் காவியத்திலே பல விடங்களிலே பாடிவைத்திருப்பதை யார்தான் பாராட்டாமலிருக்கமுடியும்?

# 6. ஒழுக்கமே உயர்குடி

ஒழுக்கமுள்ளவர்களே உயர்ந்தவர்கள் என்ற தமிழர் கொள்கை கம்பன் காலத்திலே மங்கியிருந்தது. பிறப்பினுல் உயர்வு தாழ்வுபாராட்டும் போலித் தனம் தலை தூக்கியிருந்தது. பிறப்பினுல் ஒருவரை உயர்வாகவோ தாழ்வாகவோ மதிப்பது தகாது; ஒழுக்கமே உயர்வுக்கும் தாழ்வுக்கும் அளவுகோல்; ஆதலால் ஒவ்வொருவருடைய நடத்தையைக் கொண்டே அவர்களை உயர்ந்த குடிப்பிறப்புள்ளவராகவோ, தாழ்ந்த குடிப்பிறப்புள்ளவராகவோ கொள்ளவேண்டும். இதுவே வள்ளுவர் கொள்கை.

" ஒழுக்கம் உடைமை குடிமை; இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.

நடத்தையே சிறந்த குடியிற் பிறந்தமைக்கு அடையாளமாகும்; நன்னடத்தையின்மை ஒருவன் உயர்ந்த குடியிலே பிறந்தவனுயினும் அவனை இழி பிறப்பனுக்கிவிடும்.',

என்ற குறளால் இதைக் காணலாம், இக் குறள் நீதியை ஒப்புக்கொண்டவன் கம்பன். இந்த அறம் தமிழ் நாட்டில் நிலைத்திருக்கவேண்டும் என்பது அவன் கருத்து.

கம்பன் கருத்துக்கு இராமன் நடத்தை ஆதரவளித்தது. இராமன் குகனுடன் நட்புக் கொண்டான். சுக்கிரீவனுடன் நட்புக்கொண்டான். விபீஷணனிடம் நட்புக் கொண்டான். இராமன் இவர்களிடம் கொண்ட நட்பு மிக உயர்ந்தது. இவர்களை வெறும் நட்பினராகமட்டும் கொள்ளவில்லை. உடன் பிறந்தவர்களாகவே கொண்டான். இவர்களுடைய பிறப்பைப்பற்றி இராமன் கவலைப்படவில்லை; சிறந்த பண்பைக் கருதியே இவர்களைத் துணைவர்களாக ஏற்றுக்கொண்டான்.

இராமனுடைய இந்தச் சகோதரத் தன்மை—உயர்ந்த நடத்தை—கம்பனுடைய உள்ளத்தைக் கவர்ந்தது. சிறந்த மனிதத் தன்மைக்கு அடையாளமான இராம

னுடைய இந்தப் பண்பு தமிழர் சமுதாயத்திலே பரவ வேண்டும் என்பது கம்பன் கருத்து. வள்ளுவர் வகுத்த அறநெறியை நினைப்பூட்டுவதாக அமைந்திருந்த இராம னுடைய இத்தகைய நடத்தை இராமாயணக் கதையில் குறிப்பிடத் தகுந்த சிறந்த பகுதியாகும்.

## குகனுடன் நட்பு

நாட்டைத் துறந்து காட்டிற்குச் சென்ற இராமன் முதலில் குகனுடன் நட்புக்கொள்ளுகின்ருன். இராமன் அரச குலத்திலே பிறந்தவன்; செல்வத்திலே புரண்டு கிடந்தவன்; கல்வி அறிவிலே சிறந்தவன்; உயர்ந்த ஒழுக்க நெறியைப் பின்பற்றுகின்றவன். குகனே வேடர் குலத்திலே பிறந்தவன்; அவன் குடி கல்வி அறிவற்றது; உயிர்களை வேட்டையாடிக் கொன்று தின்று வாழும் கொடுந் தொழிலே அவன் குலத்தொழில்; நன்மை யிவை, தீமை யிவை என்பதை அறியாத குலம் அவன் குலம். இத்தகைய குலத்திலே பிறந்த குகனும், இராமனும் சகோதர அன்பு கொண்டார்கள் என்பது வியப்புக்குரியது.

குகனுடன் இராமன் சகோதரத் தன்மை கொண்ட தற்கான காரணத்தை மிகவும் தெளிவாகக் கூறி இருக் கின்ருன் கம்பன். குகன் மிகச் சிறந்த மனிதன்; அவன் தீயொழுக்கத்தைத் துறந்தவன்; தூயவன்; நல்ல மனம் படைத்தவன். அவன் மட்டுந்தான் இப்படி என்றில்லை; அவனுடைய சுற்றத்தினரும் அவனைப் போன்றவர்கள்.

சுற்றமும், தானும் உள்ளம்
தூயவன்; தாயின் நல்லான்

(அயோத்தி, கங்கை. 39)

என்று குகனுடைய குணச் சிறப்பை இலக்குவன் வாயால் எடுத்துக் காட்டுகிருன் கம்பன். இத்தன்மை யுள்ள குகனை—அவன் குலத்தைக் கருதாமல்—குடிப் பிறப்பைக் கருதாமல்--அவன் உள்ளத் தூய்மையைக் கருதி—தாயைக் காட்டினும் அன்புடைமையைக் கருதி— அவனை இராமன் தன் உடன் பிறந்தானுகக் கொண் டான்.

குகனையும் இராமனையும் உடன் பிறந்தவர்களாகப் பிணித்த அன்பு நிகழ்ச்சியைக் கம்பன் சித்திரம்போல் எழுதிக் காட்டுகின்ருன்.

இராமன் குகனுடைய உதவியால் கங்கையைக் கடந்தான். கடந்தபின் இராமன், சித்திரகூடத்திற்குச் செல்லும் வழி யெதுவென்று குகனிடம் கேட்டான். அப்பொழுது குகன் இராமன் பாதங்களிலே பணிந்து "ஐயனே! நானும் என் சேனையுடன் உன்னோடு வருகின்றேன். உனக்கு வேண்டிய உதவிகளையெல்லாம் செய்கின்றேன். உன்னைப் பிரிந்து வாழ என் உள்ளம் இடந்தரவில்லை." என்று வேண்டிக்கொண்டான்.

குகனுடைய ஆராத அன்பைக்கண்டு இராமன் உள்ளங்கனிந்தான். அவனுடைய உள்ளத்திலே அமைதி ஏற்படும்படி இராமன் மிகவும் இனிய மொழிகளில் சமாதானங்கூறுகின்ருன். இந்த இனிய மொழிகளைக் கம்பன் இரண்டு பாடல்களில் அமைத்துக் காட்டி இராமனுடைய அன்பையும் பெருந்தன்மையையும் விளக்கியிருக்கிருன்,

" அன்னவன் உரைகேளா
அமலனும் உரைநேர்வான் ;
என் உயிர் அனையாய் நீ
இளவல் ; உன் இளையான் ; இந்
நன்னுதலவள் நின்கேள் ;
நளிர்கடல் நிலமெல்லாம்
உன்னுடையது ; நான் உன்
தொழில் உரிமையின் உள்ளேன்.(அயோத்தி,கங்கை 68)

"என் உயிர் போன்றவன் நீ! என் இளைய சகோதரனாகிய இலக்குவன் உனது இளைய சகோதரன் ; இந்தச் சீதையும் உனக்கு அண்ணி ; இக்கடல் சூழ்ந்த உலகமெல்லாம் உனக்கு உரிமையானது. நான் உன் சொற்படி நடப்பதற்கு உரியவன்" என்பது ஒரு பாடல்.

"துன்புளது எனின் அன்றே
சுகம் உளது; அது அன்றிப்

பின்பு உளது இடை மன்னும்
பிரிவுஉளது என உன்னேல்!
முன்பு உளெம் ஒரு நால்வேம்,
முடிவு உளது என உன்னு
அன்புள இனி நாம் ஓர்
ஐவர்கள் உளர் ஆனேம். (ஷை 69)

துன்பம் இருந்தால்தான் அதன்பின் இன்பம் உண்டு; அதுவும் அல்லாமல் பின்பு நமக்குள் இடைவிடாத நட்பு உண்டு; இடையிலே தோன்றும் பிரிவு நிலையானது என்று நினைக்காதே; முன்பு நாங்கள் நான்கு பேர்தான் சகோதரர்களாயிருந்தோம்; இடையருத அன்புள்ள நாம் இனி ஐந்து சகோதரர்களானேம்" என்பது இரண்டாவது பாட்டு.

அன்பும், தூயமனமும் சாதி வேற்றுமையை அடித்து வீழ்த்தின. இவ்வுண்மையை இப்பாடல்கள் காட்டு கின்றன.

**சுக்கிரீவன்**

இதன்பின் சுக்கிரீவனிடம் இராமன் பாராட்டிய சகோ தரத்துவம் குறிப்பிடத்தக்கது. சுக்கிரீவன் நாகரீக மற்ற மிருகத்தன்மையுள்ள குலத்திலே பிறந்தவன். அவ னும் பிறப்பால் இராமனுக்கு இணையாகாதவன். ஆயினும் அவனும் அவனுடைய சுற்றத்தினரும் குகனைப்போலவே இராமனிடம் அன்பு பூண்டனர். இராமனுடைய சேர்க்கை யால், கூட்டுறவால் நல்ல பலன் பெற்றனர். சுக்கிரீவனும், அவனைச் சேர்ந்தவர்களும் அன்புள்ளவர்கள்; அறிவுள்ள வர்கள்; நட்புக்கேற்றவர்கள்; என்பதை இராமன் தெளி வாகத் தெரிந்துகொண்டான். ஆதலால் சுக்கிரீவனையும் தனது சகோதரனுகக்கொண்டான்.

"மற்றுஇனி உரைப்பது என்னே,
வானிடை மண்ணின் நின்னைச்
செற்றவர் என்னைச் செற்ருர்;
தீயரே எனினும் உன்னேடு

*உற்றவர் எனக்கும் உற்ருர்;*
*உன்கிளை எனது: என்காதல்*
*சுற்றம் நின்சுற்றம்; நீயே*
*இன்னுயிர்த் துணைவன் என்ருன்:*
(கிட்கிந்தா, நட்பு 27)

மற்றும் இனி நான் சொல்லுவதற்கு என்ன உண்டு? வானுலகிலானுலும் சரி, மண்ணுலகிலானுலும் சரி, உன்னைச் சினந்தவர் என்னைச் சினந்தவர் ஆவார்; உனக்குப் பகைவர் எனக்கும் பகைவர்; கெட்டவர்களாயிருந்தாலும் சரி, உன்னுடைய நட்பினர் எனக்கும் நட்பினர்; உன்னுடைய உறவினர், என்னுடைய உறவினர்; என்னல் அன்புடன் பாராட்டப்படும் சுற்றத்தார் அனைவரும் உன்னுடைய சுற்றத்தார்; நீயே எனது உயிர்த் துணைவன்; என்ருன்.''

இதனல் மிருகத்தன்மையுள்ள குலத்திலே பிறந்த சுக்கிரீவனை இராமன் தன் சகோதரனுகத் தழுவிக் கொண்டதைக் காணலாம். இங்கும் அன்பு சாதி பேதத்தைத் தகர்த்தெறிந்தது.

## விபீடணன்

இதன்பின், அறிவிருந்தும் அடாத செய்யும் அரக்கர் குலத்திலே பிறந்த இராவணன் சகோதரனுகிய வீபிஷணனையும் அவனுடைய பிறப்பைக் கருதாமல் உடன் பிறந்தானுக ஏற்றுக்கொண்ட நிகழ்ச்சியைக் கம்பன் கூறுகின்ருன்.

விபீஷணன் இராமன் பால் நெஞ்சங்கலந்த நேசங் கொண்டவன். அவனுடைய அன்பு உண்மையானது; தூய்மையானது; இடையிலே எக்காரணத்தாலும் அறுந்துபோகாத உறுதியுள்ளது. இவ்வுண்மையை உணர்ந்தான் இராமன். ஆதலால், அரக்கர் குலத்திலே பிறந்தவன்—தனக்குத் தீங்கிழைத்த இராவணன் கூடப் பிறந்தவன் —கொடுமையே உருவான அரக்கர்களுடன் கூடி வாழ்ந்தவன்—என்று கருதாமல், அன்பின் காரணமாக அவனையும் தன் உடன் பிறந்தானுகக்கொண்டான்.

"குகனொடும் ஐவரானேம் முன்பு, பின்
குன்று சூழ் வான்
மகனொடும் அறுவர் ஆனேம்;
எம் அழை அன்பின் வந்த
அகன் அமர் காதல் ஐய!
நின்னொடும் எழுவர் ஆனேம்,
புகல் அரும் கானம் தந்து
புதல்வரால் பொலிந்தான் உந்தை.
(யுத்த, விபீடணன் அடை 146)

முன்பு நான்கு சகோதரர்களாயிருந்த நாங்கள் குகனொடு நட்புக்கொண்டபின் ஐந்து சகோதரர்கள் ஆனோம். சூரிய குமாரனாகிய சுக்கிரீவனுடன் சேர்ந்தபின் ஆறு சகோதரர்கள் ஆனோம். எம்மிடத்தில் அன்பினால் இழுக்கப் பட்டுவந்த உள்ளம் நிறைந்த அன்புள்ளவனே! உன்னோடு இப்பொழுது சேர்ந்து ஏழு சகோதரர்கள் ஆனோம். உன் தந்தையாகிய தசரதன், முன்பு நான்கு புதல்வர்களையே பெற்றிருந்தான்; இப்பொழுது ஏழு புதல்வர்களைப் பெற்றுச் சிறப்படைந்தான்."

அன்பும் ஒழுக்கமுமே சகோதரத்துவத்திற்கு அடிப் படை என்பதை இந்தப் பாட்டும் விளக்கிக் காட்டு கின்றது.

## உண்மைக் கருத்து

குகனை, சுக்கிரீவனை, விபீஷணனை இராமன் தன் உடன் பிறந்தவர்களாகக்கொண்ட நிகழ்ச்சிகளிலே உள்ள உண்மையை உற்று நோக்கவேண்டும். இவ்வுண்மையைக் காணும் அறிஞர்களுக்குக் கம்பன் ஏன் இராமாயணக் கதையைப் பாடினான் என்பது விளங்கும்.

குகன் பிறந்த குடி நாகரிகம் பெறாத குடி; நன்மை தீமைகளைப் பகுத்தறியாத குடி; அக்குடியினர் நாட்டு வாழ்க்கையை நன்றாகக் கண்டறியாதவர்கள்; காட்டிலும் மலையிலும் வாழ்ந்து காலம் கழிப்பவர்கள்; வயிற்றை நிரப்பி உயிர் வாழும் வாழ்க்கை ஒன்றையே பெரிதாகக் கருதுகின்றவர்கள்; கொலை வினையாகிய வேட்டைத் தொழிலையே விரும்பி வாழ்கின்றவர்கள்; இத்தகைய

குடியிலே பிறந்த குகனை அவனுடைய உள்ளத் தூய்மை கருதி—அவன் சுற்றத்தாரும் அவனைப்போலவே மனத் தூய்மையுள்ளவர்கள் என்பதைக் கருதி—அவனைச் சகோதரனுகக் கொண்டான்; அவனுடைய உறவினரையும் தன்னுடைய உறவினராகக் கொண்டான்.

சுக்கிரீவன் முழு மனிதத்தன்மை பெறுத குடியிலே பிறந்தவன். குகனுடைய குடியைக் காட்டினும் சுக்கிரீவன் பிறந்த குடி இன்னும் கீழ்த்தரமுள்ளது. மனிதத்தன்மையே பெறுத குடி. ஆயினும் அவன் சிறந்த உண்மையன்புள்ளவன்; நன்றி மறவாதவன்; வஞ்சகமில்லாமல் உயிரைக் கொடுத்தும் உதவிசெய்யும் உயர்ந்த பண்புள்ளவன். அவனுடைய நண்பர்களும் உறவினர்களும் அப்படிப் பட்டவர்கள். ஆகையால் அவனுடைய குடிப்பிறப்பைக் கருதாமல் இராமன் அவனையும் தன் உடன்பிறந்தானுகக்கொண்டான்.

விபீஷணன், இராமனுக்குத் தீங்குசெய்த இராவணனோடு உடன் பிறந்தவன். அரக்கர் குடியிலே பிறந்தவன். குகன் பிறந்த குலத்தைவிட—விபீஷணன் பிறந்த குடி மிகவும் கீழ்த்தரமானது; வெறுக்கத்தக்கது. அறிந்தவர்கள் அறத்திற்கு மாருக நடப்பார்களானுல்—அறநெறியை அழிப்பார்களானுல்—மனமறிந்து மறநெறியைப் பின்பற்றி நடப்பார்களானுல்—அவர்களே கொடுமையானவர்கள்; வெறுக்கத்தக்கவர்கள்; மக்கள் சமுதாயத்திலிருந்து விலக்கத்தக்கவர்கள்.

அரக்கர்கள் அறிவற்றவர்கள் அல்லர், அறிவுள்ளவர்கள்; ஆற்றல் உள்ளவர்கள். நன்மை தீமைகளைப் பகுத்தறியும் திறமையுள்ளவர்கள். ஆயினும் பிறர் நலத்தைப்பற்றிச் சிறிதும் சிந்திக்காதவர்கள். தந்நலம் ஒன்றேதான் அவர்கள் வாழ்க்கையின் குறிக்கோள்; தந்நலத்தின் பொருட்டு எதையும் துணிந்து செய்யும் இயல்புள்ளவர்கள். தந்நலத்தின் பொருட்டுப் பொது மக்களை அவதிக்குள்ளாக்கும் அகங்காரம் படைத்த கும்பலே அரக்கர்கள்; அசுரர்கள். ஆதலால் விபீஷணன் பிறந்த அரக்கர் குலம் வேடர் குலத்தைவிட—குரங்கின் குலத்தைவிட—கொடுமையான குலம். அப்படியிருந்தும் அன்புள்ளவன்

என்பதற்காக—நீதிக்குப் போராடும் நேர்மையுள்ளவன் என்ற காரணத்திற்காக — நீதிக்குப் போராடுவதுதான் மனிதத்தன்மை என்பதை உணர்ந்தவன் என்ற காரணத்திற்காக விபீஷணனை இராமன் தன் உடன்பிறந்தானுகக் கொண்டான்.

பிறப்பினுல் உயர்வு தாழ்வு இல்லை. ஒழுக்கமே உயர்வுக்குக் காரணம். அறிவே பெருமைதரும். அறிவும், அன்பும், நல்லொழுக்கமும் உள்ளவர்கள் எக்குடியிலே பிறந்தவர்களானுலும் அவர்கள் உயர்ந்தவர்கள். இவ்வுண்மையை இராமன் குகனிடத்திலும், சுக்கிரீவனிடத்திலும், விபீஷணனிடத்திலும் காட்டிய சகோதரத் தன்மையே மெய்ப்பித்துக் காட்டுகின்றது.

இராமனுடைய சிறந்த நடத்தையைக் கருத்திலே கொண்டவன் கம்பன். யார் உயர்ந்தவர்கள், யார் தாழ்ந்தவர்கள் என்பதை இராமனுடைய வாழ்க்கையிலிருந்து அறிந்த கம்பன் தன உணர்ச்சியை ஒரு பாடலில் தெளிவாகக் கூறியிருக்கின்றுன்.

" தக்க இன்ன தகாதன இன்ன என்று
ஒக்க உன்னலர் ஆயின் உயர்ந்துள
மக்களும் விலங்கே, மதுவின் நெறி
புக்கவேல் அவ்விலங்கும் புத்தேளிரே.

(கிட்கிந்தா, வாலி 112)

செய்யத்தக்க செயல்கள் இன்னவை; செய்யத்தகாத செயல்கள் இன்னவை, என்று இருவகைச் செயல்களையும் நடுவு நிலையிலிருந்து ஆராய்ந்து செய்யாதவர்களானுல், உயர்ந்த மக்கட்பிறவி எடுத்திருந்தாலும் அவர்கள் உண்மையான மக்கள் அல்லர்; விலங்குகளே யாவர். அறநூல்களின் வழியைப் பின்பற்றி நடப்பனவாயின் அத்தகைய விலங்குகள் உருவில் விலங்குகளாயிருப்பினும் ஒழுக்கத்தில்—பண்பில்—தேவர்களாகும்." இச்செய்யுளின் கருத்தைக் குகன், சுக்கிரீவன், விபீஷணன் ஆகியவர்களின் பண்புகளுடன் இணைத்துப் பார்க்க வேண்டும்.

# 7. மதுவும் மாமிசமும்

பண்டைக்காலத்தில் எந்த நாட்டிலும் மதுவருந்துதலும், புலால் புசித்தலும் பாவம் என்று எண்ணப்படவில்லை; தீமையென்று கருதப்படவில்லை; எல்லா நாட்டு மக்களும் இவைகளை உயர்ந்த உணவுப் பொருள்களாக உட்கொண்டனர். இன்றும் உலகில் உள்ள பெரும்பாலான மக்கள் புலால் புசிப்பவர்களாகத்தான் இருக்கின்றனர். மதுவருந்துதலையும் இன்ப நுகர்ச்சிக்கு ஏற்றதாக எண்ணுகின்றனர்.

மதுவுக்கு ஒரு கெட்டகுணம் உண்டு. அது அருந்தியவனுக்கு மயக்கத்தை உண்டாக்கும்; அவன் மனநிலையை மாற்றித் தடுமாற்றத்தை உண்டாக்கும்; இதுவே மதுவின் கெட்ட தன்மை. ஆதலால் மதுவுண்டு மகிழ்ந்து ஆடுவோரைக் குடிகாரர்கள் என்று நகைக்கின்றனர்; காலாகாலமின்றி கண்டபொழுதெல்லாம், நினைத்த நேரமெல்லாம் மதுவுண்டு மயங்கித் திரிவோர் மனித சமூகத்திற்கே பயன்படாமல் போய்விடுகின்றனர். அவர்கள் மக்களால் வெறுக்கப்படுகின்றனர். இந்நிலை பண்டும் இருந்தது; இன்றும் உண்டு. இந்நாட்டிலும் உண்டு; எந்நாட்டிலும் உண்டு.

### சமண புத்த மதங்கள்

நமது நாட்டில் சமண பௌத்த மதங்கள் தலையெடுத்த பின்பே மதுவும் மாமிசமும் வெறுக்கப்பட்டன. "மாமிசம் உண்ணுவது பாவம்; சீவகாருண்யமற்ற செயல்; உயிர்க் கொலை வளர்வதற்கு அடிப்படை; என்றெல்லாம் பேசப்பட்டன; எழுதப்பட்டன. மதுவுண்டல் பஞ்சமாபாதகங்களில் ஒன்றென்று அறநூல்களில் எழுதிவைத்தனர்.

சமண—பவுத்த மதங்கள் பரவுவதற்கு முன்பு மதுவையும் மாமிசத்தையும் வெறுக்கும் கொள்கை இந்நாட்டில் இல்லை. வேதகாலத்தில் எல்லோரும் மது மாமிசங்கள்

உண்டனர். வடமொழி நூல்களிலும், தமிழ் நூல்களிலும் இவ்வுண்மையைக் காணலாம். சங்ககாலத் தமிழ் இலக்கியங்களிலே மதுவும் மாமிசமும் நிரம்பிக் கிடக்கின்றன. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, ஆகிய சங்க இலக்கியங்களிலே மதுவும் மாமிசமும் கலந்து மணம் வீசுவதைக் காணலாம். பெருமன்னர்கள், சிற்றரசர்கள், வள்ளல்கள், அனைவரும் தம்மிடம்வந்த விருந்தினர்க்கும், இரவலர்க்கும் வேண்டியமட்டும் மதுவும் மாமிசமும் அளித்து அயர்வு தீர்த்தனர்; என்று அந்நூல்களிலே காணப்படுகின்றன.

கபிலர், ஔவையார் போன்ற அருந்தமிழ்ப் பேரறிஞர்களெல்லாம் மதுவும் மாமிசமும் உண்டு மகிழ்ந்தனர். மதுவுண்டல் பஞ்சமாபாதகத்துள் ஒன்று; மாமிசம் உண்டல் இரக்கமற்ற தன்மை, என்ற கொள்கை சங்க காலத்திலோ அதற்குமுன்போ தமிழ்நாட்டில் இருந்ததில்லை.

பிற்காலத்தில்தான் மாமிச வெறுப்பும், மதுவிலக்கும் தமிழ் இலக்கியங்களிலே புகுந்தன. இவைகள் இடம் பெற்ற முதல் இலக்கியம் திருக்குறள். திருக்குறளுக்கு முற்பட்ட எந்த இலக்கியங்களிலும் மாமிசமும், மதுவும் விலக்கப்படவில்லை; வெறுக்கப்படவும் இல்லை.

சமண புத்த மதங்களைச் சைவத்தின் பெயராலும், வைணவத்தின் பெயராலும் எதிர்த்த காலத்தில்தான் மதுவையும், மாமிசத்தையும் தமிழர்களில் ஒரு பிரிவினர் வெறுத்தனர்; விலக்கினர். சமண பவுத்த மத தத்துவங்கள் பலவற்றைச் சைவ வைணவர்கள் எடுத்துக்கொண்டு, தங்கள் தத்துவ நூல்களை எழுதியதுபோலவே, அவர்களுடைய ஒழுக்கங்களிலே சிறந்த உயர்ந்த ஒழுக்கங்களையும் ஒப்புக்கொண்டனர். மதுவிலக்கும், மாமிச விலக்கும் இச் சிறந்த ஒழுக்கங்களைச் சேர்ந்தனவாகும்.

சமண—புத்த மதங்களுக்குத் தமிழ் நாட்டிலிருந்த செல்வாக்கு காரணமாக—மது மாமிச விலக்கைச் சைவ வைணவர்கள் ஏற்றுக்கொண்டதன் காரணமாக—தமிழ் நாட்டிலே மாமிசம் உண்ணாதவர்கள் உயர்ந்த நாகரிகம் உள்ளவர்களாக எண்ணப்பட்டனர்; கள்ளுண்ணாதவர்கள் அறிவும் ஒழுக்கமும் அமைந்தவர்களாகக் கருதப்பட்டனர்.

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்."

கொல்லாவிரதத்தை மேற்கொண்டவனை — புலால் உணவை வெறுத்தவனை—எல்லா உயிர்களும் கைகுவித்து வணங்கும்" என்ற வள்ளுவர் கொள்கைக்குத் தமிழ் நாட்டிலே பெருமதிப்பிருந்தது.

இந்தக் காலநிலையை ஒட்டியே கம்பன் தனது காவியத்திலே இராமனைப் புலால் புசிக்காதவனாகக் காட்டினான்; மதுவருந்தாதவனாக வைத்தான். எந்த அறிஞர்களாலும், ஆன்றோர்களாலும் மதுவும் மாமிசமும் வெறுக்கப்படாத காலத்தில் எழுதப்பட்டது வால்மீகி ராமாயணம். அப்பொழுது மக்களிடையிலே பரவியிருந்த ஒழுக்கத்திற்கேற்ப இராமனுடைய நடவடிக்கைகளை எழுதிவைத்தான் வால்மீகி. வால்மீகி இராமாயணம் தோன்றிய காலத்தில், இந்நாட்டில்—இவ்வுலகில்—தமிழர்களை உள்ளிட்ட எல்லோரும் மதுவும் மாமிசமும் உண்டவர்கள்தாம். அக்காலத்தில் மது மாமிச உணவு காரணமாக ஒருவர்க்கு உயர்வோ தாழ்வோ ஏற்பட்டதில்லை. அறிவு - செயலாற்றுந்திறமை - நல்ல நடத்தை இவைகள் காரணமாகவே உயர்வு தாழ்வுகள் உண்டாகியிருந்தன.

வால்மீகிராமனையே கம்பனும் தனது காவியத்தில் அப்படியே காட்டியிருப்பானாயின், தமிழ் நாட்டினர் அக்காவியத்தைக் கருத்தூன்றிப் படிக்கமாட்டார்கள். கம்பன் காலத்திலிருந்த மக்களின் மனநிலைக்கு ஏற்ப இராமனைக் காய்கறி உணவுண்பவனாகச் சித்திரித்தான். இராமன் உணவுண்ணும் நிகழ்ச்சியைச் சொல்லும்போதெல்லாம், காய், கனி, கிழங்குகளையே உண்டான் என்று மறந்துவிடாமல் சொல்லுகின்றான். மது மாமிச ஒழிப்புக்குத் தமிழ்நாட்டில் பெருமதிப்பிருந்த காரணத்தால்தான் கதாநாயகனாகிய இராமனை இறுதிவரையிலும் மதுமாமிசம் உண்ணாதவனாகவே குறித்துச் சென்றான். இத்தகைய கம்பனுடைய கவித் திறமையை யார்தான் பாராட்டாமலிருக்கமுடியும்?

## இராமன் உணவு

இராமனும், சீதையும், இலக்குவனும் கங்கைக் கரையை அடைந்தனர். அவர்களை அங்கிருந்த முனிவர்கள் எதிர்கொண்டு வரவேற்றனர். அவர்கள் காயும் கிழங்கும் காட்டிலே தேடிக்கொண்டுவந்தனர். இராமனைக் கங்கையிலே நீராடி, நாட்கடன்களை முடித்தபின் அவற்றை அருந்தவேண்டும் என்று அவர்கள் வேண்டிக்கொண்டனர். இராமனும் அவ்வாறே செய்தான்.

"காயும் கானில் கிழங்கும்கனிகளும்
தூய தேடிக்கொணர்ந்தனர்; தோன்றல்நீ
ஆயகங்கை அரும்புனல் ஆடினை,
தீயை ஓம்பினை செய்அமுது என்றனர்,"

(அயோத்தி, கங்கை. 15.)

காட்டிலே கிடைக்கும் உண்பதற்குரிய காய்களையும், கிழங்குகளையும், கனிகளையும் நல்லனவாகத் தேடிக் கொண்டு வந்தனர். பெருமையுள்ள இராமனே, நீ, சிறந்த உயர்ந்த கங்கையிலே நீராடி, தீ வளர்த்து வேள்வியை முடித்தபின் இவைகளை உண்டு களை தீர்க, என்று வேண்டிக் கொண்டனர்"

இப்பாட்டு, இராமன் அயோத்தியை விட்டுக் காட்டை யடைந்தவுடன் உண்ட உணவைக் குறிப்பது. இதனையே மீண்டும் கம்பன் கூறுவதை மற்றொரு நிகழ்ச்சியிலும் காணலாம்.

குகன் இராமனைக் கண்டான்; அன்பின் வசமானான். இராமனும் குகனை அன்புடன் உட்காரும்படி உரைத்தான். குகன் உட்காரவில்லை. நின்றபடியே அளவுகடந்த அன்புடன் ஒரு விண்ணப்பம் செய்தான்.

"இங்கே அமர்க! என்று இராமன் உரைத்தான். ஆயினும் குகன் உட்காரவில்லை. அளவற்ற அன்புள்ளவனாய் "உண்பதற்கு ஏற்றதாகத் தேனையும் மீனையும் பக்குவம் செய்து கொண்டு வந்திருக்கின்றேன். தங்கள் திருவுள்ளம் யாதோ" என்று வணக்கத்துடன் கேட்டான்.

உடனே இராமன் பக்கத்திலிருந்தவர்களையும், குகனையும் பார்த்துப் புன்முறுவலுடன் கூறத் தொடங்கினன்.

அரியனவற்றை — நாம் உவக்கும்படி — உள்ளன்பு நிறைந்த காதலுடன் செய்து, கொண்டு வரப்பட்டன வென்றால் அவை அமுதத்தை விடச் சிறந்தனவாகும்; அன்போடு அமைக்கப்பட்டது எதுவாயினும் அது குற்ற மற்றது; பரிசுத்தமானது; எம்போன்றவர்களுக்கு ஏற்ற தும் ஆகும்; இனிமையோடு நாம் உண்டது போன்றது மாகும்; அல்லவா? என்று ஒரு கேள்வியோடு இராமன் தன் உள்ளக் கருத்தை உரைத்தான்.'' இப்பொருள் கொண்ட பாடல்களே கீழ்வரும் இரண்டு பாடல்களும்.

**இருத்தி யீண்டு எனன்லோடும்**
**இருந்திலன், எல்லை நீத்த**
**அருத்தியன்; தேனும் மீனும்**
**அமுதினுக்கு அமைவதாகத்**
**திருத்தினென், கொணர்ந்தேன் எனகொல்**
**திருஉளம்? என்ன, வீரன்**
**விருத்த மாதவரை நோக்கி**
**முறுவலன் விளம்பல் உற்றான்** (அயோ, கங்கை 41)

**அரியதாம் உவப்ப உள்ளத்து**
**அன்பினால் அமைந்த காதல்**
**தெரிதரக் கொணர்ந்த என்றால்**
**அமுதினும் சீர்த்த அன்றே!**
**பரிவினால் தழிஇய என்னில்**
**பவித்திரம்; எம்மனோர்க்கும்**
**உரியன; இனிதின் நாமும்**
**உண்டனம் அன்றோ! என்றான்** (ஷை 42)

இவ்வாறு நயமாகக் கூறி, குகன் மனங்கோணாதபடி அவனுக்கு மகிழ்ச்சியூட்டினான் இராமன். இக்கருத்தையே மீண்டும் கிஷ்கிந்தா காண்டத்தில், இலக்குவன் சொல் லால் எடுத்துக் காட்டுகின்றான் கம்பன்.

"பச்சிலை கிழங்கு, காய் பரமன் நுங்கிய
மிச்சிலே நுகர்வது, வேறுதான் ஒன்று
நச்சிலேன். (கிட்கிந்தா. கிட்கிந்தை. 114)

இராமன் உண்ட பச்சிலை, கிழங்கு, காய்களின் மீதத்தையே நான் உண்பது வழக்கம். இதைத் தவிர வேறு ஒன்றையும் நான் விரும்புவதில்லை"

"கானிடைப் புகுந்து இரும்கனி
காயொடு நுகர்ந்த
ஊன்உடைப் பொறை உடம்பினன்
(யுத்த. வருணனை 12)

காட்டிலே புகுந்து மிகுந்த பழங்களையும், காய்களையும் உண்ட, ஊன் அமைந்த பாரமாகிய உடம்பை உடையவன்" இவ்வாறே இராமன் மதுமாமிசம் உண்ணாதவன்என்பதைப் பல விடங்களிலும் காட்டிச் செல்கின்றான் கம்பன்.

விபீஷணன் நல்லொழுக்கமுள்ளவன்; நீதிநெறி தவறாதவன்; என்பதை விளக்கும் இடத்தில் அவனும் மது மாமிசத்தை விலக்கியவன் என்றே கூறுகின்றான் கம்பன். இந்த உண்மையை அநுமான் வாயால் அறிவிக்கின்றான்.

"நிந்தனை நறவமும் நெறியில் ஊன்களும்
தந்தன கண்டிலென். (யுத்த. வீடணன் அடை 100)

பழிக்கு ஆளாக்கும் மதுவும், நன்னெறிக்குமாறான புலால் போன்ற உணவுகளையும், சேர்த்து வைத்திருப்பதை நான் காணவில்லை." இது விபீஷணனைப் பற்றி அநுமான் உரைத்தது. தான் இலங்கையிலே சீதையைத் தேடித் திரிந்தபோது விபீஷணனுடைய இல்லத்திலே கண்ட காட்சியைக் கூறினான்.

மதுவருந்துதலின் தீமையைப் பற்றிக் கம்பன் பல விடங்களிலே கூறியிருக்கின்றான். அவைகளிற் சிலவற்றைக் கீழே காணலாம்.

இராமன்காட்டுக்குப் புறப்படும் போது பரதன் ஊரில் இல்லை; பாட்டன் வீட்டுக்குப் போயிருந்தான். இராமன்

காட்டுக்குப்போனபின்புதான் அவன் அயோத்திக்கு வந்தான். தன் தாய் கைகேசியினுல் நிகழ்ந்த விளைவை அறிந்து வருந்தினன். இராமனுடைய அன்னை கோசலையின் அடிகளை வணங்கினுன். அவள் பரதன் உள்ளத்தைப் பரிசோதிக்கும் பொருட்டுக் " கைகேயி செய்த வஞ்சனை உனக்குத் தெரியாதா ?" என்றுகேட்டாள். உடனே பரதன்.

" அவள் ஆற்றிய வஞ்சனையை நான் அறிந்திருப்பேனுயின்—நானும் அவ்வஞ்சனைக்கு உடந்தையாக இருந்திருப்பேனுயின் நான் மாபாதகன் ; பெரும்பெரும் பாவங்களைப் புரிந்தவர்கள் அடையும் நரகத்தையடைவேன் ;" என்று ஆத்திரத்துடன் அறைந்தான். அப்போது அவன் தொகுத்துரைத்த பாவங்களிலே மதுபானத்தையும் ஒரு பாவமாகக் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது.

"கன்னியை அழிசெயக் கருதினேன், குரு
பன்னியை நோக்கினேன்; பருகினுன் நறை;
பொன் இகழ் களவினில் பொருந்தினேன், என
இன்னவர் உறுகதி என்னது ஆகவே.
(அயோத்தி. பள்ளி. 109)

கன்னியை—மணமாகாத பெண்ணைக் கற்பழிக்க நினைத்தவன் ; குருவின் மனைவியைக் கெட்ட எண்ணத்துடன் நோக்கியவன் ; மதுவை அருந்தியவன்; பொன்னைத் திருடிச் சேர்க்கும் இழிதொழிலிலே ஈடுபட்டவன் : இவர்கள் அடையும் கதியை நானும் அடைவேன்" இதனுல் மதுவுண்டல் மகாபாவம் என்று கூறினுன்.

"பூவியல் நறவம் மாந்திப்
புந்திவேறு உற்றபோது
தீவினை இயற்றும்.
(கிட்கிந்தா. வாலிவ 127)

மலர்களிலிருந்து எடுக்கப்பட்ட தேனை நுகர்ந்து அறிவு வேறுப்பட்டபோது—அவ்வறிவு தீவினைகளைச் செய்யத்தூண்டும்" என்று வாலியின் வாயினுல் மதுவின் தீமையைக் கூறினுன்.

"வஞ்சமும், களவும், பொய்யும்,
மயக்கமும், மரபில் கொட்பும்,
தஞ்சம் என்றாரை நீக்கும்
தன்மையும், களிப்பும் தாக்கும்,
கஞ்சமெல் அணங்கும் தீரும்,
கள்ளினால்; அருந்தினாரை
நஞ்சமும் கொல்வது அல்லால்
நரகினை நல்காது அன்றே.
(கிட்கிந்தா. கிட்கிந்தை. 95)

வஞ்சகம் செய்யத்தூண்டும்; களவு செய்யத்தூண்டும்; பொய்யுரைக்கத்தூண்டும்: மயக்கத்தை உண்டாக்கும்; முறையற்ற வழியிலே அறிவை அலையச்செய்யும்; சரணம் அடைந்த வரை உதைத்துத் தள்ளச்செய்யும்; நற்குணத்தையும் மகிழ்ச்சியையும் அழிக்கும்; செல்வமும் நீங்கிவிடும்; இத்தீமைகள் எல்லாம் மது பானத்தால் உண்டாகும். கள்ளுண்டவர்களை அக்கள்ளில் உள்ள நஞ்சே கொன்றுவிடும். அல்லாமலும் நரகத்தையும் நல்காமல் விட்டு விடுமா? ஒருக்காலும் விடாது"

இவ்வாறு சுக்கிரீவன் வாயினால் சொல்லிக் காட்டினான் கம்பன். கள்ளின் கொடுமையை அறிந்த சுக்கிரீவன் "இனிமதுவருந்துவதில்லை. அதைக்கையாலும் தொடுவதில்லை; கருத்தாலும் எண்ணுவதில்லை; என்று உறுதி கூறுகின்றான்.

"அய்யநான் அஞ்சினேன் இந்
நறவினின் அரியகேடு;
கய்யினால் அன்றியேயும்
கருதுதல் கருமம் அன்றால். (ஷை 97)

அய்யனே நான் இந்த மதுவினால் வரும் பெருங்கேட்டுக்கு அஞ்சினேன். இனி என்கையால் மதுவைத் தீண்டவே மாட்டேன். நெஞ்சத்தாலும் அதை நினைக்க மாட்டேன்; மதுவை நெஞ்சத்தால் நினைப்பதும் தீமையாகும்; நற்செயல் ஆகாது."

மதுவுண்ணும் பழக்கமுள்ள சுக்கிரீவன் இவ்வாறு மது பானத்தைச் கடிந்து வெறுத்ததாகக் கூறுகின்ருன் கம்பன்.

கம்பன் காலத்தில் மதுவிலக்கும், மாமிசம் உண்ணுமையும் நல்லொழுக்கத்திற்கு அடிப்படையென்று அறிஞர்கள் எண்ணினர். அவ்வெண்ணத்தைக் கம்பனும் ஒப்புக்கொண்டான. அதைத் தன் காவியத்திலே புகுத்திப்பாடி வைத்தான். இதனுல் காலத்தின் போக்கறிந்த சிறந்த கவிஞன் கம்பன் என்பது தெளிவாகின்றது.



# 8. ஒருவனும் ஒருத்தியும்

மக்கள் காட்டு மிராண்டிகளாக—நாகரிகம் அற்றவர்களாக வாழ்ந்த காலத்திலே அவர்களிடம் இருந்த பழக்க வழக்கங்கள் வேறு. நாகரிகம் வளர்ந்த காலத்தில் அப் பழக்க வழக்கங்களிலே பல மாறுபாடுகள் உண்டாயின. தீயன பல தேய்ந்து மடிந்தன; நல்லன பல நிலைத்து வளர்ந்தன.

நாகரிகம் இல்லாத காலத்தில் ஆண்பெண் உறவிலே கட்டுப்பாடுகள் இல்லை: மணவாழ்வு பற்றிய ஒழுங்கு முறைகள் இல்லை. ஒருத்தன் தன் சக்திக்கேற்றவாறு பல பெண்களை மனைவிகளாகக் கொண்டான்; ஒருத்தி தன் பலத்திற்கேற்றவாறு பல ஆண்களைக் கணவர்களாகக் கொண்டாள். ஒருவனுக்கு ஒருத்திதான் மனைவி; ஒருத்திக்கு ஒருவன்தான் கணவன்; என்ற கட்டுப்பாடு அக்காலத்தில் இல்லை.

## பழந்தமிழர் மணம்

மக்கள் காட்டு மிராண்டிப் பருவத்திலிருந்து நாகரிக நிலைக்கு வந்தபின் ஆண் பெண் உறவிலே கட்டுப்பாடு ஏற்பட்டது. ஒரு பெண் பல ஆண்களுடன் சேர்ந்து வாழும் வழக்கம் தடை செய்யபபட்டது. ஆண்களே சமுதாயத் துறையில் ஆதிக்கம் பெற்றிருந்தனர். ஆதலால் ஒரு ஆண் பல பெணகளுடன் சேர்ந்து வாழ்வதைத் தடை செய்யவில்லை. பல பெண்களை மணப்பதற்கும் அனுமதித்தனர். பலதார மணம் அறிஞர்களாலும், அற நூல்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டது.

பண்டைத் தமிழர் சமுதாயத்திலே பலதார மணம் வேரோடியிருந்தது. ஆண்கள் எத்தனை பெண்களை வேண்டுமானாலும் மணந்து கொள்ளலாம்; மணந்து கொண்ட மனைவிமார்களைத் தவிர வேறு பல பெண்களையும் காதற் கிழத்தியர்களாக—வைப்பாட்டி மார்களாக வைத்துக்கொள்ளலாம்; விலை மாதர் வீடுகளுக்கும் ஆண்

கள் சென்று வரலாம். ஆண்களின் நன்மைக்காகவே—இன்ப வாழ்வுக்காகவே—பொது மாதர், கணிகையர், விலை மகளிர், பரத்தையர் என்ற பெயர்களுடன் பல பெண்கள் வாழ்ந்து வந்தனர். இவர்கள் மணம் புரிந்துகொள்ளாத பெண்கள் ; இவர்களுக்கு வரைவின் மகளிர் என்பது ஒரு பெயர். வரைவின் மகளிர்—மணமற்ற பெண்கள்.

ஆண்களின் இத்தகைய அடக்கமற்ற போக்கைப் பெண்கள் விரும்பவில்லை. தம்மைப்போலவே ஆண்களும் ஒருத்தியுடன் உறைந்து இன்புறவேண்டும் என்பதே அவர்கள் எண்ணம். இதன் காரணமாகப் பெண்களுக்கும் ஆண்களுக்கும் அடிக்கடி குடும்பங்களிலே சண்டைகள் நடந்து வந்தன. பல பெண்களை மணந்துகொண்டவர்கள்—காதற் கிழத்தியர்களை வைத்திருப்பவர்கள்—விலை மாதர்களைத் தேடித் திரிபவர்கள் வீடுகளிலே அடிக்கடி பிணக்குகளும் போராட்டங்களும் நடந்தன. இவ்வாறு கணவன் மனைவிகளுக்குள் பிணக்குகளும், போராட்டங்களும் நடைபெறும்போது புலவர்களும், பாணர்களும், நண்பர்களும் இவர்களுக்குள் சமாதானத்தை ஏற்படுத்துவார்கள். இந்த நிகழ்ச்சிகளைப் பழந் தமிழ் இலக்கியங்களிலே—அகப்பொருள் நூல்களிலே காணலாம்.

"காதல் இருவர் கருத்து ஒருமித்து ஆதரவுபட்டதே இன்பம்" என்பது நாகரிகம் நன்றாக வேரூன்றிய காலத்தில் தோன்றிய அறம். ஒருவனுக்கு ஒருத்தி என்ற இந்த நல்லறம் தமிழ் நாட்டிலே வளர்ந்தோங்கவேண்டும் என்பதே கம்பன் கருத்து.

ஒருவனுக்கு ஒருத்தி என்பதே ஏகதார மணமாகும். கம்பன் காலத்திலிருந்த அறிஞர்கள் ஏகதார விரதத்தையே உயர்வாகப் போற்றினர். கம்பன் காலத்தில் தமிழகத்தில் பல தார மணம்தான் நடைமுறையிலிருந்தது. ஏக தார மணம் உயர்ந்தது ; அதுவே சமுதாயத்தில் நடைமுறைக்கு வரவேண்டும் ; என்று அறிஞர்கள் விரும்பினர். ஏக தார விரதம் உள்ளவர்கள் உத்தமர்களாகவும், உயர்ந்தவர்களாகவும் எல்லோராலும் கொண்டாடப்பட்டனர்.

## இராமன் சிறப்பு

கம்பன் காவியத்தின் தலைவனுகிய இராமன் ஏகதார விரதம் கொண்டவன். அவன் மக்களால் பாராட்டப்படும் உயர்வு பெற்றதற்கான காரணங்களிலே இந்த ஏகதார விரதமும் ஒன்று. இராமன் தந்தையாகிய தசரதன் சிறந்த நீதிமானுகவும், உயர்ந்த பண்புள்ளவனுகவும், மக்களால் பாராட்டப்பட்ட மன்னவனுகவும் கூறப்படுகின்றுன். ஆயினும் அவனுக்குப் பட்டத்து மனைவியர் மூவர்; அவர்கள் கோசலை கைகேயி, சுமித்திரை என்பவர்கள். இவர்களைத் தவிர இன்னும் அறுபதினுயிரம் மனைவியர் இருந்தனராம். அறுபதினுயிரம் ஆண்டுகள் அரசாட்சி புரிந்த தசரதன் ஆண்டுக்கொரு மனைவி வீதம் அறுபதினுயிரம் பெண்களை மணந்துகொண்டான். இந்தத் தசரதன் புதல்வனுகிய இராமன் ஏக பத்தினி விரதமுள்ளவனுக வாழ்ந்தான். தந்தை காலத்து வழக்கத்தைத் தன் காலத்திலே மாற்றினுன்.

ஏகபத்தினி விரதமே சிறந்தது; ஒருவனும் ஒருத்தியும் உள்ளன்புடன் கூடி வாழும் இல்லற வாழ்க்கையே நல்லறமாகும்; இக்கொள்கையுள்ள கம்பன் இராம காதையில் தன் கருத்திற்கு ஆதரவிருப்பதைக்கண்டான்; தன் கருத்தைத் தமிழ் மக்களிடையிலே பரவச் செய்வதற்கு இவ்வரலாறே ஏற்றதாகும் என்று துணிந்தான்.

இலங்கையிலே சிறை வைக்கப்பட்டிருந்த சீதையை அனுமான் கண்டான். அனுமான் சீதையிடம் விடை பெற்றுத் திரும்பும்போது அவள் சில செய்திகளைக்கூறினுள். அப்பொழுது இராமனுடைய ஏகபத்தினி விரதத்தைப்பற்றியும் சீதை சிறப்பாகக் குறிப்பிட்டாள். இவ்வாறு சீதாபிராட்டியின் வாயிலாக ஏகபத்தினி விரதத்தின் பெருமையைக் கம்பன் வெளியிட்டிருக்கின்றுன்.

"வந்து எனைக் கைப்பற்றிய வைகல் வாய்
இந்த இப்பிறவிக்கு இருமாதரைச்
சிந்தையாலும் தொடேன் என்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்.

(சுந்தர, சூளாமணி. 34)

இராமன் மிதிலைக்குவந்து என்னை மணந்து என் கரத்தைப் பிடித்தபோது ஒரு உறுதிமொழியைக் கூறினான். இந்தப் பிறப்பிலே நான் என் உள்ளத்தால்கூட இரண்டு பெண் களைத் தொடமாட்டேன். உன்னை மட்டுந்தான் என் உள்ளத்தாலும் உடம்பாலும் தொட்டு வாழ்வேன்; என்று வரந்தந்தான். இத்தகைய வரந்தந்த அவன் சொற்களை அவனுடைய திருச் செவியிலே கூறுவாயாக."

இதனால் இராமனுடைய ஏகபத்தினி விரதத்தின் சிறப்பைக் காணலாம். இராமன் எல்லா மக்களாலும் போற்றப்பட்டதற்குக் காரணமானவைகளில் அவன் உறுதியாகக்கொண்டிருந்த ஏகபத்தினி விரதமும் ஒன்றாகும். இராவணன் மக்களால் வெறுக்கப்பட்டதற்கான காரணங்களில் அவன் பல பெண்களை மணந்தவன் என்பது ஒன்றாகும்.

## இராவணன் காமுகன்

இராவணனிடம், சூர்ப்பநகை சீதையின் அழகை யெல்லாம் புகழ்ந்து பேசுகின்றாள். சீதையை அடைய வேண்டும் என்னும் காம வெறியை அவன் உள்ளத்திலே ஊட்டுகின்றாள். அப்பொழுது அவள் வாயிலாக இராவணன் பல பெண்களை மணந்தவன் என்பதைக் கம்பன் காட்டுகின்றான்.

**"வள்ளலே உனக்கு நல்லேன்**
**மற்று நின் மனையில் வாழும்**
**கிள்ளைபோல் மொழியார்க்கெல்லாம்**
**கேடு சூழ்கின்றேன் அன்றே.**

(ஆரண்ய, மாரீசன் வதை 77)

வள்ளலே உனக்குமட்டுந்தான் நான் நல்லவன்; உன்னுடைய அரண்மனையிலே வாழும் கிளியைப்போல் உரையாடும் உனது காதலிமார்களுக்கெல்லாம் நான் கேடு செய்கின்றவளாக ஆவேன்."

இதனால் இராவணன் பலதார மணங்கொண்ட காமுகன் என்று காட்டினான் கம்பன். இராவணனைப்

போலவே அவன் மகன் இந்திரசித்தனும் பலதார மணம் பூண்டவன் என்பதைக் கம்பன் தன் வாயினுலேயே கூறு கின்ருன்.

அநுமான் இலங்கையிலே சீதையிருக்கும் இடம் எது வென்று தேடித்திரிந்தான்; தேடும்போது இந்திரசித்தன் அரண்மனையிலும் புகுந்தான். அங்கு இந்திரசித்தன் உறங்கிக்கொண்டிருந்தான். அதை அநுமான் பார்த்த நிலையைக் கம்பன் காட்டுகின்ருன்.

"ஒக்க நோக்கியர் குழாத்திடை
உறங்குகின்ருனைப்
புக்கு நோக்கினன் புகைபுகா
வாயிலும் புகுவான்.

(சுந்தர. ஊர்தேடு. 140)

ஒத்த பார்வையையுடைய பெண்கள் கூட்டத்தின் இடை யிலே உறங்கிக்கொண்டிருந்தான் இந்திரசித்தன். புகை நுழைய முடியாத வழியிலும் நுழைந்து செல்லும் திறமை யுள்ள அநுமான் அவன் அரண்மனையிலே புகுந்து, அந்த இந்திரசித்தனைப் பார்த்தான்."

இது இந்திரசித்தனும் பலதார மணங்கொண்டவன் என்பதைக் காட்டுகிறது. பலதாரம் மணம் புரிந்தவர்கள் காமுகர்கள்; புலன் அடக்கம்; அற்ற வெறியர்கள் ஏக பத்தினி விரதம் உள்ளவர்களே நல்லொழுக்கத்திலே நடப்பவர்கள்; மக்களால் போற்றத் தகுந்தவர்கள். இதுவே கம்பன் கருத்து. இக்கருத்தை விளக்குவது இராமாயணம் என்பதை அறிந்தே அவன் அந்தக் காவி யத்தைப் பாடினுன்.



# 9. இராவணன் இழிகுணம்

இராவணன் சிறந்த அறிவாளி; வீராதி வீரன் நற்குணங்கள் எல்லாம் நிரம்பியவன்; திறமைசாலி; மானத்தையே உயிராக் மதிக்கும் மாண்புள்ளவன்; வேதங்களைக் கரைகண்டவன்; சிவபக்தன்; தென்னாட்டவன்; தமிழன்; திராவிடன்; என்று புகழ்வோர் உண்டு.

இராமன் அறிவில்லாதவன்: கோழை; திறமையற்றவன்; மானத்தை மதிக்காதவன்; தீய நடத்தையுள்ளவன்; வட நாட்டவன்: ஆரியன்; தமிழர்க்குத்தீமை செய்தவன்; திராவிடர் இனத்தின் தீராப்பகைவன்; என்றெல்லாம் இகழ்வோரும் உண்டு.

இராவணனைப் பற்றியும், இராமனைப் பற்றியும் ஏறு மாறாகப் பேசுவோர் எந்த ஆதரவுகளைக்கொண்டு இப்படிக் கூறுகிறார்கள் என்பதைப்பற்றி நாம் கவலைப்படவேண்டாம். இத்தகைய ஆராய்ச்சி ஆரியர்—திராவிடர் என்ற வெறுப்பை அடிப்படையாகக்கொண்டு தோன்றியதென்பதில் ஐயமில்லை. இவர்கள் தங்கள் கூற்றுக்கு வால்மீகி ராமாயணத்திலே ஆதரவிருக்கின்றது. இன்னும் பல ராமாயணங்களிலே ஆதரவிருக்கின்றன; என்றெல்லாம் சொல்லுகின்றனர்.

இராவணனைப்பற்றி–இராமனைப்பற்றி இப்படிப் புதிய ஆராய்ச்சியிலே புகுந்திருக்கும் புலவர்கள் எல்லாம் கம்பன் கருத்தைப்பற்றிக் கூறவில்லை. கம்பன் கருத்திலே—கம்பன் காவியத்திலே—இப்புலவர்களின் கூற்றுக்கு ஆதரவில்லை. இதை நாம் மறந்துவிடக்கூடாது.

தமிழர் நாகரிகம் — பண்பு — உலகமெல்லாம் பரவ வேண்டும் என்ற கருத்துள்ள கம்பன் இராவணனை எப்படி மதிக்கின்றான்; இராமனை எப்படி மதிக்கின்றான்; என்பதைத்தான் நாம் ஆராய்வேண்டும்.

இராவணன் எவ்வளவு சிறந்தவனாயிருந்தாலும்—தென்னாட்டவனாயிருந்தாலும் அவன் ஒரு சமுதாயத்

துரோகி ; மக்கட் சமுதாயம் வெறுக்கத்தக்க பெரிய குற்ற வாளி. இராமன் யாராயிருந்தாலும், வட நாட்டவனுயிருந் தாலும் உத்தம குணமுள்ளவன் ; சமுதாயக் கட்டுப் பாட்டைச் சிதையாமல் காக்கவந்த வீராதி வீரன் ; இவை கள் கம்பன் கவிதையிலிருந்து நாம் காணும் உண்மை. இராமாயணத்திலிருந்து வடித்த சாரம். கம்ப ராமாயணத் தைக் கற்போர் இவ்வுண்மையை மறுக்கமாட்டார்கள்.

மணவாழ்க்கை என்பது நாகரிக மடைந்த மக்கள் சமுதாயததின் ஓர் உன்னதமான கொள்கை. மண வாழ்க்கையே மக்களிடம் தனித்தனிக் குடும்ப வாழ்க்கை முறையை ஏற்படுத்திற்று. இந்தக் குடும்ப வாழ்வு நன்ருக் நடை பெறுவதற்காகவே அரசாங்கம் தோன்றியது. இது மக்கள் நாகரிக வரலாற்றில் உள்ள உண்மை.

நாகரிகத்தின்—படியிலே அடி யெடுத்து வைக்காத காலத்தில்தான் ஆண்களும் பெண்களும் தங்கள் மனம் போன போக்கில் வாழ்ந்தனர். இப்படி இருந்தகாலம், தமக்கென்று உடையோ, உறைவிடமோ, உடைமையோ இல்லாமல் வாழ்ந்தகாலம். உணவுப் பொருளைக்கூட உற்பத்தி செய்யத் தெரியாமல், இயற்கையாகவே விளையும் காய், கனி, கிழங்குகளையும், பச்சை மாமிசங்களையும் தின்று காட்டு மிராண்டிகளாக வாழ்ந்த காலத்தில்தான் மண வாழ்க்கையின்றி வாழ்ந்தனர்.

மக்கள் தங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களை உற்பத்தி செய்துகொள்ளும் திறமை பெற்றனர். நாகரிகப் படியிலே ஏறத் தொடங்கினர். இதன் பிறகுதான் மண வாழ்க்கை என்ற முறை ஏற்பட்டது ; தனித்தனிக் குடும்ப வாழ்வும் ஏற்பட்டது. ஆரம்ப காலத்தில் ஒருவன் பல பெண்களை மணந்துகொண்டான் ; ஒருத்தி பல ஆண்களை மணந்துகொண்டாள். ஆங்காங்கே யிருந்த ஆண் பெண் களின் எண்ணிக்கையைப் பொறுத்தும், அவரவர்களின் ஆதிக்கத்தைப் பொறுத்தும் இந்நிலைமை ஏற்பட் டிருந்தது.

## பிறன்இல் விழையாமை

ஒருவனுக்கு ஒருத்தி ; அல்லது ஒருத்திக்கு ஒருவன்; என்ற மணமுறை மிகப் பிற்காலத்தில்தான் ஏற்பட்டது,

இந்த முறை ஏற்படுவதற்கு முன்பே ஒருவன் மனைவியை மற்றொருவன் காதலிப்பதைக் கூடா ஒழுக்கமாகக் கருதினர். மணம் என்ற வாழ்க்கை முறை எப்பொழுது தோன்றியதோ அப்பொழுதே பரதாரகமனம் தவறு என்ற கொள்கையும் தோன்றிவிட்டது. ஒருவன் மனைவியுடன் மற்றொருவன் கள்ள நட்புக் கொள்வதைக் கண்டித்தனர்; பிறன் மனைவியைக் காதலிப்பவனை ஒழுக்கமற்றவன், சமுதாயக் கட்டுப்பாட்டைக் குலைப்பவன், அறத்தைச் சிதைப்பவன், மக்களோடு ஒன்றுபட்டு வாழத் தகுதியற்றவன் என்று அறிஞர்கள் கருதினர்; இப்படி நடப்பவனைச் சமுதாயத்திலே இழிந்தவனாக எண்ணினர்.

ஒருவன் மனைவியை மற்றொருவன் தன்வசப்படுத்திக் கொள்ள ஆசைப்படுவதனால்—இம்முயற்சியிலே ஈடுபடுவதனால் சமுதாயக் கட்டுப்பாடு குலைந்துவிடும்; மணவாழ்க்கைக் கட்டுப்பாடு என்பதற்குப் பொருள் இல்லாமல் போய்விடும்; இக்கூடா ஒழுக்கத்தினால் சமூகத்திலே—சண்டை சச்சரவுகள்—அடிதடிகள்—குத்து வெட்டுக்கள்—கொலைகள் உண்டாகும். இந்நிகழ்ச்சியை இன்றும் காண்கின்றோம்; முன்னோர்களும் கண்கூடாகக் கண்டறிந்தனர். ஆதலால்தான் பிறர் மனைவியை விரும்புவதைக் குற்றங்களில் எல்லாம் பெருங் குற்றமாகக் குறித்துவைத்தனர்.

பிறர் மனைவியை விரும்புவது மன்னிக்க முடியாத பெருங்குற்றம்; இதுவே வள்ளுவர் வகுத்த அறங்களிலே தலை சிறந்தது. திருக்குறளில் உள்ள **பிறன் இல்விழையாமை** என்னும் அதிகாரத்தைப் படித்தால் போதும். பிறர் மனையை விரும்புவது எவ்வளவு பெரிய சமூகத் துரோகம் என்பதைக் காணலாம்.

'பிறர் பொருளாள் பெட்டு ஒழுகும் பேதைமை ஞாலத்து
அறம் பொருள் கண்டார்கண் இல் (கு. 141)

பிறனுக்கு உரிமையுள்ள மனைவியாகிய ஒருத்தியை விரும்பி ஒழுகுவது அறியாமை; இவ்வுலகிலே அறம் இன்

னது, பொருள் இன்னது என்பதை அறிந்தவர்களிடம் இத் தீயொழுக்கம் தோன்றுவதில்லை" இது அவ்வதிகாரத்தின் முதற் குறள்.

"அறன் கடை நின்ருருள் எல்லாம் பிறன்கடை
நின்ருரின் பேதை யார் இல்" (142)

தீயொழுக்கத்தைப் பின்பற்றி வாழ்கின்றவர்கள் எல்லாருள்ளும் பிறன் மனைவியை விரும்பி, அவன் வாயிற்படியிலே நின்றவர்களைப்போல மடையர்கள் ஒருவரும் இல்லை"

பிறன் மனைவியை விரும்புகின்றவனே கடைந் தெடுத்த மடையன் என்று கூறுகினறது இக்குறள்.

" பிறர் மனைவியை விரும்புகின்றவர் செத்தவர். (143)

பிறர் மனைவியை விரும்புகின்றவர் எத்தனைச் சிறப்புள்ளவராயினும் இழிந்தவர். (144)

பிறர் மனைவியை விரும்புவோன் எப்பொழுதும் அழியாத பெரும்பழியைப் பெறுவான். (145)

பிறன் மனைவியை விரும்புகின்றவனிடம் பகை, பாவம் அச்சம், பழி இந்நான்கும் என்றும் இணைந்திருக்கும். (146)

பிறன் மனைவியை விரும்பாதவனே அறத்தைப் பின்பற்றி இல்வாழ்க்கையிலே வாழ்கின்றவன் ஆவான். (147)

பிறர் மனைவியை விரும்பாமையே சிறந்த ஆண்மை; உயர்ந்த நடத்தை. (148)

பிறர் மனைவியைத் தீண்டாதவரே மக்களால் விரும்பத் தக்கவர். (149)

அறம் புரியாமல் பாவம் செய்கின்றவனே ஆயினும் பிறன் மனைவியை விரும்பாமையே சிறந்தது. (150)

இவைகளே ஏனைய குறள்களில் உள்ள கருத்துக்கள்.

பிறர் மனைவிழைதல் பெரும்பாவம்; பிறர் மனைவிரும்பாமை பேரறம்; என்பதை எல்லா நீதி நூல்களிலும்

காணலாம். இந்தியப் பண்பாட்டிலே இது ஒரு சிறந்த—உயர்ந்த—ஒழுக்கம்; சமுதாய நீதி; இந்நீதியைக் காப்பாற்றினால்தான் சமுதாயத்தில் ஒற்றுமையும், அமைதியும் கூடி நிலைத்து வாழும் என்பது அறிஞர் முடிவு.

இராவணனைப் புகழ்வோர், இராமனை இகழ்வோர் இந்தச் சமுதாய நீதியைச் சிதைத்தவன் இராவணனா? இராமனா? என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும்.

வள்ளுவர் வகுத்த இந்த நல்லறத்தை இராம காதையின் வாயிலாக வலியுறுததிக் காட்டுகின்றான் கம்பன். இதைக் கம்பன் கவிதைகளால் காண்போம்.

## வாலியின் குற்றம்

வாலிக்கும் இராமனுக்கும் பழம் பகைமை ஒன்றும் இல்லை. வாலியால் இராமனுக்கு எந்தக் கெடுதியும் உண்டாகவில்லை. இருந்தும் சுக்கிரீவனுக்காக வாலியைக் கொன்றான். வாலி கொல்லப்படுவதற்குரிய குற்றவாளிதான் என்பதை வள்ளுவர் அறத்தைக் கொண்டு மெய்ப்பிக்கின்றான் கம்பன். வாலி பிறன் மனைவியைக் கவர்ந்தவன்; அதுவும் தன் தம்பியின் மனைவியைத் தன் மனைவியாக்கிக் கொண்டவன். இதுதான் வாலியின் மீது இராமன் வாயுரையால் கம்பன் சுமத்தும் பெருங்குற்றம்.

**"ஈரம் ஆவதும், இற்பிறப்பாவதும்,**
**வீரமாவதும், கல்வியின் மெய்ந்நெறி,**
**வாரமாவதும், மற்றொருவன்புணர்**
**தாரம் ஆவதைத் தாங்கும் தருக்கரோ.**
(கிட்கிந். வாலிவதை 99)

இரக்கம் என்று சொல்லப்படுவது—உயர்ந்த குடிப் பிறப்பு என்று கூறப்படுவது—வீரம் என்று விளம்புவது—கல்வியினால் அறிந்த உண்மை நெறியென்று உரைக்கப்படுவது—அன்பு என்று கூறப்படுவது இவைகள் எல்லாம் மற்றொருவனுடைய தாரத்தைத் தன்னுடைய தாரமாகக் கொள்ளும் கர்வமா?"

**"தருமம் இன்னதெனும் தகைத் தன்மையும்,**
**இருமையும், தெரிந்து எண்ணலை; எண்ணினால்**

அருமை உம்பிதன் ஆருயிர்த் தேவியைப்
பெருமை நீங்கினை எய்தப் பெறுதியோ (ஷ 101)

தருமம் என்றால் இன்னது என்று நீ எண்ணிப் பார்க்கவில்லை: அதனால் அடையும் இம்மை மறுமைப் பயன்களை ஆராய்ந்து பார்க்கவில்லை; இவைகளைப்பற்றி யெல்லாம் நீ நினைத்துப் பார்த்திருப்பாயானால், அருமை யான உன் தம்பியின் ஆருயிர் மனைவியை நீ கவர்ந்து கொள்வாயா? உன் பெருமையை இழப்பாயா?"

இவ்விரண்டு பாடல்களாலும் வாலி செய்த பெருங் குற்றம் பிறன் மனைவியைக் கவர்ந்ததுதான் என்பதை விளக்கினான் கம்பன். இராவணன் மீதும் அவன் பிறன் மனைவியைக் கவர்ந்த குற்றமே பெருங் குற்றமாகச் சுமத் தப்படுகின்றது. இக் குற்றத்தைக் கம்பன் தன் வாயினாற் கூறாமல் இராவணனுக்கு உற்ற உறவினர்களின் வாயி னாலேயே உரைத்திருக்கின்றான்.

## இராவணன் குற்றம்

இராவணன் தன் மாமனாகிய மாரீசனிடம் போனான். சீதையின் மீது தான் கொண்ட காதலைக் கூறினான். அவ ளைக் கவர்ந்துகொண்டு வருவதற்குத் தனக்குத் துணை செய்யவேண்டும் என்று கேட்டான். அப்பொழுது மாரீசன் இராவணனுக்கு எடுத்துக் கூறும் அறம் பாராட்டத் தக்கது.

"நாரம் கொண்டார், நாடு கவர்ந்தார், நடையல்லா
வாரம் கொண்டார், மற்றொருவர்க்காய் மனைவாழும்
தாரம் கொண்டார், என்றிவர் தம்மைத் தருமந்தான்
ஈரும் கண்டாய்! கண்டகர் உய்ந்தார் எவர் ஐயா!
(ஆரண்ய, மாரீசன் 180)

நடுநிலைமை தவறிய அன்பு கொண்டவர்கள்; பிறர் நாட்டைப் பலவந்தமாகக் கவர்ந்தவர்கள்; ஒழுக்கமற்ற செயல்களிலே ஆசை கொண்டவர்கள்; மற்றொருவர்க்கு உரியவளாய், அவர் மனையிலே வாழும் தாரத்தைக் கவர்ந் தவர்கள்; இவர்களை யெல்லாம் தருமமே அழித்துவிடும்

பிறருக்குத் தீமை செய்யும் முட்போன்ற கொடியவர்களிலே எவர்தான் தப்பிப் பிழைத்தவர்கள் ?" இது இராவணன் மீது அன்புகொண்ட மாரீசன் அவனுக்குக் கூறிய அறிவுரை.

கும்பகருணன் இராவணனுடைய தம்பி, அவன் இறுதி வரையிலும் இராவணன் பக்கத்திலே நின்று போர் செய்தவன் ; அவனும் இராவணனை இடித்துக் கூறுகின்றான். சீதையைச் சிறையெடுத்த காரணத்தாலேயே அரக்கர்குலம் அழியக்கூடிய தீமைக்கு ஆளாயிற்று என்று அறிவுரை புகல்வதாகக் கம்பன் கூறுகின்றான்.

"ஆயிரம் மறைப்பொருள்
உணர்ந்து, அறிவமைந்தாய்!
தீவினை நயப்புறுதல் செய்தனை (யுத்த. மந்திரப் 48)

ஆயிரக்கணக்கான வேதப்பொருள்களை அறிந்தவன்; அறிவிலே சிறந்தவன் ; ஆயினும் தீவினையை விரும்புகின்ற காரியத்தைச் செய்து விட்டாய்."

இதனால் இராவணன் தன் கல்விக்கும் அறிவுக்கும் தகுந்த வழியிலே நடக்கவில்லையென்பதை வெளியிட்டான்.

"ஓவியம் அமைந்த நகர் தீ உண உலைந்தாய்,
கோவியல் அழிந்தது என வேறொரு குலத்தோன்
தேவியை நயந்து சிறைவைத்த செயல் நன்றோ!
பாவியர் உறும்பழி, இதிற்பழியும் உண்டோ? (ஷை 49)

சித்திரவேலைப் பாடுகள் நிறைந்த சிறந்த இலங்கை மாநகர், அநுமான் வைத்த தீயினால் அழிந்ததைக்கண்டு மனம் வருந்தினாய் ! அரசியல் நீதியே அழிந்தது என்று சொல்லும்படி, வேறொரு குடியிலே பிறந்தவனுடைய மனைவியை விரும்பினாய் ! அவளைக்கொண்டுவந்து சிறையிலே வைத்தாய் ! இச்செயல் நல்லதா ? நல்லொழுக்கமற்றவர்கள் செய்யும் பழிச்செயல் இது ; இதைவிடப் பெரும்பழி வேறு ஏதேனும் உண்டோ ?"

இவ்வாறு இராவணன் செய்த கொடுஞ்செயலைப் பழித்துக் கூறி மேலும் அவன் நாணமடையும்படி பல நல்லுரைகளைக் கூறுகின்றான் கும்பகருணன்.

" உன்னுடையமனைவி மார்கள்—உன்னிடம் காதல் கொண்டிருக்கும் உயிர்த்துணைவியர்கள்—உன்னைக் கண்டு சிரிக்கின்றனர். நீ மற்றொருவன் மனைவியாகிய சீதையின் காலிலே வீழ்ந்து, காமத்தால் கெஞ்சுவதைக்கண்டு அவர்கள் எள்ளி நகைக்கின்றனர். இது உனக்குப் புகழ் ஆகுமா? (ஷை 50)

மற்றொருவன் மனைவியைச் சிறிதும் இரக்கம் இல்லாமல் பலவந்தமாக எடுத்துக் கொண்டுவந்து சிறையிலே வைத்தாய். என்று இந்த அடாத செயலைச் செய்தாயோ, அன்றே அரக்கர்களின் புகழ் அழிந்துவிட்டது. அற்பச் செய்கையால் புகழ் அழியாமல் நிற்கும் என்று நினைப்பது அறிவுடைமையா? (ஷை 51)

என்றுமேலும் இடித்துரை கூறினான். இவ்வளவையும் இராவணன் உணர்ந்ததாகவோ, தன் செய்கைக்கு வருந்தியதாகவோ தெரியவில்லை. ஆதலால் மேலும் அவன் செய்கையைப் பழித்துக் கூறுகின்றான் கும்பகருணன்,

ஆசில்பரதாரம் அவை அம் சிறை அடைப்பேம்!
மாசில் புகழ் காதல் உறுவோம்! வலிமை கூரப்
பேசுவது மானம்! இடை பேணுவது காமம்.
கூசுவது மானுடரை! நன்று நம கொற்றம்! (ஷை 52)

பிறர் மனைவிமார்களாக இருக்கின்ற குற்ற மற்றவர்களையெல்லாம் கொண்டுவந்து அழகிய சிறையிலே அடைத்து வைப்போம்; இக்கொடுமையைச் செய்துவிட்டு, மாசற்ற புகழ்வேண்டும் என்று மனத்தால் காதலிப்போம்; மிகவும் பெருமையோடு, மானமே உயிரினும் சிறந்தது என்று உரையாடுவோம்; ஆனால் அறிஞர்கள் வெறுக்கத்தக்க காமத்தையே விரும்புகின்றோம். மனிதரைக்கண்டு நாணம் அடைகின்றோம். நமது வெற்றி—புகழ்—மிகவும் நன்று! நன்று!"

என்று இராவணன் நடத்தையை வெறுத்தான்; இகழ்ந்து நகைத்தான். அரக்கர் குலத்தலைவனாகிய இராவணன் செயலால், அக் குலத்தின் மானமேபோய்விட்டது என்று எடுத்துக் கூறினான். இவ்வளவோடு கும்பகர்ணன் ஆத்திரம் அடங்கவில்லை.

"சிட்டர் செயல் செய்திலை
குலச்சிறுமை செய்தாய் (ஷ 53)

நல்லோர்க் குரிய செயலை நீ செய்யவில்லை. நமது குலத்துக்கே சிறுமைதரும் வினையைச் செய்தாய்" என்று கடிந்து கூறினான் அவன்.

"ஆசில் பரதாரம் அவை அம்சிறை அடைப்பேம்" என்று கும்பகருணன் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது. இராவணன் சீதையைச் சிறை பிடித்தது முதற் குற்றம் அன்று. சீதையைச் சிறைபிடிப்பதற்கு முன்பே வேறு பல பெண்களையும் சிறை பிடித்திருக்கின்றான். பிறர் தாரம் விழைவது பெருங்குற்றம் என்று அவன் கருதுவதேயில்லை. யாரா யிருந்தாலும் சரி அழகான பெண்களைக் கண்டால் காமவெறி கொண்டு அவர்களைச் சிறையெடுப்பது இராவணனுடைய பிறவிக் குணம் என்பதைக் கும்பகர்ணன் வாயால் குறிப்பிட்டான் கம்பன்.

இவைகளைக் கொண்டு இராவணன் எத்தகைய ஈனச் செயல் உள்ளவன் என்பதைக் காணலாம். அவன் வள்ளுவர் அறத்திற்கு மாறாக நடந்தவன்; இந்தியப் பண்பாட்டுக்கு எதிராக நின்றவன்; சமூகத்துரோகி; மனிதத் தன்மை யில்லாதவன்; என்பதை அறியலாம். இத்தகைய குற்றங் குறைகளை இராமனிடம் காணவே முடியாது. உயர்ந்த நடத்தைக்கு எடுத்துக் காட்டாக நிற்பவன் இராமன். கம்பன் காவியத்தைக் கற்போர் இவ்வுண்மையைக் காண்பர். கம்பன் கருத்தை அறிந்தவர்கள் இராவணன் உயர்ந்தவனா? இராமன் உயர்ந்தவனா? என்ற வழக்கில் தலையிடவே மாட்டார்கள், இராவணனைப் புகழ்ந்தும், இராமனை இகழ்ந்தும் பேசுவோரைச் சிறிதும் பொருட்படுத்தமாட்டார்கள்.



# 10. இராமனும் இராவணனும்

கம்பன் தமிழனுயிருந்தும் அவனுக்கு இன உணர்ச்சி யில்லை. இராவணன் தென்னாட்டிலே பிறந்தவன்; அவனைத் தூற்றுகின்றான்; வடநாட்டிலே பிறந்த இராமனைப் போற்றுகின்றான்; அவனைக் கடவுளாகக் கொண்டாடுகின்றான்; கம்பன் தமிழன் என்ற உணர்ச்சியை மறந்தான்; ஆரியக் கொள்கைகளுக்கு அடிமையானன். ஆதலால் ஆரிய நாட்டு இராமனைப் புகழ்ந்து பேசுகின்றான்; என்று இவ்வாறு சில புலவர்கள்—ஆராய்ச்சியாளர்கள் என்று கூறிக் கொள்ளும் சிலர்—பேசுகின்றனர். இதை இதற்கு முன்னும் படித்தோம்.

இவர்களுடைய ஆராய்ச்சிக்கு இவர்களுடைய உள்ளத்தில் உலவும் வெறுப்புத்தான் அடிப்படை; வேறு தக்க அடிப்படை எதுவும் இல்லை. ஆரியர்கள் மேல் வெறுப்பு; வடமொழியின்மேல் வெறுப்பு; பார்ப்பனர்கள் மேல் வெறுப்பு; தமிழ்நாட்டில் வாழும் தமிழர்களான அந்தணர்களைக்கூட ஆரிய பரம்பரையினர்—ஆரியர்கள் என்று தவருக எண்ணியதனல் எழுந்த வெறுப்பு; இவைகளே தான் இவர்களுடைய விபரீத ஆராய்ச்சிக்கு அடிப்படை.

பலமொழிகளிலே இராமாயணம் உண்டு; கதைப் போக்கிலே இவைகளுக்குள் பல வேறுபாடுகள் இருக்கின்றன. அவைகள், இராம சரிதம் நீதிக்கும், அநீதிக்கும் நடந்தபோராட்டம்; அறத்திற்கும் பாவத்திற்கும் நடந்த சண்டை; சர்வாதிகாரத்திற்கும் ஜனநாயகத்துக்கும் நடந்த யுத்தம் என்ற உண்மையை மறுப்பதில்லை.

இராவணன் நீதியைச் சிதைத்தான்; அறநெறியை மீறினன்; அவன் செய்த செயல்கள் எல்லாம் தன் னலத்தையே நோக்கமாகக்கொண்டவை; தியாகம் என்பதைப்பற்றித் தினை அளவுகூட அவன் எண்ணவே யில்லை. தன்னுடைய இன்பத்திற்காகவே எல்லோரையும் பயன்படுத்திக்கொண்டான். பொதுநலங்கருதி உழைப்

பவர்களுக்கெல்லாம் பொறுக்கமுடியாத துன்பங்களைச் செய்தான். இந்த உண்மையைக் கம்பன் தன் காவியத்திலே தெளிவாகக் காட்டுகின்றான்.

இராமன் நீதிக்குப் பாடுபட்டான்; மக்கள் சமுதாயத்திலே ஒழுக்கத்தையும் கட்டுப்பாட்டையும் நிலைநாட்டப் பாடுபட்டான்; தன்னலத்தைத் துறந்தான்; பிறர் நலத்திற்காக உழைத்த தியாகி; அறநெறி தவறி, யாருக்கும் தீங்கிழைக்காதவன்; தன்னை அடைந்தவரைக் காக்கும் கருணைவடிவானவன்; பாவத்தை அடக்கி அறத்தை நிலைநாட்டுவதே அவன் கொள்கை; இவ்வுண்மையைக் கம்பன் ஆதிமுதல் அந்தம் வரையிலும் தன் கவிதையிலே காட்டுகின்றான்.

**அரக்கர்கள் யார்?**

இராமாயணச் சண்டையை-இராம-ராவண யுத்தத்தை-அரக்கர்-இராமாதியர் போரை—அறத்திற்கும் பாவத்திற்கும் நடந்த போர் என்றே கம்பன் குறிப்பிடுகின்றான்.

" இன்னல் உற்று அயரல் வெல்லா
தருமத்தைப் பாவம் என்றான் (யுத்க, நாகபா ச 233)

அறத்தினைப் பாவம் வெல்லாது. (ஷை நிகும்பலை 175)

அத்தனை அறத்தை வெல்லும்
பாவம் என்று அறிந்தது உண்டோ? (ஷை மூலபல 49)

அறம் வெல்லும் பாவம் தோற்கும்.
(சுந்தர, ஊர்தேடு 95)

அருமை என்? இராமற்கு அம்மா!
அறம் வெல்லும் பாவம் தோற்கும்
(யுத்த. வேலேற்ற. 44)

இவைகள் அறத்தின் உறுதியையும், பாவத்தின் அழிவையும் உணர்த்தின.

அரக்கர்கள் பாவத்தின் பிரதிநிதிகள்; பாவமே உருவானவர்கள்; என்பதே கம்பன் கருத்து. இதுதான் அறிஞர்களின் கருத்தும் ஆகும். புராணங்களும் அரக்கர்

களைப் பாவத்தின் மறு பிறப்பாகவே புகல்கின்றன. முன்னோர்கள் அறமற்ற தன்மை என்னென்ன காரியங்களைச் செய்யும் என்பதைக்காட்டவே அரக்கர்களையும், அசுரர்களையும் உருவகம் செய்தனர். இக்கருத்தையே கம்பனும் பின்பற்றினன்.

"இரக்கம் என்று ஒரு பொருள் இலாத நெஞ்சினர்;
அரக்கர் என்று உளர் சிலர்; அறத்தின் நீங்கினர்
(ஆரணிய அகத்திய 12)

இரக்கம் என்று சொல்லப்படும் ஒரு சிறந்த பொருள் இல்லாத மனமுள்ளவர்கள்; கல் மனத்தினர்; அரக்கர் என்ற பெயருடன் இருக்கின்றனர் சிலர்; அவர்கள் அறத்தின் தொடர்பேயில்லாதவர்கள்."

"வஞ்சமும் களவும் வெஃகி,
வழி அலா வழிமேல் ஓடி,
நஞ்சினும் கொடியர் ஆகி,
நவை செயற்கு உரிய நீரார்,
வெஞ்சின அரக்கர் (சுந்தர. அட்சகுமாரன். 64)

வஞ்சகத்தையும் களவையுமே விரும்புகின்றவர்கள்; பிறருக்குத் துன்பம் செய்வதிலே நஞ்சைவிடக் கொடுமையுள்ளவர்கள்; எப்பொழுதும் குற்றம் செய்வதையே குணமாகக் கொண்டவர்கள்; இவர்களே கடுஞ்சினங்கொண்ட கருணையற்ற அரக்கர்கள்."

"பாவந் தோன்றிய காலமே
தோன்றிய பழையோர்;
தீவந்தோன்றிய முழைத்துளை
யெனத் தறுகண்ணர்;
கோவந் தோன்றிடில் தாயையும்
உயிர் உணும் கொடியர் (யுத்த. படைக்காட்சி 23)

பாவம் என்பது எந்த நாளிலே பிறந்ததோ, அந்த நாளிலேயே பிறந்த பழமையானவர்கள்; நெருப்புப் பிடித்து எரிகின்ற மலைக்குகைபோன்ற கண்களையுடையவர்கள்;

எதற்கும் அஞ்சாத இரக்கமற்ற கண்களையுடையவர்கள்; கோபம் வந்துவிட்டால் இன்னது இனியது என்று பாரா மல் தாயையும் கொன்று தின்னும் கொடியவர்கள்."

இவைகள் அரக்கர்களின் தன்மையை அப்படியே காட்டுகின்றன. அவர்கள் அநீதிகள் என்பவை எவ்வளவு உண்டோ அவ்வளவும் சேர்ந்து உருவாகிவந்தவர்கள். இவ்வுண்மையை இப் பாடல்களால் காணலாம். அரக்கர் களின் நடத்தையை எண்ணிப்பார்ப்போர் இந்த உண்மையை ஒப்புக்கொள்ளப் பின்வாங்கமாட்டார்கள்.

"அறந்தலை நிறுத்தி, வேதம்
அருள் சுரந்து அறைந்த நீதித்
திறந்தெரிந்து உலகம்பூணச்
செந்நெறி செலுத்தித், தீயோர்
இறந்துக நூறித், தக்கோர்
இடர்தவிர்த்து ஏக. ஈண்டுப்
பிறந்தனன்; தன் பொற்பாதம்
ஏத்துவார் பிறப்பு அறுப்பார்,

(சுந்தர. பிணிவீட்டு 81)

## இராமன் தியாகம்

அறத்தைச் சிறப்பாக நிலைநாட்டவும், வேதங்கள் மக்களிடம் கருணைகொண்டு விளம்பியிருக்கின்ற நீதியின் மேன்மையை அறிந்து உலகம் அந்த நீதியைப் பின்பற்ற வும்,உலகை நல்வழியிலே நடக்கச்செய்யவும், கொடியோரை மடியும்படி நொறுக்கி, நல்லோர்களின் துன்பத்தைப் போக்கவும், இவ்வுலகிலே பிறந்தான் இராமன். அவன் தன்னுடைய அழகான பாதங்களை வணங்கி வழிபடுகின் றவர்களின் பிறவித் துன்பத்தை அறுப்பான்."

இப்பாடல் இராமனுடைய கொள்கையைக் கூறியது. பாவத்தை அழித்து, அறத்தை நிலைநாட்டவே அவன் பிறந்தான் என்பதைக் குறித்தது.

"அறந்தலை நின்றவர்க்கு
அன்பு பூண்டனென். (யுத்த. வீடணன் 18)

அறத்திலே சிறந்து நின்றவரிடம் அன்புகொண்டேன்" இதுவும் இராமனுடைய பெருமையைக் கூறியது.

"தருமமும் ஞானமும் தகவும் வேலியாய்,
மருவரும் பெருமையும் பொறையும் வாயிலாய்,
கருணையம் கோயிலுள் இருந்த கண்ணனை
அருள்நெறி எய்திச் சென்று அடிவணங்கினன்.
(யுத்த. வீடணன் 50)

தருமத்தையும் அறிவையும், தவத்தையும் வேலியாகக் கொண்டவன்; சிறந்த பண்புகளையும், பொறுமையையும் வாயிலாகக் கொண்டவன்; இத்தகைய கண்ணனாகிய இராமன் இரக்கம் என்னும் கோயிலுக்குள் இருந்தான். விபீடணன் இந்த இராமனுடைய அருள்நெறியைப் பெற்று அதன் வழியே சென்று அவனைக்கண்டு, அவன் அடிகளை வணங்கினன்" இதனாலும் இராமனுடைய பண்பையும், செயலையும் காணலாம்.

"தஞ்சமும், தருமமும், தகவுமே அவர்
நெஞ்சமும், கருமமும், உரையுமே, நெடும்
வஞ்சமும், பாவமும், பொய்யும் வல்லநாம்
உஞ்சுமோ! அதற்கு ஒரு குறை உண்டாகுமோ
(யுத்த. கும்பகரு. 85)

அவர் தஞ்சமடைந்தவரை உதறித்தள்ளாமல் காப்பவர். நாமோ நெஞ்சத்திலே வஞ்சகமுள்ளோம்; செயலிலே பாவத்தையே செய்வோம்; சொல்லிலே பொய்மையே சொல்வோம்; இவைகளில்தாம் நாம் வல்லவர்கள்; இப்படிப்பட்ட நாம் எப்படித் தப்பிப்பிழைப்போம்? அறத்திற்கு எக்காலத்திலாவது குறைவோ அழிவோ உண்டாகுமோ? இல்லை."

இவ்வாறு அரக்கர்களை மனம், மொழி, மெய்களால் எப்பொழுதும் தீமை செய்கின்றவர்களாகவும் அறத்தின் உருவாகவும் கும்பகர்ணன் கூறுகின்றான்.

"அறந்துணையாவது அல்லால்
அருநரகு அமைய நல்கும்

மறம்துணையாக மாயாப்
பபழியொடும் வாழ மாட்டேன்
(யுத்த. நிகும்பலை. 171)

அறத்தைத் துணையாகக்கொண்டு வாழ்வேனேயல்லாமல், நரக வாழ்வைக்கொடுக்கும் பாவத்தைத் துணையாகக் கொண்டு, நீங்காத பழியுடன் வாழமாட்டேன்."

இது விபீடணன் கூறியதாகக் கம்பன் உரைத்த கவிதை. இராமனை அறமாகவும், இராவணனைப் பாவமாகவும் கூறியது இப்பாட்டு. இவைகளைக்கொண்டு அரக்கர் என்பவர்கள் யார்? இராம இலக்குவர் என்பவர்கள் யார்? என்பதை உணர்ந்துகொள்ளலாம்.

கம்பன் கவிதையிலே காணும் இராம—இராவணர்கள் நம்முன்னே எப்படிக் காட்சியளிக்கின்றார்கள் என்பதைக் காண்போம்.

## ஏற்றமும் இழிவும்

1. இராமன் பாராளும் செல்வத்தைத் தன் தம்பி பரதனுக்குக் கொடுத்தவன். இதன்பொருட்டு நாட்டை விட்டுக் காட்டுக்கு வந்தவன்.

இராவ்ணன், தனக்கு அறநெறியைக் கூறினான் என்பதற்காகவே தனது அருமைத் தம்பி விபீடணனை விரட்டியவன்.

2. இராமன் தன் உடன்பிறந்தவர்களாகக்கொண்ட குகன், சுக்கிரீவன், விபீடணன் ஆகியோர்க்கு நன்மை செய்தவன்.

இராவணன் தன் உடன்பிறந்தவர்களையும், பிள்ளைகளையும், இனத்தாரையும் தன் காமவெறிக்காகப் போர்க்களத்திலே பலியிட்டவன்.

3. இராமன் ஏகபத்தினி விரதம் உள்ளவன்.

இராவணன் பலதாரங்களை மணந்தவன்.

4. இராமன் "பிறன் இல் விழையாமை" என்னும் வள்ளுவர் அறத்தை விடாப்பிடியாகக் கொண்டவன்.

இராவணன் இவ்வறத்தைப்பற்றியே எண்ணாதவன். பிறர் மனை விழைந்த பெரும்பாதகன்.

5. இராமன் புலன் அடக்கம் உள்ளவன். கெட்ட வழியிலே தன் உள்ளத்தையும் செயலையும் போகவிடாதவன். காமவெறிக்கு இரையாகாதவன். சூர்ப்பநகையின் சூழ்ச்சிக்கு இராமன் ஏமாறாமல் இருந்ததே இதற்குச் சான்று. இலக்குவனும் இத்தகையவனே; அவனும் சூர்ப்பநகையை—அயோமுகியை—வெறுத்தான்.

இராவணன் புலன் அடக்கம் இல்லாதவன்; காம வெறி கொண்டவன். வேதவதி யென்னும் கன்னியை பல வந்தமாகக் கையைப் பிடித்தான். அவள் சாபத்தையும் பெற்றான்; அரம்பையைப் பலவந்தப் படுத்தி அவளுடைய சாபத்தையும் பெற்றான்; இன்னும் தான் விரும்பிய பெண்களையெல்லாம் சிறைப் பிடித்தான். இறுதியில் சீதையைச் சிறையெடுத்ததனாலேயே அவன் மாண்டு மடிந்தான்.

6. இராமன் மதுவையும் மாமிசத்தையும் வெறுத்தவன்.

இராவணன் இவைகளையே விரும்பியவன்,

7. இராமன், நல்ல நடத்தை, நீதி, கட்டுப்பாடு, ஆகிய அறத்தை நிலைநாட்டுவதற்கே தன்னைத் தியாகம் செய்தான். இவைகளைச் சிதைப்பவர்களை அழிப்பதையே நோன்பாகக் கொண்டான்.

இராவணன், ஒழுக்கம், நீதி, கட்டுப்பாடு ஆகிய அறத்தை அழித்தவன். தன்னலத்துக்காகவே தன் மூச்சுள்ளவரையிலும் போராடிப் போர்க்களத்திலே இறந்தான்.

8, இராமன் இவ்வுலகில் உள்ள எல்லா உயிர்களும் இன்புற்று வாழவேண்டும் என்னும் இரக்க சிந்தையுள்ளவன்; இதற்காகவே உழைத்தான்.

இராவணன் தன்னுடைய பெருமைக்கும், புகழுக்குமே ஆசைப்பட்டவன்; இதற்காக மற்றவர்களையெல்லாம் தனக்கு அடிமையாக்கி ஆண்டவன்.

9. இராமன் தன்னுடைய கல்வி, அறிவு, வீரம், ஆண்மை, இவைகளையெல்லாம் பிறர் நன்மைக்காகவே பயன்படுத்தியவன்.

இராவணன் தன்னுடைய கல்வி அறிவு, வீரம், ஆண்மை இவைகளையெல்லாம் தன் உடலின்பத்துக் காகவே பயன்படுத்தியவன்,

10. இராமன், தந்நலம் துறந்து, உலக நன்மைக்காக நல்ல காரியங்களைச் செய்து வந்த முனிவர்கள் அந்தணர் கள் போன்றவர்களுக்கு ஆதரவளித்தான். அவர்கள் துன்பத்தை நீக்கினான்.

இராவணன், யாருக்கும் எத்தீமையும் செய்யாமல் உலக நன்மையைக் கருதி நல்ல செயல்களைச் செய்து வந்த முனிவர்களையும், அந்தணர்களையும் வெறுத்தான். அவர்களுடைய நல்ல காரியங்களுக்கெல்லாம் இடையூறு செய்து வந்தான்.

11. இராமனுடன் சேர்ந்து வாழ்ந்த துணைவர் கள் அவ்வளவுபேரும் இராமனைப்போலவே சிறந்த பண் ள்ளவர்கள்; அவர்கள் எல்லோரும் இராமனால் இன்ப மும், நன்மையும் அடைந்தனர்.

இராவணனுடன் இணைந்திருந்தவர்கள் அத்தனை பேரும் அவனுடைய அக்கிரமத்துக்கு ஆதரவளித்து வந்தனர். சீதையை இராவணன் சிறையெடுத்தது தவறு என்று தெரிந்துங்கூடக் கும்பகருணன், இந்திரசித்து போன்றவர்களும் இராவணனுக்காகவே போர் செய்து மடிந்தார்கள். இராவணனை ஆதரித்தவர்கள் அடைந்த பலன் பழியும், சாவுந்தான்.

இவ்வாறு உயர்ந்த பண்புக்கு ஓர் எடுத்துக் காட் டாக இராமன் காட்சியளிக்கின்றான்; இழிந்த பண்புக்கு எடுத்துக் காட்டாக இராவணன் காட்சியளிக்கின்றான்.

யாராயிருந்தாலும், எக்குலத்திலே பிறந்தவராயிருந் தாலும், எவ்வினத்திலே தோன்றியவராயிருந்தாலும் லும், எந்நாட்டிலே பிறந்தவராயிருந்தாலும், ஒழுக்கம்

உள்ளவர் உலகத்தாரால் போற்றப்படுவர். ஒழுக்கம் அற்றவர் உலகத்தாரால் தூற்றப்படுவர். இதுவே பழந் தமிழர் கண்டநீதி.

"ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை; இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி

அனைவரும் ஒழுக்கத்தினாலேயே மேன்மையடைவார்கள்; ஒழுக்கமில்லாமையால் பெரும்பழியை அடைவார்கள்."

இக்குறள் பழந்தமிழர் நீதியை உணர்த்துகின்றது. இக்குறளுக்கு எடுத்துக் காட்டாகக் கம்பனுடைய இராமனும், இராவணனும் நிற்பதைக் காணலாம்.

உயர்ந்த நெறியிலே உறுதியோடு நிற்பவன் தமிழனாயினும் சரி, அல்லாதவனாயினும் சரி அவன் போற்றுவதற்கு உரியவன்; பின்பற்றுவதற்கு உரியவன். அறத்தைச் சிதைக்கும் அறிவற்றவன் யாராயிருந்தாலும் வெறுக்கத்தக்கவன்; விலக்கத்தக்கவன். இது கம்பன் கருத்து. இக்கருத்திலே தவறென்ன?



# 11. கம்பன் கண்ட தமிழர் பண்பு

இராமாயணம் வடநாட்டுக் கதை என்று சொல்லுகின்றனர் சிலர். இது முற்றிலும் உண்மையன்று. இராமாயணக் கதையிலே தமிழ் நாடும் இணைந்திருக்கின்றது. வேறு பல நாடுகளும் இணைந்திருக்கின்றன. ஆகையால் அதை உலகத்து மக்களுக்கு நல்லறிவு புகட்டும் பொதுக் கதை என்று கூறுவதுதான் பொருத்தமாகும்.

இந்தப் பொது இதிகாசத்தைத் தமிழ் நாட்டிலே பிறந்த கம்பன் தமிழிலே தமிழர்க்காகப் பாடினன். அவன் தன் இலக்கியத்திலே — கவிதையிலே — காவியத்திலே ஆங்காங்கே தமிழர் பண்பாடுகளை அமைத்துப் பாடியிருக்கின்றான். தமிழர் நாகரிகத்திற்கு மாறான தமிழ்க் காவியத்தைத் தமிழர்கள் அவ்வளவாகப் பாராட்டமாட்டார்கள்; படிக்கமாட்டார்கள்; பின்பற்றமாட்டார்கள். இது கம்பன் கண்ட உண்மை. ஆதலால் வாய்ப்புக் கிடைத்த இடங்களில் எல்லாம் தமிழர் பண்பாட்டை விரித்துக்கூற அவன் தவறியதே இல்லை.

### காதல் மணம்

காதல் மணமே பழந் தமிழர் பண்பு. காதலற்ற திருமணம் தமிழரிடையிலே நடைபெற்றதில்லை. பழங் காலத்தில் மணம் புரிந்துகொள்ளும் பொறுப்பை மணமக்களே மேற்கொண்டிருந்தனர். ஆண்களும் பெண்களும் தாமே தம் விருப்பப்படி, தாம் காதலித்தவர்களை மணம் புரிந்துகொண்டனர். இந்த வழக்கம் சிறிது சிறிதாக மாற்றம் அடைந்தது. பெண்களுக்கு மணம் செய்து வைக்கும் பொறுப்புப் பெற்றோர்கள் தலையில் சுமந்தது. இதன்பின் ஆண், பெண், இருவருக்கும் மணம் செய்து வைக்கும் பொறுப்பைப் பெற்றோர்களே ஏற்றுக் கொண்டனர்.

இந்தப் பழக்கம் கம்பனுக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே தமிழ் நாட்டில் நிலைத்துவிட்டது. இதற்குச் சிலப்

பதிகாரம் ஒரு சான்று. கோவலனுக்கும் கண்ணகிக்கும் நடந்த திருமணம் காதல்மணம் அன்று. இருவருடைய பெற்றோர்களும் பெருநிதி படைத்தவர்கள். புகழ்பெற்ற வணிகர்கள். இருவரும் ஒருவரை யொருவர் சந்தித்துத் தங்கள் பெண்ணுக்கும் பிள்ளைக்கும் மணம் செய்துவைக் கும் பொறுப்பைத் தாங்களே மேற்கொண்டனர். வேத விதிப்படி இத்திருமணம் நடைபெற்றது.

தமிழரின் காதல் மணமுறை இவ்வாறு நெடுங்காலத் துக்கு முன்பே மாற்றம் அடைந்து விட்டாலும் காதல் மணமே சிறந்தது என்பது கம்பன் கருத்து. ஆதலால் இராமனுக்கும், சீதைக்கும் திருமணம் நடப்பதற்கு முன்பே அவர்கள் இருவரையும் சந்திக்க வைக்கின்ருன். இருவரும் ஒருவர்மேல் ஒருவர் காதல்கொள்ளுகின்றனர். இக்காத லுக்குப் பிறகுதான் இராமன் வில்லை முறித்துச் சீதையை மணக்கின்ருன். இந்தச் சந்திப்பு—வால்மீகியில் இல்லை.

இராமன் மிதிலையின் வீதியிலே வேடிக்கை பார்த்துக் கொண்டு வருகிருன். அவனுடன் இலக்குவன், விசுவா மித்திரன் ஆகிய இருவரும் வருகின்றனர். அப்பொழுது சீதாபிராட்டி அழகே உருவெடுத்தாற்போல் உப்பரிகை யின்மேல் நிற்கின்ருள். கீழே நடந்து சென்ற இராமன் தற்செயலாக மேலே நோக்கினுன்; மேலே நின்ற சீதா தேவியும், தற்செயலாகக் கீழே நோக்கினுள். இருவர் கண்களும் சந்தித்தன; இருவர் உள்ளமும் ஒன்றுபட்டன.

சீதையின் கண்கள் இராமனுடைய தோள்களிலே பாய்ந்தன. இராமனுடைய கண்கள் சீதையின் மார்பிலே பாய்ந்தன. இதன் பலன் இராமன் நெஞ்சத்திலே சீதை குடிபுகுந்தாள்; சீதையின் உள்ளத்திலே இராமன் குடி புகுந்தான். இவ்வளவும் சில விநாடிகளில் நடந்துவிட் டன. இலக்குவனுக்கும், விசுவாமித்திரனுக்கும் தெரியா மலே நடந்துவிட்டன. இந்த நிகழ்ச்சியைக் கம்பன் மூன்று பாடல்களிலே மொழிகின்ருன்.

"எண்ணரு நலத்தினுள் இணைய நின்றுழி,
கண்ணொடு கண் இணை கவ்வி ஒன்றை ஒன்று

உண்ணவும், நிலைபெருது உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினன்; அவளும் நோக்கினள்.
(பால. மிதிலைக்காட்சி 35)

எண்ணத் தகுந்த சிறந்த அழகும் குணங்களும் நிறைந்த சீதை இவ்வாறு தன்னை அலங்கரித்துக்கொண்டு நிற்கும் போது கண்களோடு கண்கள் ஒன்ருகப் பொருந்தின. ஒருவர் கண்களை மற்றொருவர் கண்கள் அப்படியே விழுங்கின. அவர்களுடைய உணர்ச்சியும் அவர்களிடம் நிற்கவில்லை. இருவர் உணர்ச்சிகளும் ஒன்றுபட்டன. இப்படி நிகழும்படி இராமனும் அண்ணுந்து பார்த்தான்; அதே சமயத்தில் சீதையும் குனிந்து நோக்கினள்."

"நோக்கிய நோக்கெனும் நுதிகொள் வேல்இணை
ஆக்கிய மதுகையான் தோளில் ஆழ்ந்தன;
வீக்கிய கனைகழல் வீரன் செங்கணும்
தாக்கணங்கு அனையவள் தனத்தில் தைத்தவே (ஷை 36)

சீதை பார்த்த பார்வை யென்னும் கூர்மையான வேற் படைகள், சிறந்த வலிமையுள்ள இராமன் தோள்களிலே ஆழமாகப் பதிந்தன. கால்களிலே வீரகண்டாமணிகளைத் தரித்த வீரனாகிய இராமனுடைய செந்தாமரை போன்ற சிவந்த கண்களும் மோகினி போன்ற அழகுள்ள சீதையின் மார்பிலே பாய்ந்து ஊடுருவின."

"பருகிய நோக்கெனும் பாசத்தால் பிணித்து
ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்
வரிசிலை அண்ணலும், வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினர். (ஷை 37)

ஒருவர் அழகை ஒருவர் உண்டு சுவைப்பதற்குக் காரணமான அந்தப் பார்வை, ஒரு பாசக்கயிருக நின்றது. அதனல் ஒருவர் உள்ளத்தை மற்றொருவர் உள்ளம் இழுத்தது. இப்படி இழுக்கப்பட்டதால், வில்லைத் தோளிலே பூண்ட இராமனும், வாட்படைகளையே கண்களாகக்கொண்ட சீதையும் ஒருவர் உள்ளத்திலே மற்றொருவர் மாறிக் குடியேறினர். இராமன் உள்ளத்திலே சீதை

யும், சீதையின் சிந்தையிலே இராமனும் குடிபுகுந்து நிலைத்துவிட்டனர்.

இந்த மூன்று பாடல்களும் தமிழர்களின் பண்டைக் காதல் மணத்தின் சிறப்பைக் கருத்திலேகொண்டு பாடப் பட்டவை. இதற்கு அடுத்தாற்போல் மற்றொரு நிகழ்ச்சி யிலே கம்பன் தன் கவித்திறத்தைக்—கருத்தின் உயர்வைக் காட்டியிருக்கின்றான். அதுவும் வால்மீகியில் இல்லாதது. வால்மீகியிலிருக்கும் நிகழ்ச்சிக்கு மாறுபட்டது.

## தமிழ் நாட்டுக் கற்பு

சீதையைச் சிறையெடுத்த இராவணன், அவளைத் தன் கரங்களால் தொட்டுத் தூக்கினான்; தன் தோள்மீது சுமந்துகொண்டு இலங்கைக்குப் போனான; இது வால்மீகி கூறியிருப்பது. சீதை தெய்வத்தன்மையுள்ளவள்; கற் பினுக்கு அணிகலம்; அந்நியர் தீண்ட முடியாத சுடு நெருப்பு; என்ற கருத்துள்ளவன் கம்பன். இத்தகைய கற்பரசியை இராவணன் தன் கைகளால் தொட்டுத் தூக்கிச் சென்றான் என்றால், அது தமிழர் பண்புக்கு ஒவ் வாதது; என்று எண்ணினான் கம்பன். ஆதலால் இந்த நிகழ்ச்சியை அவன் வேறு விதமாக மாற்றி அமைத்தான்

வால்மீகி காலத்திலே ஒரு பெண்ணை ஒரு ஆண் மகன் தொட்டுவிடுவதனால் அவள் கற்பு அழிந்துவிடும் என்ற கொள்கை இருந்ததில்லை. ஆதலால் இராவணன் சீதையை எடுத்துச் சென்ற நிகழ்ச்சியை இயற்கை யாகக் கூறினான். கம்பன் காலத்திலும் அவனுக்கு முன்னும் தமிழ் நாட்டிலிருந்த பழக்கம் வேறு. ஒரு பெண்ணை—பிறன் மனைவியை—மற்றொரு ஆடவன் தொடுவானாயின் அவளுடைய புனிதத் தன்மை போய் விட்டது என்று தமிழர்கள் நினைத்தனர். ஒரு பெண்ணை அயலான் ஒருவன் கெட்ட எண்ணத்துடன் பார்த்தாலே போதும், அப் பெண்ணின் கற்பு அழிந்து விட்டது என்ற கொள்கையைத் தமிழர்கள் பாராட்டிப் பேசிக் கொண்டிருந்தகாலம் கம்பன் காலம்.

இத்தகைய காலத்தில் வால்மீகி சொல்லியபடியே கம்பனும் எழுதியிருப்பானாயின் தமிழகத்திலே சீதைக்கு

அவ்வளவு பெருமை ஏற்பட்டிருக்காது. தமிழர்கள் இராம காதையை அவ்வளவு சிறப்பாக ஏற்றிப் போற்றி யிருக்கமாட்டார்கள். இந்த உண்மையை உள்ளத்திற் கொண்டுதான் கம்பன் தன்னுடைய கற்புத் தெய்வமாகிய சீதா பிராட்டியை, இராவணன் சிறையெடுத்த நிகழ்ச் சியை—இயற்கைக்கு மாருக மாற்றி யமைந்தான்.

இராவணன் சீதா தேவியைக் கையினுல் தொட வில்லை; அவள் இருந்த இடத்தை அப்படியே நிலத் தோடு பெயர்த்தான்; இலக்குவன் அமைத்த இலை வீட்டோடு குலையாமல் பெயர்த்தெடுத்தான். தேரிலே வைத்துக்கொண்டு புறப்பட்டான். இதுவே கம்பன் காட்டும் மாறுதலான நிகழ்ச்சி.

" தூண் தான் எனலாம் உயர்தோள் வலியால்
கீண்டான் நிலம், யோசனை, கீழொடுமேல்
(ஆரண்ய. சடாயு உயிர் 75)
கொண்டான் உயர்தேர் மிசை. (ஷை 76)

தூண் என்று சொல்லத் தகுந்த உயர்ந்த புயவலிமையால் கீழும்மேலும் ஒரு யோசனை அளவுள்ள நிலத்தைச் சீதையுடன் சேர்த்து அகழ்ந்தெடுத்தான். தனது உயர்ந்த தேரின்மேல் தூக்கி வைத்துக்கொண்டான்."

இவ்வடிகளால் இராவணன் சீதையைத் தூக்கிய காட்சியைக் காணலாம். இந்த நிகழ்ச்சியை இன்னும் பலவிடங்களிலும் கம்பன் வலியுறுத்தி யிருக்கின்றுன்.

இவ்வாறு தூக்கிய சீதையை இராவணன், அப்படியே அவள் இருந்த நிலத்தோடு தேரில் வைத்துக்கொண்டு சென்றுன். இடை வழியிலே சடாயு வந்து இராவணனைத் தடுத்தான். அவனுக்கும் இராவணனுக்கும் போர் நடந்தது. அப் போரிலே சடாயுவின் சிறகை இராவணன் வெட்டி வீழ்த்தினுன். இராவணனுடை தேரும் அழிந்து விட்டது. ஆதலால் இராவணன் சீதையைத் தன் தோளின் மேல் சுமந்து செல்ல நேர்ந்தது. அப்பொழு தும் அவன் சீதையைத் தீண்டவில்லை. சீதை வீற்

றிருந்த நிலத்தோடு, அவளை எப்படிப் பெயர்தெடுத்துத் தேரில் வைத்துக்கொண்டு வந்தானே அப்படியே தன் தோளில் வைத்துக்கொண்டு போனுன்.

"ஏங்குவாள் தன்மையும், இறகு இழந்தவன்
ஆங்குஉறு தன்மையும் அரக்கன் நோக்கினுன் ;
வாங்கினன், தேரிடைவைத்த மண்ணெடும்
வீங்குதோள் மீக்கொடு விண்ணின் ஏகினுன்.

(ஆரண்ய. சடாயு உயிர் 137)

ஏங்குகின்ற சீதையின் தன்மையையும், சிறகை யிழந்த சடாயு அங்கே சோர்ந்து கிடக்கின்ற தன்மையையும் இராவணன் கண்டான். சீதை அமர்ந்திருந்த நிலத்துடன் சேர்த்து அவளைத் தூக்கினுன். உயர்ந்த தோளின்மேல் வைத்துக்கொண்டு வான் வழியாகச் சென்ருன்."

இதுவும் இராவணன் சீதையைத் தீண்டவில்லை என்ற உண்மையைக் கூறிற்று. இவ்வுண்மையை மீண்டும் சுந்தர காண்டத்தில் வலியுறுத்துகின்ருன் கம்பன். சீதையைத் தேடி இலங்கைக்குப் போன அநுமான் அவளைக் காணுகின்ருன். தன்னை இன்னுன் எனறு அறிவித்துக்கொளகின்ருன். சீதையும் அவனை இராம தூதன் என்று நம்புகின்ருள். அதன்பின் அவர்களுக்குள் நடந்த உரையாடலின் போது சீதா பிராட்டி தன்னுடைய தூய்மையை வெளியிட்டுக் கூறினுள். இராவணன் இன்னும் தன்னைத் தீண்ட வில்லை எனபதைக் காட்சி அளவால் காட்டினுள். "நான் அமர்ந்திருக்கும் இடம் இலங்கை அன்று ; இலக்குவன் கட்டிய இலைக் குடிசையோடு கூடிய அந்த நிலப் பகுதியிலேயே அமர்ந்திருக்கின்றேன" என்று சொல்லிக் காட்டினுள்.

"ஆண்டு நின்றும் அரக்கன் அகழ்ந்துகொண்டு
ஈண்டு வைத்தது, இளவல் இயற்றிய
நீண்ட சாலையோடு நிலைநின்றது,
காண்டி ஐய ! நின்மெய் உணர் கண்களால்

(சுந்தர, ஆளாமணி 24)

அந்த ஆரணியத்திலிருந்து இராவணன் என்னை நிலத்தோடு அகழ்ந்து அப்படியே கொண்டுவந்தான்; அந் நிலத்தில்தான் நான் உட்கார்ந்திருக்கின்றேன். அந்த நிலம் இலக்குவன் இயற்றிய உயர்ந்த பர்ணசாலை யோடு அப்படியே அழியாமல் இருக்கின்றது. உண்மை யைக் கண்டறியும் தன்மையுள்ள உன் கண்களால் நன்ருகப் பார்."

இவ்வாறு புலமையிற் சிறந்த கம்பன் தமிழர் அனை வரும் சீதையைக் கற்பினுக் கணியாகப் போற்றிப் புகழு மாறு மூலக் கதையை மாற்றி அமைத்தான்.

## தமிழர் வீரர்

தமிழர் வீரத்தையும் இராம காதையில் கம்பன் கண்டான். அதையும் விளக்கிச் சொல்லுகின்ருன்.

தமிழர்கள் தம் வீரத்திலே நம்பிக்கை யுள்ளவர்கள். தோல்வி மனப்பான்மை அவர்களிடம் தோன்றுவதில்லை. பகைவர்களுடைய கோட்டை அவர்களிடம் இருக்கும் போதே அதை இரவலர்க்கு இனமாக வழங்கிவிடுவார் கள். இனமாக முதலில் வழங்கிய பிறகுதான் பகைவர் களுடன் போர் செய்து கோட்டையைப் பிடித்து வாக் குறுதி அளித்தவர்க்கு வழங்குவார்கள். இது தமிழரின் சிறந்த வீரப்பண்பு

"ஒன்னுர் ஆர்எயில் அவர்கட்டு ஆகவும், நுமது
என பாண்கடன் இறுக்கும் வள்ளியோய்.

(புறநா. பா. 203)

பகைவர்களுடைய் கோட்டை அவர்கள் வசத்தில் இருக்கும்போதே "அக்கோட்டையும், அதில் உள்ள செல்வங்களும் உமக்கு உரியவை. எடுத்துக்கொள்ளுங் கள்'' என்று உன்னைப் புகழ்ந்து பாடும் பாணர்களுக்குக் கொடுக்கும் வள்ளன்மையுள்ளவன் நீ"

இந்தச் சிறந்த தமிழர் வீரத்தை இராமனிடம் கண்டான் கம்பன். இவ்வீரத் தன்மையைக் கதை நிகழ்ச்சியிலே காட்டிச் சென்ருன்.

இராமன் தன்னைச் சரணடைந்த சுக்கிரீவனுக்கு ஆதரவு அளித்தான். அவன் துன்பத்தைக் களைவதாக வாக்களித்தான். அவன் வரலாற்றைக் கேட்டு மன மிரங்கினன். அவன் அண்ணனாகிய வாலி, அவனுக் கிழைத்த தீங்குக்காக அவனை வெறுத்தான். சுக்கிரீவனை நோக்கி "கிட்கிந்தையின் அரசாட்சி உன்னுடையதே! நீ வருந்தவேண்டாம்" என்று உறுதிமொழி யுரைத் தான்.

இச் செய்தியை அநுமான் வாய்மொழியாகக் கம்பன் கூறியிருக்கின்றான். எந்தச் சமயத்தில்—எந்த இடத்தில் அநுமான் இச் செய்தியைக் கூறுகின்றான் என்பதுதான் குறிப்பிடத் தகுந்தது.

அநுமான் இலங்கைக்குப் போயிருந்தபோது, இந்திர சித்தனல் இராவணன் சபைக்குக் கொண்டுபோகப் பட்டான். அப்பொழுது இராவணனுக்கும், அநுமா னுக்கும் பேச்சு நடக்கின்றது. அப் பேச்சிலே அநுமான் இராமனுடைய வீரத்தை இராவணனுக்கு எடுத்துக் கூறு கின்றபோது இவ்வுண்மையை உரைக்கின்றான்.

"தேவியை நாடிவந்த செங்கணாற்கு,
எங்கள் கோமான்
ஆவி ஒன்ருக நட்டான்,
அருந்துயர் துடைத்தி என்ன;
ஓவியர்க்கு எழுத ஒண்ணா
உருவத்தன், உரிமையோடும்
கோவியல் செல்வம் முன்னே
கொடுத்து வாலியையும் கொன்ருன்.

(சுந்தர. பிணிவீட்டு 86)

செந்தாமரைக்கண்ணன் தன் தேவியைத் தேடிக்கொண்டு நாங்கள் இருந்தபக்கம் வந்தான். அப்பொழுது 'எங்கள் தலைவனாகிய சுக்கிரீவன் அவனுடன உயிர் ஒன்றே என்று சொல்லும்படி நட்புக்கொண்டான்; தன்னுடைய பெருந் துன்பத்தைப் போக்கவேண்டும் என்று வேண்டிக்கொண்

டான்; ஓவியர்களாலும் எழுத முடியாத அழகனான இராமன் சகோதர உரிமையுடன், கிட்கிந்தையின் அரசியல் செல்வத்தை முதலிலே கொடுத்தான்; அதன் பின்பே சகோதரத் துரோகியாகிய—பரதாரம் விழைந்தவனாகிய வாலியைக் கொன்றான்."

இவ்வாறு அநுமான் வாயினால் இராமனுடைய வீரத்தை வெளியிட்டான் கம்பன். தன் வாயினாலேயே இராமனிடம் அமைந்திருந்த தமிழர் வீரத்தைப் புகழ்ந்து பேசுகின்ற மற்றொரு நிகழ்ச்சியும் பாராட்டுவதற்குரியது.

விபீஷணன் இராவணனைவிட்டு விலகிவந்து இராமனிடம் சரணம் அடைந்தான். அவன் உண்மை ஒழுக்கம் உள்ளவன்; நீதி நெறி தவறாத நேர்மையுள்ளவன்; தன்னிடம் உண்மையான அன்பு கொண்டவன்; சீதாதேவிக்குத் துணையாகத் தன் புதல்வி திரிசடையை அமர்த்தியிருப்பவன்; இவ்வுண்மை இராமனுக்குத் தெரியும். ஆகையால் விபீஷணனுக்கு ஆதரவளித்தான். அவன் சரணம் அடைந்தவுடனேயே "இலங்கை அரசு உன்னுடையதே" என்று உறுதி கூறினான்; உடனே "விபீஷணனை இலங்கைக்கு அரசனாக இப்பொழுதே முடி சூட்டுக" என்று இலக்குவனிடம் உரைத்தான். இராமனிடம் இருந்த வீரத்திற்கு இதுவும் ஓர் எடுத்துக்காட்டாகும்.

உஞ்சனன் அடியனேன், என்று
ஊழ்முறை வணங்கி நின்ற
அஞ்சன மேனியானை,
அழகனும் அருளின் நோக்கித்,
தஞ்சம் நல் துணைவனான
தவறிலாப் புகழான் தன்னைத்
துஞ்சல் இல் நயனத்து ஐய!
சூட்டுதி மகுடம்; என்றான்.

(யுத்த. வீடணன் அடை. 144)

நான் பிழைத்தேன் என்று சொல்லி, முறைப்படி இராமனை வணங்கினான் விபீஷணன். இப்படி வணங்கிநின்ற அஞ்சனம்போன்ற நிறமுள்ள விபீடணனை இராமனும் இரக்கத்துடன் நோக்கினான். உடனே இலக்குவனைப் பார்த்து "தூங்காத கண்களையுடைய இலக்குவனே! இவன் நம்மைத் தஞ்சம் அடைந்தவன்; நல்ல துணைவன்; தவறு செய்யாதவன்; ஆதலால் இவனை இப்பொழுதே இலங்கைக்கு அரசனாக முடி சூட்டுக; என்று கூறினான்."

இவ்வாறு தமிழர் பண்புகள் பலவற்றைக் கம்பன் தனது காவியத்திலே அமைத்துப் பாடியிருப்பது தமிழ் உள்ளவரையிலும் தமிழர்க்குப் பெருமை தருவதாகும்.



# 12. கம்பனும் வள்ளுவரும்

வள்ளுவரை எல்லோரும் வாயார வாழ்த்து கின்றனர்; உலகமெல்லாம் ஒப்புக்கொள்ளும் உயர்ந்த நீதியை உரைத்தவர் என்று போற்றுகின்றனர்; வள்ளுவர் மொழிகளிலே பலவற்றை எம்மதத்தினரும் சம்மதம் என்று ஏற்றுக்கொண்டாடுகின்றனர். எம்மொழியினரும் தம்மொழிக்கு ஏற்ற நூல் திருக்குறள் என்று பாராட்டு கின்றனர்.

இன்று தமிழர்களிலே பலர், வள்ளுவர் கூறும் அறமே தமிழர் மதம்; தமிழர் கொள்கை; தமிழர் நாக ரிகம்; தமிழர் பண்பாடு; என்று வான்முட்ட முழங்கு கின்றனர். வள்ளுவர் அறம் வாழ்க! வாழ்க! என்று வாழ்த்தொலி கூறுகின்றனர். படித்த தமிழர்கள் அனை வரும் இன்று வள்ளுவரைப் பாராட்டுகின்றனர்; திருக் குறளைப் படிக்கின்றனர். பழய தமிழ்ப்பற்று இன்று மீண்டும் தமிழரிடையிலே மலர்ந்திருப்பது மகிழ்ச்சிக் குரிய செய்தியாகும்.

வள்ளுவரைப் போற்றுவோர்களிலே சிலர் கம்பன் மீது காய்ந்து விழுகின்றனர். வள்ளுவரை வாழ்த்தும் வாயால் கம்பன்மீது வசை மொழிகளை வாரிக் கொட்டு கின்றனர்.

கம்பன், வள்ளுவர் வாய்மொழியைப் பின்பற்றியவன்; அவர் கருத்தையே மேற்கொண்டு காவியம் செய்தவன்; இராமாவதாரத்தின் மூலம் வள்ளுவர் அறத்தைநிலைநாட்ட வேண்டும் என்பதே அவனுடைய நோக்கம். வள்ளுவர் அறத்தையும், அவர் தம் வாய்மொழிகளையும் கம்பன் எவ் வாறு கண்ணும் கருத்துமாய்க் கட்டிப் பாதுகாக்கின்றான் என்பதை அறிந்தவர்கள் அவனைத் தூற்றும் தொழிலிலே இறங்கமாட்டார்கள்.

### திருக்குறட்பாயிரம்

கம்பன் தன் காவியத்தைத் தொடங்கும்போதே வள்ளுவர் வகுத்த வழியில் நின்றே தொடங்குகின்முன்.

"உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்,
நிலைபெறுத்தலும், நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட்டு உடையார் அவர்
தலைவர்; அன்னவர்க்கே சரண் நாங்களே

என்று எடுத்த எடுப்பிலே கடவுள் வாழ்த்தைப் பாடுகின்முன். 'இவ்வுலகைப் படைத்துக் காத்து அழிப்பவர் கடவுள் ; இத்தொழில்கள் அவருக்கு ஒரு விளையாட்டு ; அவரே இவ்வுலகத்திற்குத் தலைவர்" என்ற கருத்தை இப்பாடலில் காணுகின்ருேம். இப்பாடலைப் படிக்கும் போது

"அகரம் முதல எழுத்தெல்லாம் ; ஆதி
பகவன் முதற்றே உலகு"

என்ற வள்ளுவர் குறள்—திருக்குறளின் முதற்செய்யுள் கற்றவர் நினைவிலே தோன்ருமற்போகாது. "எழுத்துக்கள் எல்லாம் அ என்னும் எழுத்தைத் தலைமையாக்க் கொண்டிருக்கின்றன ; அதுபோல் உலகம் கடவுளைத் தலைமையாகக் கொண்டிருக்கின்றது" இதுவே இக்குறளின் பொருள்.

கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்னும் நான்கு அதிகாரங்களும் திருக்குறளுக்குப் பாயிரமாக அமைந்திருக்கின்றன. கடவுள் வாழ்த்து, ஆற்றுப்படலம், நாட்டுப்படலம், நகரப் படலம் இந்நான்கையும் தன் காவியத்திற்குப் பாயிரமாக அமைத்திருக்கின்ருன் கம்பன்.

கம்பன் கடவுள் வாழ்த்திலே, வள்ளுவரைப்போலவே முதலில் பொதுக் கடவுளை வணங்கினுன். ஆற்றுப் படலத்திலே மேகத்தின் சிறப்பை—மழையின் பெருமையைக் கூறினுன். மழையின் பெருமையைக் கூறுவதே வான்சிறப்பாகும்.

"புள்ளி மால்வரை பொன்னென நோக்கிவான்
வெள்ளி வீழ்இடை வீழ்த்தன தாரைகள்;
உள்ளி உள்ளவெலாம் உவந்து ஈயும் அவ்
வள்ளியோரின் வழங்கின மேகமே.

(பால. ஆற்று. 4)

சிறந்த பெரிய இமயமலை பொன் என்பதைக்கண்டது வானுலகம். அதற்கும் தனக்கும் தொடர்பு இருக்கும்படி இடையிலே வெள்ளி விழுதைத் தொங்கவிட்டதுபோல், மழைத்தாரைகளை மேகங்கள் வழங்கின. செல்வத்தின் நிலையாமையைக் கருதி அதை வறியோர்க்கு மனமுவந்து கொடுக்கும் கொடையாளர்களைப்போல, மேகம் மழைத் தாரைகளை வீழ்த்தின"

இந்த மழைத் தாரைகளால் ஆற்றுவெள்ளம் பெருக்கெடுத்தோடியது; அவ்வெள்ளத்தால் நாடு செழித்தது; மக்களும் மற்ற உயிர்களும் மகிழ்ந்து வாழ்ந்தனர்; என்று வான் சிறப்பைக் கூறினான் கம்பன்.

"கூற்றம் இல்லை ஓர் குற்றம் இலாமையால்;
சீற்றம் இல்லைதம் சிந்தையின் செய்கையால்;
ஆற்றல் நல்லறம் அல்லது இல்லாமையால்
ஏற்றம் அல்லது, இழிதகவு இல்லையே.

(பால. நாட்டு. 39)

கோசலநாட்டு மக்களிடத்திலே குற்றங்கள் ஒன்றும் இல்லை; ஆதலால் கூற்றுவன் செய்யும் கொடுமை அந் நாட்டில் இல்லை. அம்மக்கள் தூய்மையான உள்ளம் படைத்தவர்கள்; ஆதலால் பல குற்றங்களுக்கும் காரண மான சினம் அவர்களிடம் இல்லை. அவர்கள் நல்ல அறங் களைத் தவிர வேறு எதையும் செய்வதில்லை; ஆதலால் அவர்களுக்குப் புகழ்தான் உண்டு; இகழ் என்பதே அவர் களிடம் இல்லை."

இதனால், குற்றங்களைச் செய்யாமை, சிந்தையிலே சினமின்மை, நல்லறங்களையே செய்தல் ஆகிய அறங்களை வலியுறுத்தியதைக் காணலாம். அறன் வலியுறுத்தலுக்கு இப்பாடல் ஒரு எடுத்துக்காட்டு.

"தங்குபேர் அருளும் தருமமும் துணையாத்
தம்பகைப் புலன்கள் ஐந்து அவிக்கும்
பொங்கு மாதவமும் ஞானமும் புணர்ந்தோர்
யாவர்க்கும் புகல் இடம் (பால. நகர 6

என்றும் குன்றுமல் நிறைந்திருக்கும் கருணையுள்ளவர்கள்; அறத்தை மறவாதவர்கள்; இவைகளைத் துணையாகக் கொண்டு ஐம்புலன்களையும் அடக்கி ஆளுகின்றவர்கள்; நிறைந்த உயர்ந்த தவத்தையும், அறிவையும் உடையவர்கள்; உலகப்பற்றை விட்டவர்களான இத்தகைய முனிவர்கள் யாவர்க்கும் புகலிடமாக விளங்குவது அயோத்தி மாநகரம்."

இதனால் நீத்தார் பெருமையைக் கூறினான் கம்பன். கம்பனுடைய கடவுள் வாழ்த்து, ஆற்றுப்படலம், நாட்டுப் படலம், நகரப் படலம் ஆகியவைகளைக் கருத்தூன்றிக் கற்போர் அவைகளிலே வள்ளுவர் முறையைக் காணலாம்.

ஈகை

இராமன் பிறந்த மகிழ்ச்சியால் தசரதன் பல அறங்களைச் செய்கின்றான்.

"இறை தவிர்ந்திடுகபார் யாண்டொர் ஏழ், நிதி
நிறைதரு சாலைதாழ் நீக்கி யாவையும்
முறைகெட வறியவர் முகந்து கொள்க என
அறை பறை என்றனன் அரசர் கோமகன்
(பால. திருஅவதா 113)

ஏழாண்டுகளுக்கு யாரும் வரி கொடுக்கவேண்டாம்; பொருட்சாலையின் பூட்டைத் திறந்து விடுங்கள்; இன்னார் தாம் செல்வத்தை எடுத்துக்கொள்ளலாம் என்ற முறையில்லை; ஏழைகளே எல்லாவற்றையும் வாரிக்கொண்டு போகலாம்; என்று பறையடித்துத் தெரிவியுங்கள் என அரசர்க்கரசனாகிய தசரதன் கட்டளையிட்டான்." இப்பாட்டைப் படிக்கும்போது வள்ளுவர் கூறிய அறம் நம் நினைவுக்கு வராமற் போகாது.

"வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை ; மற்றெல்லாம்
குறிஎதிர்ப்பை நீரது உடைத்து

ஒரு பொருளும் இல்லாத ஏழைகளுக்கு ஒரு பொருளைக் கொடுப்பதே ஈகையாகும்; மற்றய கொடையெல்லாம் ஈகையல்ல; ஒரு குறிப்பிட்ட எதிர் உதவியைக் கருதும் தன்மையுள்ளது." இந்தக் குறளின் கருத்தையே கம்பன் மேற்காட்டிய பாடலில் அமைத்திருக்கின்றான்.

## பொருமை

மாபலிச் சக்கரவர்த்தியிடம் திருமால் வாமனனாக வந்து மூன்றடி மண் கேட்டான். மாபலியும் கொடுக்கச் சம்மதித்தான். அப்பொழுது அவன் குரு சுக்கிரன் மாபலியைத் தடுத்து அறிவுரை கூறினான். இவ்வாறு தானத்தைத் தடுக்க முயன்ற சுக்கிரனுக்குப் பதில்கூறும் இடத்திலே கம்பன் வள்ளுவர் அறத்தை எடுத்துக்காட்டுகிறான்.

"வெள்ளியை ஆதல் விளம்பினை; மேலோர்
வள்ளியர் ஆக வழங்குவது அல்லால்;
எள்ளுவ என்சில, இன்உயிரேனும்
கொள்ளுதல் தீது; கொடுப்பது நன்றால்.

(பால. வேள்வி, 29)

அறிவற்றவனாதலால் தானத்தைத் தடுத்துக்கூறினை. உயர்ந்தவர்கள் வள்ளல்களாக இருந்து கொடுப்பார்களே அல்லாமல், கொடுப்பதை வெறுக்கமாட்டார்கள். தம் இனிய உயிராயினும் சரி, அதை இரந்து ஏற்றுக் கொள்ளுவது தீது; கொடுப்பதே சிறந்ததாகும்." என்பது மாபலியின் கூற்றாகக் கம்பன் மொழிந்தது. இதைப் படிக்கும்போது,

"நல்லாறு எனினும் கொளல்தீது; மேல் உலகம்
இல் எனினும் ஈதலே நன்று"

நல்வழியைக் காட்டுமாயினும் பிறரிடம் ஒரு பொருளை ஏற்றல் தீமையாகும்; மேல் உலகம் இல்லையென்றாலும்

ஈதலே சிறந்ததாகும்” என்ற வள்ளுவர் அறம் நினைவுக்கு வராமலிருக்கமுடியுமா?

மாவலி குருவின் சொல்லைக்கேட்கவில்லை. வாமன னுக்கு மூன்றடி மண் கொடுக்கத் துணிகின்றான். மேலும் தடுக்கின்றான் சுக்கிரன். அதனால் சினமடைந்தான் மாவலி.

“எடுத்து ஒரு வருக்கு ஒருவர் ஈவதனின் முன்னே
தடுப்பது நினக்கு இது அழகோ! தகைவு இல்வெள்ளி
கொடுப்பது விலக்கு கொடியோய்! உனது சுற்றம்
உடுப்பதுவும் உண்பதுவும் இன்றிவிடுகின்றாய்.
(பால. வேள்வி. 33)

ஒருவர் ஒரு பொருளை எடுத்து ஒருவர்க்குக் கொடுப் பதற்கு முன்பே அக் கொடையைத் தடுப்பது உனக்கு அழகாகுமா? நீ பெருமையற்றவன்; வெள்ளியென்ற பெயருக்கு ஏற்ப உனது அறியாமையைக் காட்டிவிட்டாய்! கொடுப்பதைத் தடுக்கும் கொடியவனே! உனது சுற்றமும் நீயும் உடுக்கும் உடையும் உண்ணும் உணவும் இல்லாமல் வறியராகிவிடுகின்ற செயலைச் செய்கின்றாய்.” இப்பாடலைப் படிக்கும்போது திருக்குறளைப் படித்தவர்க்குக் கீழ்வரும் பாடல் உள்ளத்திலே தோன்றாமலிருக்குமா?

“கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்

பிறர்க்கு ஒருவன் கொடுக்கும் பொருளைக்கண்டு பொறாமைப்படுவது கூடாது; பொறாமைப்படுவானாயின் அவன் சுற்றம் உணவும், உடையும் இல்லாமல் வறுமை யால் அழியும்” இக்குறளின் சொற்களும், கருத்தும் அப்படியே கம்பன் பாட்டில் அமைந்திருப்பதைக் காணலாம்.

“எண்ணரும் நலத்தினள் இளைய நின்றுழி
கண்ணொடு கண் இணை கவ்வி ஒன்றை யொன்று
உண்ணவும் நிலைபெறாது உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள்.
(பால. மிதிலை. 35)

இது மிதிலை நகர வீதியிலே இராமனும், சீதையும் முதல் முதலாகச் சந்தித்தபோது நிகழ்ந்த காட்சியைக் கூறிய பாடல்.

"கண்ணொடு கண் இணை நோக்கு ஒக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல

கண்களோடு கண்கள் பார்வையிலே ஒத்து ஒன்று படுமாயின், பின்னர் வாயிலிருந்து வரும் சொற்களால் ஒரு பயனும் இல்லை." இத்திருக்குறளின் கருத்து கம்பன் உள்ளத்தைக் கவர்ந்துநின்றது; மேற்கூறிய பாடலைப் பாடச்செய்தது. "கண்ணொடு கண் இணை" என்ற வள்ளுவர் வாய்மொழி கம்பன் பாடலில் அப்படியே அமைந்திருப்பதைக் காணலாம்.

**அமைச்சர்**

கம்பன் தசரதனுடைய அமைச்சர்களின் திறமையைப் பற்றிக் கூறும்போது வள்ளுவர் கருத்தே கம்பன் கருத்தாகப் பிறந்திருப்பதைக் காணலாம்.

காலமும் இடனும் ஏற்ற
கருவியும் தெரியக் கற்ற
நூல்உற நோக்கித், தெய்வம்
நுனித்துஅறம் குணித்த மேலோர்
(அயோத்தி. மந்திர. 8)

காரியத்தை முடிப்பதற்கேற்ற காலத்தையும், அதைச் செய்வதற்கான இடத்தையும், அதை நிறைவேற்றுவதற்கு ஏற்ற கருவிகளையும், தெளிந்துகொள்ளுவதற்காகத் தாங்கள் கற்ற நூலறிவுடன் ஆராய்ந்து நோக்குவார்கள். அவர்கள் தெய்வத்தையும் துணையாகக்கொண்டு அறநெறியிலே நின்று, தாம் தொடங்கிய செயலைச்செய்து முடிக்கும் உயர்ந்த அறிவுள்ளவர்கள்." இப் பாடலைப் படிக்கும்போது அமைச்சரைப்பற்றி வள்ளுவர் கூறியுள்ள அருங்குறள் நினைவுக்கு வருகின்றது.

"கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்டது அமைச்சு.

செய்வதற்குரிய கருவியையும், ஏற்றகாலத்தையும், செய்யும் வகையையும், செய்யக்கூடிய சிறந்த செயலையும், சிறப்படையும்படி செய்யும் திறமையுள்ளவனே அமைச்சன்.”

வள்ளுவர் வகுத்துக் கூறிய அமைச்சர் தகுதியும், கம்பன் காட்டிய அமைச்சர் இயல்பும் ஒத்திருக்கின்றன அன்றோ?

**அறம்**

தசரதன் இராமனுக்கு முடிசூட்டத் துணிந்தான். தன் கருத்தை அமைச்சர்களிடம் கூறினான். இராமனுக்கு முடிசூட்டிவிட்டு நான் துறவை மேற்கொள்ளப் போகின்றேன் என்றான். இதற்கு முதல் மந்திரி சுமந்திரன் மறுமொழி புகல்கின்ற இடத்திலே கம்பன் காட்டியிருக்கும் கருத்து குறிப்பிடத் தகுந்தது.

“உறத்தகும் அரசு இராமற்கு என்று
உவக்கின்ற மனத்தைத்,
துறத்தி நீ என்னும் சொற்சுடும்;
நின்குலத் தொல்லோர்
மறத்தல் செய்கிலாத் தருமத்தை
மறப்பதும் வழக்கன்று;
அறத்தின் ஊங்குஇனிக் கொடிது எனல்
ஆவது ஒன்று யாவதோ!

(அயோத்தி. மந்திர. 46)

இராமனுக்கு அரசாட்சி ஏற்றதாகும் என்ற எண்ணத்தால் எங்கள் நெஞ்சம் மகிழ்ச்சி அடைகின்றது. இந்த மகிழ்ச்சியுள்ள மனத்தை நீ துறவை மேற்கொள்ளப் போகின்றாய் என்னும் சொல் சுடுகின்றது. ஆயினும் உன் முன்னோர்கள் மறவாமற் செய்த தருமத்தை மறப்பதும் முறையன்று; அப்படி மறப்பது அறத்தைச் செய்யாமல் விடுவதைவிடக் கொடுமையானதாகும்; அதைவிடக் கொடுமையானது ஒன்றும் இல்லை.”

இது சுமந்திரன் வாயினால் கம்பன் கூறிய பாடல். இப்பாடலைப் படிக்கும்போது

"அறத்தின் ஊங்கு ஆக்கமும் இல்லை; அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு.

அறத்தைப் பின்பற்றுவதைவிடச் செல்வமும் வேறில்லை; அதை மறப்பதைவிடக் கெடுதியும் வேறு இல்லை." என்ற குறள் கற்றவர் நினைவிலே எழாமற் போகாது. சுமந்திரன் கருத்தும், வள்ளுவர் கருத்தும் எவ்வளவு பொருத்தமாக இணைந்திருக்கின்றன என்பதை இவற்றைப் படிப்போர் அறிவர்.

தசரதன், இராமனுக்கு முடிசூட்டுவதைப் பற்றிச் சபையோர் கருத்தைக் கேட்டான். அவர்கள் தங்கள் கருத்தையும் உரைத்தனர்.

"ஊர்உணி நிறையவும் உதவும்; மாடு உயர்
பார்கெழு பழுமரம் பழுத்து அற்றாகவும்,
கார்மழை பொழியவும், கழனிபாய் நதி
வார்புனல் பெருகவும் மறுக்கின்றார்கள் யார்?
(அயோத்தி. மந்திர. 82)

ஊருணியிலே நீர் நிறைந்தால் அது எல்லோர்க்கும் உதவும்; உயர்ந்த மேடைக்குப் பக்கத்திலே நிலத்திலே முளைத்தெழுந்த கனி மரம் பழுத்திருந்தாலும் அவ்வாறு உதவிசெய்யும்; மேகம் மழைபொழிந்து உதவிசெய்வதையும், வயல்களுக்குப் பாயும் ஆற்றிலே தண்ணீர் பெருகி வருவதையும் வேண்டாம் என்று யார்தான் கூறுவார்கள்? இவைபோலவே இராமனுக்கு முடிசூட்டுவதை யாரும் மறுக்கமாட்டார்கள்." தசரதனுடைய அவையிலிருந்தோர் தங்கள் கருத்தை இவ்வாறு வெளியிட்டனர். இப்பாடலைப் படிக்கும்போது இரண்டு குறட் பாடல்கள், படித்தவர்களின் உள்ளத்திலே தோன்றும்.

"ஊருணி நீர் நிறைந்து அற்றே உலகு அவாம்
பேரறி வாளன் கன்திரு.

உலகநடையை விரும்பி ஒழுகுகின்ற சிறந்த அறிவுள்ளவனிடம் உண்டாகிய செல்வம் ஊருணியில் நீர் நிரம்பியிருப்பது போலாகும்."

"பயன்மரம் உள்ளூர்ப் பழுத்து அற்றால் செல்வம்
நயன் உடையான் கண்படின்.

உதவி செய்கின்றவனிடம் செல்வம் சேர்ந்திருக்கு மானால், அது பயன்தரும் மரம் நடுவூரிலே பழுத்திருப்பது போன்றதாகும்."

இவ்விரண்டு குறட் கருத்துக்களையும், ஒரே பாடலில் இரண்டே வரிகளின் மூலம் கம்பன் அமைத்துக் காட்டியிருக்கும் சிறப்பு போற்றத்தக்கது. அவன் கவித் திறமையே திறமை!

## நல்லார் தொடர்பு

கங்கைக்கரையிலே இராமன் பர்ணசாலையுள் இருக்கின்றான். அப்பொழுது குகன் அவனைக் காணவந்தான். இலக்குவனிடம் தன் வருகையைக்கூறி இராமனிடம் தெரிவிக்கும்படி வேண்டிக்கொண்டான். இலக்குவன் குகனைத் கண்டபோதே அவனுடைய பண்பைத் தெரிந்துகொண்டான். அவன் இராமனிடம் சென்று குகனுடைய வருகையைப்பற்றி அறிவிக்கின்ற பகுதி தமிழர் அறத்தை வெளியிடுவதாகும்.

"சுற்றமும் தானும் உள்ளம்
தூயவன், தாயின் நல்லான்
எற்று நீர்க் கங்கை நாவாய்க்கு
இறை, குகன் ஒருவன் என்றான். (அயோ. கங்கை. 39)

அவனும் அவன் இனத்தாரும் உள்ளத்திலே ஒரு குற்றமும் இல்லாதவர்கள்; தூயவர்கள்; அலையெறிந்து அழகாகச் செல்லும் கங்கைத் துறையில் உள்ள ஓடங்களுக்குத் தலைவன்; குகன் என்ற பெயருள்ள ஒருவன்; என்று உரைத்தான்." இந்த இரண்டு வரிகளிலும் வள்ளுவரின் சிறந்த அறம் செறிந்திருப்பதைக் காணலாம்.

தீயொழுக்கம் உள்ளவர்களுடன் நல்லவர்கள் நட்புச் செய்தால் அந்த நல்லவரும் தீயொழுக்கத்தை மேற்கொள்ளுவர். சுற்றுச் சார்பினாலேயே ஒருவர் குணம் உருவாகின்றது; ஆதலால் நல்லவர்களின கூட்டுறவே

நன்மைதரும்; என்பது வள்ளுவர் கூறும் அறம். இதைச் சிற்றினம் சேராமை என்ற அதிகாரத்திலே காணலாம்.

"நிலத்து இயல்பால் நீர்திரிந்து அற்றுஆகும்; மாந்தர்க்கு
இனத்து இயல்பது ஆகும் அறிவு,

நிலத்தின் தன்மையால் தண்ணீரின் இயற்கைப்பண்பு மாறும்; அது சேர்ந்துள்ள நிலத்தின் தன்மையைப் பெறும்; அதுபோல் மக்கள் அறிவு அவர்கள் சேர்ந்திருக்கும் இனத்தின் தன்மையைப் பொறுத்திருக்கும்."

" மனம் தூய்மை செய் வினை தூய்மை இரண்டும்
இனம் தூய்மை தூவாவரும்.

உள்ளத்தின் தூய்மையும், செய்கின்ற செயலின் தூய்மையும், இவ்விரண்டும் அவர்கள் சேர்ந்துள்ள இனத்தின் தூய்மையை ஆதரவாகக் கொண்டுவரும்."

இந்த இரண்டு குறட்பாக்களின் கருத்துக்களையும், குகனைப்பற்றி இலக்குவன் கொடுத்திருக்கும் விளக்கத்துடன் இணைத்துப் பார்க்கவேண்டும். இக் குறட்பாடல்களைக் கருத்தில் வைத்துக்கொண்டே கம்பன் அந்த இரண்டு அடிகளையும் பாடினன் என்பது விளங்கும்.

சுற்றுச்சார்பால்-பழக்க வாசனையால்-மக்கள் குணம் மாறுபடும் என்பதைக் கம்பன் மற்றோர் இடத்திலும் குறிப்பிடுகின்றான்.

சீதாபிராட்டி, தனித்திருக்கும்போது அவளைக் கவர்ந்துசெல்ல இராவணன் முனிவர் வேடத்தில் வந்தான். அவனைச் சீதை உபசரித்து நீர் யார்? எங்கே வாழ்கின்றீர்? என்று கேட்டாள். அவன் "நான் அரக்கர்கள் வாழும் ஊரில் வாழ்கின்றேன்" என்றான். உடனே சீதை கூறியதாக வரும் பாடல் குறிப்பிடத்தக்கது.

" வனத்திடை மாதவர் மருங்குவைகலீர் !
புனத்திரு நாட்டிடைப் புனிதர் ஊர்புக
நினைத்திலிர், அறநெறி நினைக்கிலாதவர்
இனத்திடை வைகினிர், என்செய்தீர்! என்ருள்.

(ஆரண்ய. சடாயு உயிர். 52)

மாதவ வேடங்கொண்ட நீர் காட்டிலே முனிவர்கள் வாழும் இடத்திலே வாழவில்லை; சோலைகள் சூழ்ந்த நாட்டிலே நல்லோர்கள் வாழும் ஊரிலே புகுந்து வாழவும் நினைக்கவில்லை; அறநெறியைப்பற்றிச் சிறிதும் நினைக்காதவர்கள் கூட்டத்திலே வாழ்கின்றீர்; எவ்வளவு அடாத காரியத்தைச் செய்தீர்; என்றாள்."

இந்தப் பாடலிலும் சிற்றினம் சேர்வதால் வரும் சிறுமையை எடுத்துரைத்தான் கம்பன். இப்பாடலிலும் வள்ளுவர் அறம் விரவியிருப்பதைக் காணலாம். மேலே காட்டிய "நிலத்தியல்பால்" "மனந்தூய்மை" என்று தொடங்கும் குறள்களுடன் இப்பாடலின் கருத்தும் இணைந்திருக்கின்றது.

''வேண்டின வேண்டினர்க்கு
அளிக்கும் மெய்த்தவம்

(ஆரணிய, அகத்திய 8)

உண்மையான தவம், வேண்டியவற்றை யெல்லாம் வேண்டியவர்க்கு அளிக்கும் வல்லமையுள்ளது." என்பது கம்பன்.

"வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும்

விரும்பியவைகளை விரும்பியபடியே கொடுக்கும் ஆதலால், செய்யக்கூடிய தவத்தை இவ்வுலகிலேயே செய்ய வேண்டும்." என்பது வள்ளுவர் காட்டும் அறம். தவத்தைப்பற்றி வள்ளுவர் கூறிய கருத்தைக் கம்பன் அப்படியே எடுத்துக் காட்டுகின்றான். வள்ளுவர் இரண்டடிகளிலே கூறியதைக் கம்பன் ஒரே வரியில் அழகாக அமைத்துக் கூறினான். இத்திருக்குறள் நம் நெஞ்சிலே நுழையாமல் இருக்கமுடியுமா?

"உதவாமல் ஒருவன் செய்த
உதவிக்குக் கைம்மாறாக
மதவானை யனைய மைந்த!
மற்றும் உண்டாக அன்றே!

(கிட்கிந்தா, கிட்கிந்தை 66)

மதயானையைப்போன்ற வலிமையுள்ளவனே ! தான் உதவி செய்யாமலே; தனக்கு ஒருவன் செய்த உதவிக்கு எதிராகச் செய்யக்கூடிய உதவி ஏதேனும் உண்டோ? எத்தகைய உதவியும் அதற்கு நிகராகாது." இது அநுமான் இலக்குவனை நோக்கிக் கூறியமொழி. இதைப் படிக்கும்போது.

"செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது.

தான் உதவி செய்யாவிட்டாலும், தனக்கு ஒருவன் உதவி செய்தானாயின், அவ்வுதவிக்கு ஒப்பாக எதையும் செய்ய முடியாது. இவ்வுலகையும், வானுலகையும் கொடுத்தாலும் அவ்வுதவிக்கு இணையாகாது." என்பது திருக்குறள். இக்குறள் நம் நெஞ்சிலே நுழையாமல் இருக்க முடியுமா ?

## குறிப்பறிதல்

ஒருவருடைய உள்ளக் கருத்தை அவர் உரையினால் தான் உணரமுடியும் என்பதில்லை. முகத்தின் குறிப்பைக் கொண்டே உள்ளத்தில் இருப்பதை உணர்ந்துகொள்ளலாம். இது வள்ளுவர் கருத்து. பொருட்பாலில் உள்ள குறிப்பறிதல் என்னும் அதிகாரத்தில் இவ்வுண்மையை விளக்கிக் கூறுகிருர்.

"அடுத்தது காட்டும் பளிங்குபோல், நெஞ்சம்
கடுத்தது காட்டு முகம்.

கண்ணாடி, தன்னை அடுத்த பொருளை அப்படியே திருப்பிக் காட்டும் ; அதுபோல உள்ளத்தில் உள்ள சினத்தை முகம் காட்டிவிடும்."

"முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ உவப்பினும்
காயினும் தான்முந் துறும்

முகத்தைவிட அறிவுள்ளது வேறு ஒன்று உண்டோ? உவந்தாலும், சினந்தாலும் அவ்வுணர்ச்சியைத் தான் முன்னே காட்டிநிற்கும்."

இவ்விரண்டு குறள்களின் பொருளையும் கம்பன் அப்படியே தன் கவிதையில் அமைத்துக் காட்டுகின்ருன்.

விபீடணன் இராமனிடம் சரண் அடையவந்தபோது, அவனைப்பற்றி உங்கள் கருத்தென்ன வென்று இராமன் தன் தோழர்களைக் கேட்டான். பலர் பல விதமாகக் கூறினர். அப்பொழுது அநுமான், "விபீஷணன் மாசற்ற மனமுள்ளவன். நான சீதையைத் தேடிச் சென்றபோது அவனைக் கண்டேன். அவன் முகக்குறிப்பைக் கொண்டே அவன் உள்ளத்தை உணர்ந்துகொண்டேன்'' என்று கூறினன்.

''வண்டுஉளர் அலங்கலாய்! வஞ்சர் வாண்முகம்
கண்டதோர் பொழுதினில் தெரியும்; கைதவம்
உண்டுஎனின், அஃது அவர்க்கு ஒளிக்க ஒண்ணுமோ?
விண்டவர் பலபகல் மருவி வாழ்வரோ.

(யுத்த. வீடணன். 90)

வண்டுகள் மொய்க்கின்ற மலர் மாலையை அணிந்தவனே, வஞ்சகர் முகத்தைக் கண்டபோதே அவர்களை வஞ்சகர் என்று தெரிந்துகொள்ளலாம். உள்ளத்திலே வஞ்சகம் இருந்தால் அதை அவர்களால் ஒளிக்கமுடியாது. மனம் வேறுபட்டவர் பல நாள் நம் முடன் சேர்ந்து வாழ மாட்டார்கள்."

'உள்ளத்தின் உள்ளத்தை உரையின் முந்துற
மெள்ளத்தன் முகங்களே விளம்பும் (ஷை 91)

உள்ளத்திலேயிருக்கும் எண்ணங்களைச் சொல்லால் வெளியிடுவதற்கு முன்பே, மெதுவாகத் தம் முகங்களே சொல்லி விடும்.''

''அழிந்தது பிறவி என்னும்
அகத்தியல் முகத்திற் காட்ட'' (ஷை 141)

இப்பாடல்களிலே வள்ளுவரின் குறிப்பறிதல் என்னும் அதிகாரப் பொருளைக் கம்பன் அமைத்துக் காட்டிவிட்டான்.

### உதவி

இந்திரசித்து விடுத்த நாகபாசத்தால் இலக்குவன் முதலியவர்கள் கட்டுண்டு கிடக்கின்றனர்; இராமன் வருந்துகின்றான். அப்பொழுது கருடன் தோன்றுகின்றன்.

நாகபாசக் கட்டவிழ்ந்து எல்லோரும் எழுகின்றனர்; கருடன் புரிந்த இவ்வுதவியை இராமன் பாராட்டிப் புகழ்ந்தான்.

"ஆரியன் அவனை நோக்கி
ஆருயிர் உதவி, யாதும்
காரியம் இல்லான் போனான்;
கருணையோர் கடன்மையீதால்;
பேரியலாளர் செய்கை
ஊதியம் பிடித்தும் என்னார்;
மாரியை நோக்கிக் கைம்மாறு
இயற்றுமோவையம்? என்றான்.

(யுத்த. நாகபாச. 271)

இராமன் அவன் செயலைப் பார்த்து "நமது தோழர்களின் ஆருயிர் பிழைக்க அவன் செய்த உதவிக்கு எவ்வித எதிர் உதவியும் பெறுமல்போனான். இதுதான் இரக்கமுள்ளோர் கடமை. சிறந்த பண்புள்ளவர்கள் தங்கள் செய்கைக்கு இலாபம் பிடிப்போம் என்று எண்ணமாட்டார்கள். மழையின் உதவியைப் பார்த்து அதற்கு இவ்வுலகம் எதிர் உதவி செய்வது உண்டோ? என்று கூறினான்,'

"கைம்மாறு வேண்டா கடப்பாடு; மாரிமாட்டு
என் ஆற்றும் கொல்லோ உலகு. (அதி 22 கு 1)

எதிர் உதவியை விரும்பாமல் செய்யும் உதவியே கடமையறிந்து செய்யும் உதவியாகும்; மழைக்கு இவ்வுலகம் செய்யும் எதிர் உதவி ஏதேனும் உண்டோ."

இவ்வாறே பல விடங்களிலும், கம்பன் வள்ளுவர் அறததையும், அவர் குறட்பாக்களையும், அவற்றின் கருத்துக்களையும் எடுத்தாளுவதைக் காணலாம்.



# 13. கம்பன் தமிழ்க்காதல்

கம்பனுடைய தமிழ்க்காதல் கணக்கில் அடங்காதது. இடங்கிடைக்கும்போதெல்லாம் தன்னுடைய தமிழ்ப் பற்றை வெளியிடுகின்றான். அவன் தமிழ்ப் புலவர்களிடத்திலே பெருமதிப்புள்ளவன்; தமிழ்க்கவிதையிலே அளவற்ற அன்புள்ளவன் ; தமிழ் மொழியிலே காதல் கொண்டவன்.

கம்பன் தன் தாய் நாட்டுப் பற்றையும் தன் கவிதையில் வெளியிட்டிருக்கின்றான் ; தாய் நாட்டின்மீதும், தாய் நாட்டை ஆளுவோர்மீதும் அவன் கொண்ட அன்புக்கு அளவில்லை.

**கவிஞர்**

"முத்தமிழ்த் துறையின் முறைபோகிய
உத்தமக் கவிஞர்"

(சிறப்புப்பாயிரம் 9)

இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் தேர்ந்தவர்கள் உத்தமக் கவிஞர்கள் ; உயர்ந்த கவிஞர்கள்" என்பது கம்பன் கருத்து.

"செவ்விய மதுரம் சேர்ந்த நற்பொருளின்
சீரிய கூரிய தீஞ்சொல் வவ்வியகவிஞர்

(நாட்டுப். 1)

நல்ல இனிமை பொருந்திய உயர்ந்த பொருளமைந்த, சிறந்த தேர்ந்தெடுத்த இனிமையான சொற்கள் நிறைந்த கவிஞர்."

"நல்இயல் நவையறு கவிஞர் நாவரும்
சொல் எனத் தொலைவிலாத் தூணி தூக்கினன்

(யுத்த, முதற்போர் 114)

நல்ல இலக்கணத்துடன் குற்றமற்ற கவிகளைக் கூறும் கவிஞர்களின் நாவிலிருந்து இடையிறுது வருகின்ற சொற்

களைப்போல, எடுக்க எடுக்கக் குறையாத அம்புகளைக் கொண்ட அம்புப் புட்டியை இராமன் தன் முதுகிலே தூக்கினான்." இதிலே இராமனுடைய அம்புப் புட்டிலுக்கு நல்ல கவிஞர்கள் நாவிலிருந்து வரும் சொற்களை உவமையாகக் கூறினான்.

'கவிஞரின் அறிவின் மிக்காய்!
காலன் வாயக் களிக்கின்றேம்பால்,
நவையிலை வந்தது என் நீ!
அமுதுண்பான் நஞ்சுண்பாயோ!

(யுத்த. கும்ப கருணன், 130)

கவிஞரைவிட அறிவிற் சிறந்தவனே, காலன்வாயில் அகப்பட்டு மடிவதையே களிப்பாகக் கொண்டிருக்கும் எங்களிடம், குற்ற மற்றவனாகிய நீ வந்த காரணம் என்ன? அமுதத்தை உண்ணும் நீ, நஞ்சை உண்ணத் துணியலாமா?"

கும்பகருணன் போருக்கு வந்தான். அவனுக்குப் புத்தி புகட்டி இராமன் பக்கம் இழுக்கலாம் என்று அவனிடம் விபீடணன் சென்றான். அப்பொழுது கும்பகருணன் கூறியமொழிகள் இவை. இங்கே கவிஞரின் அறிவைக் கம்பன் புகழ்ந்திருப்பதைக் காணலாம்.

"சான்றோர் கவியெனக் கிடந்த
கோதாவிரியினை வீரர்கண்டார்.

(ஆரண்ய, சூர்பணகை. 1)

அறிஞரால் ஆக்கப்பட்ட கவியைப்போலக் காட்சியளிக்கும் கோதாவிரியாற்றை இராம இலக்குவர்கள்கண்டனர்.',

சான்றோர் கவிகள் பொருள்நிறைந்தவை; சிந்திக்கச் சிந்திக்கச் சிறந்தபொருள்களைத் தருபவை; அவைபோல் கோதாவிரி நதியும் ஆழமானது; அதன் அடியிலே பல இயற்கைச் செல்வங்கள் குவிந்திருக்கின்றன; என்பதே இதன் கருத்து. இவ்வாறு கவிஞர்களைப் போற்றிப் புகழ்ந்த கவிதைகள் பலவுண்டு.

**அகத்தியர்**

தமிழுக்கு இலக்கணம் செய்தவர் அகத்தியர் என்பது தமிழ் வரலாறு. அகத்தியருக்குத் தமிழ் முனிவர் என்று பெயர். அகத்தியரால் ஆக்கப்பட்ட தமிழ் இலக்கணத்தின் பெயர் அகத்தியம். அது முத்தமிழுக்கும் இலக்கணங் உரைப்பது என்பது வழி வழியாகத் தமிழர் கூறிவரும் வழக்கு. கம்பன் அகத்தியரைப்பற்றி உரைக்கும் இடம்களில் எல்லாம் அவரையும் தமிழையும் இணைத்தே பாடுகின்றான். தமிழுக்குத் தொண்டு செய்த அகத்திய முனிவர்மேல் அவன் வைத்திருந்த அன்புக்கு அப்பாடல்களே சான்றும்.

**"தமிழ் எனும் அளப்பரும் சலதி தந்தவன்**

(பால. தாடகை. 38)

தமிழ் என்று சொல்லப்படும் எல்லை காணமுடியாத கடலுக்கு இலக்கணம் செய்து தந்தவன்."

தமிழ் மிகவும் பரந்தமொழி: அளவற்ற இலக்கியங்கள் அமைந்தமொழி; கடல்போன்ற எல்லை காணமுடியாத மொழி; என்று தமிழின் பெருமையையும இதனல் எடுத்துக் காட்டினன் கம்பன்.

பரதன், இராமனை மீண்டும் அழைத்துவந்து நாடாளச் செய்வேன் என்று கூறிக் காட்டுக்குப் புறப்பட்டான். அவனுடன் அயோத்தியிலிருந்து படைகளும் புறப்பட்டன. அப்படைகளை அகத்திய முனிவருக்கு ஒப்பிட்டுப் பாடுகிறன் கம்பன்.

**"அலைநெடும் புனல் அறக்குடித்தலால், அகம்**
**நிலைபெற நிலைநெறி நிறுத்தலால், நெடு**
**மலைகளை மண்ணுற அழுத்தலால், தமிழ்த்**
**தலைவனை நிகர்த்தது அத்தயங்கு தானையே**

(அயோத்தி. ஆற்றுப். 44)

கடல்நீர் வற்றும்படி குடித்தலால் — உள்ளத்திலே நிலைக்கும்படி நிலையான ஒழுக்கநெறிகளைக் கூறி நிலை

நாட்டுவதால்—மலைகளை மண்ணிலே புதையும்படி அழுத்துவதால்—தமிழ்த்தலைவனாகிய அகத்தியனை ஒத்திருந்தது அச்சேனை.'' இப் பாட்டின்மூலம் அகத்தியர் பெருமையை விளக்கினான் கம்பன்.

''நீண்ட தமிழால் உலகை நேமியின் அளந்தான்
(ஆரண்ய. அகத்திய. 35)

திருமால் தனது அடியால் உலக முழுவதையும் அளந்ததுபோல, எல்லைகாணமுடியாத தமிழ் மொழியை உலகமெல்லாம் பரவச் செய்தான்.''

''தழல்புரை சுடர்க் கடவுள் தந்த தமிழ்தந்தான்
(ஷை 41)

நெருப்பைப்போன்ற ஒளியுள்ள கடவுளாகிய சிவபெருமான் கொடுத்த தமிழை இலக்கணத்துடன் பரவச் செய்தவன்.''

''என்றும் உள தென்தமிழ் இயம்பி இசைகொண்டான்
(ஷை 47)

மக்கள் தோன்றிய நாள்முதல் நிலைத்திருக்கின்ற அழகிய தமிழுக்கு இலக்கணம் அமைத்துப் புகழ் பெற்றவன்.''

இவ்வாறு அகத்திய முனிவரைப் பல இடங்களில் பாராட்டிப் பாடியிருக்கின்றான். அவர் தமிழ் முனிவர்; தமிழுக்கு இலக்கணம் வகுத்தவர்; என்ற அன்பினாலேயே அவரைப்போற்றி மகிழ்கின்றான் கம்பன்.

## தமிழ்

''வண்டு தமிழ்ப் பாட்டு இசைக்கும் தாமரையே
(கிட்கிந்தா. பம்பாநதி. 29)

வண்டுகள் இனிய பாட்டுக்களைப் பாடிக்கொண்டிருக்கும் தாமரை.'' தமிழ்—இனிமை.

''வண்டமிழுடைத் தென்றிசை
(ஷை பிலநீங்கு 2)

சிறந்த தமிழ்மொழி வழங்கிக்கொண்டிருக்கும் தென் திசை."

"தமிழ் நிகர் நறவம்

(ஷை 37)

தமிழைப்போல் இனிமையளித்து உள்ளத்தைக் கவரும் தேன்."

"தண்டமிழ்ப் பசுந் தென்றல்

(சுந்தர, ஊர்தேடு. 210)

குளிர்ந்த தமிழ்மொழி வழங்கும் நாட்டிலிருந்து வீசும் இனிய தென்றற் காற்று."

இவைகள் தமிழின் இனிமையையும் சிறப்பையும் எடுத்துக்காட்டும் பகுதிகள். தமிழ்ப் புலவர்களையும், தமிழ் மொழியையும் வாயாரப் புகழ்ந்த கம்பன் தமிழ் நாட்டின் சிறப்பை எடுத்துக்காட்டவும் மறந்துவிடவில்லை.

## தமிழ்நாடு

"தென்தமிழ் நாட்டு அகன் பொதியில்
திருமுனிவன் தமிழ்ச் சங்கம் சேர்கிற்றீரேல்
என்றும் அவன் உறைவிடமாம்;
ஆதலால் அம்மலையை இடத்திட்டு ஏகிப்,
பொன்திணிந்த புனல் பெருகும்
பொருநையெனும் திருநதி பின்புஒழிய, நாகக்
கன்றுவளர் தடம்சாரல் மயேந்திரமா
நெடுவரையும் கடலும் காண்டிர்

(கிட்கிந்தா. நாடவிட்ட. 31)

தென் தமிழ்நாட்டிலே அகன்ற பொதியமலையிலே அகத்திய முனிவன் தலைமையிலே ஒரு தமிழ்ச் சங்கம் உண்டு; அங்கே போவீர்களானால் நீங்கள் மீளமுடியாது; தமிழிலே ஈடுபட்டு அங்கேயே தங்கிவிடுவீர்கள்; ஆதலால் அதன் வலப்புறமாகச் செல்லுங்கள்; செம்பொன்னாகிய தாம்பிரம் நிரம்பிய நீர் நிறைந்த பொருநை என்னும் நதியைத் தாண்டிச் செல்லுங்கள். நாகமரக் கன்றுகள் வளர்ந்திருக்கின்ற சாரலையுடைய மகேந்திர மலையையும், கடலை

யும் காண்பீர்கள்." இப்பாட்டில், தமிழின் சிறப்பு, தாம்பிரபரணி நதியோடும் பாண்டிநாட்டின் சிறப்பு இவைகள் கூறப்பட்டன.

"அத்திரு நாட்டினை அண்டர் நாடு
ஒத்திருக்கும் என்றால் உரை ஒக்குமோ?
எத்திறத்தினும் ஏழுலகும் புகழ்
முத்து முத்தமிழும் தந்து முற்றுமோ
(கிட்கிந்தா. ஆறுசெல். 53)

அந்தச் செல்வம்நிறைந்த நாட்டைத் தேவலோகத்தை ஒத்திருக்கும் என்றால், அவ்வுரை பொருந்தாது. எந்த வகையிலும், ஏழுலகமும் புகழ்ந்து போற்றும், பழமையான முத்தமிழையும் தந்து, முற்றுப்பெற்ற செல்வமுடன் விளங்கும் தமிழ்நாட்டைத் தேவலோகம் ஒத்திருக்குமோ? ஒவ்வாது."

இவ்வாறு தமிழ் நாட்டைத் தேவலோகத்திலும் சிறந்தது என்று புகழ்ந்து பாடினான். தான் பிறந்த தாய் நாட்டை—சோழ நாட்டையும் கம்பன் தன் காவியத்திலே புகழ்ந்து பாட மறந்து விடவில்லை.

"கன்னியின் வாழை கனியீவ; கதிர்வாளின்
செந்நெல் உள, தேன் ஒழுகும்போதும் உள; தெய்வம்
பொன்னி யெனலாய புனல் ஆறும் உள; போதா
அன்னம் உள, பொன்னிவளொடு அன்பின்விளையாட
(ஆரண்ய. அகத்திய. 58)

அழகிய இளம்வாழைகள் கனிகள் தருகின்றன; கதிரும் வாலும் உள்ள செந்நெல் உண்டு; தேன்சிந்தும் மலர்களும் இருக்கின்றன; தெய்வத்தன்மை பொருந்திய காவிரியென்று சொல்லும்படியான நீர்வற்றாத நதியும் உண்டு; சீதையுடன் சேர்ந்து விளையாட பெருநாரை அன்னம் முதலிய பறவைகளும் இருக்கின்றன."

" நளிநீர்ப் பொன்னிச்
சேடுறு தண்புனல் தெய்வத் திருநதி
(கிட்கிந்தா, நாடவிட்ட 29)

குளிர்ந்தநீர் நிறைந்தோடும் பொன்னி; வெடித்த விளைநிலத்திலே பாயும் குளிர்ந்தநீர் உள்ள தெய்வத்தன்மையுள்ள ஆறு."

"துறக்கம் உற்ருர் மனம் என்னத்
துறை கெழுநீர்ச் சோணுடு (ஷை 30)

சொர்க்கத்தை யடைந்தவர்களின் உள்ளத்தைப்போல தெளிந்த நீர்த்துறைகள் நிறைந்திருக்கின்ற நீர்வளமுள்ள சோழநாடு"

சோழநாட்டின் இயற்கைவளம், காவிரியாற்றின் பெருமை, சோணுட்டின் நீர் வளம் இவைகளை இப்பகுதிகள் விளக்கும்.

"புவிபுகழ் சென்னிபேர் அமலன் தோள்புகழ்
கவிகள்தம் மனையெனக் கனகராசியும்,
சவியுடைத்தூசும், மென்சாந்து, மாலையும்,
அவிர் இழைக் குப்பையும், அளவிலாதது.
(கிட்கிந்தா, பிலநீங்கு 35)

உலகம் புகழ்கின்ற சோழனுகிய சிறந்த அமலனுடைய புயவலிமையைப் புகழ்ந்துபாடும் கவிஞர்கள் வறுமையற்றுவாழ்வர். அவர்கள் இல்லத்திலே பொற்குவியலும், தூய்மையான ஆடைகளும், மெல்லிய மணம் வீசும் வாசனைச் சாந்துகளும், மலர்மாலைகளும், ஒளி பொருந்திய அணிகலன்களும் அளவில்லாமற் குவிந்து இடக்கும். அதுபோல் அந்தப் பிலம் அளவற்ற செல்வத்தைப் பெற்றிருந்தது."

அநுமானும், அவன் துணைவர்களும் சீதையைத் தேடித் தென்றிசையிலே சென்றனர். செல்லும் வழியிலே ஒரு சுரங்க வழியாக நிலத்திற்குள் போனுர்கள். அங்கே காணப்பட்ட மனிதசஞ்சாரமற்ற ஒரு நகரம் இத்தகைய செல்வம் பொருந்தியிருந்தது. இந்நிகழ்ச்சியிலே சோழமன்னுடைய கொடைத் தன்மையைக் கம்பன் புகழ்ந்திருப்பதைக் காணலாம்.

"சென்னி நாள் தெரியல் வீரன்,
தியாகமா விநோதன், தெய்வப்
பொன்னி நாட்டு உவமை வைப்பைப்
புலன்கொள நோக்கிப் போனான்

(யுத்த. மருத்துவ. 58)

சோழன்; புதிய மலர்மாலையை அணிந்த வீரன்; தியாகமாவிநோதன் ஆளுகின்ற நாடு; தெய்வத் தன்மை பொருந்திய பொன்னி நதிபாயும் நாடு; சிறந்த நாட்டுக்கு உவமையாக எடுத்துக் கூறத் தகுந்த நாடு; இந்த நாட்டைத் தன் புலன்கள் மகிழ்ச்சி யடையும்படி பார்த்துக் கொண்டு போனான்."

அநுமான் மருத்துவ மலையைக் கொண்டு வர வடக்கு நோக்கிச் சென்ற பொழுது வழியிலே கண்ட காட்சிகளில் இது ஒன்று. அநுமான் உள்ளத்தைக் கவரும்படி அவ்வளவு சிறப்புடன் இருந்தது சோழநாடு.

மேலே காட்டிய இரண்டு பாடல்களாலும் சோழநாட்டின் பெருமையைக் கூறினான்; சோழ மன்னர்களின் கொடையைப் பாராட்டினான். தியாகமா விநோதன்—தியாகத்தையே சிறந்த விளையாட்டாகக் கொண்டவன்.

மேலே கூறியவற்றைக் கொண்டு கம்பனுடைய தமிழ்ப்பற்றையும், தாய் நாட்டன்பையும் காணலாம்.



# 14. கம்பனும் நன்றியறிவும்

தமிழர் நாகரீகத்திலே செய்ந்நன்றி மறவாமை ஒரு சிறந்த பண்பு. பிறர் செய்த நன்றியை மறவாதவனே சிறந்த மனிதன்; நன்றியை மறப்பவன் மனிதத் தன்மை உள்ளவன் அல்லன். நன்றிமறவாமையை ஒரு சிறந்த ஒப்பற்ற ஒழுக்கமாக வலியுறுத்திக் கூறுகிறார் வள்ளுவர்.

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு

வேறு எந்த நன்மையை மறந்து விட்டாலும் அக் குற்றத்திலிருந்து தப்பித்துக் கொள்ள வழியுண்டு. பிறர் செய்த நன்றியை மறந்து விட்டால் அக்குற்றத்திலிருந்து தப்பித்துக் கொள்ள வழியேயில்லை."

என்பது வள்ளுவர் வாய்மொழி. வள்ளுவர் காட்டும் வழியே தமிழர் அறம்; தமிழர் நெறி; என்பவர்கள் இக் குறட்பாவின் கருத்தை மறுக்க மாட்டார்கள். இக்குறளுக் குக் கம்பன் தன் கவிதையில் ஒரு விளக்கம் எழுதியிருக் கின்றான்.

"சிதைவகல் காதல் தாயைத்,
தந்தையைக், குருவைத், தெய்வப்
பதவி அந்தணரை, ஆவைப்,
பாலரைப், பாவை மாரை,
வதைபுரிகு நர்க்கும் உண்டாம்
மாற்றலாம் ஆற்றல்; மாயா
உதவி கொன்றார்க்கு என்றேனும்
ஒழிக்கலாம் உபாயம் உண்டோ

(கிட்கிந்தா, கிட்கிந்தைப் 61)

அழியாத அன்புள்ள தாயை—தந்தையை—குருவை —தெய்வம் போலிருந்து மக்களுக்கு நலம் புரியும் அந்த ணரை—பசுவை—பாலர்களை—பெண்களை கொலை செய்

கின்றவர்களுக்கும் அப்பாவத்தை மாற்றிக்கொள்ளக் கூடிய பிராயச்சித்தங்கள் உண்டு; ஆனால் தான் பெற்ற என்றும் அழியாத உதவியை மறந்தவர்க்கு அம்மறதியால் வந்த தீமையைப் போக்க வழியேயில்லை."

இது மேலே காட்டிய குறளுக்குக் கம்பன் கூறிய விரிவுரை. கம்பன் இவ்வாறு செய்நன்றி மறவாமையை வாயால் வலியுறுத்தியதோடு மட்டும் நின்றுவிடவில்லை.

தனக்கு அறிவூட்டிய தமிழ்க்கவிகளைப்போற்றினான்; தனக்குப் பெருமை தந்த தமிழைப் பாராட்டினான்; தான் பிறந்து வளர்ந்த சோழ நாட்டைப் புகழ்ந்தான்; தான் நீந்தி விளையாடி, உண்டு மகிழ்ந்த காவிரியையும் கொண்டாடினான். இவ்வளவுக்கும் மேலாகத் தன் தமிழ்க் காவியத்தைப் பாடி முடிக்க உதவி செய்த வெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலையும் மனமார வாயாரப் பாராட்டிப் பாடியிருக்கின்றான்.

பிறர் செய்த நன்றியை மறவாமலிருப்பவனே தானும் பிறர்க்கு நன்மை செய்வான். இவ்வாறு ஒவ்வொருவரும் பிறருக்கு நன்றி செய்யும் பண்புள்ளவரா யிருந்தால் மக்கள் அனைவரும் இன்புறுவர். அனைவரும் அன்போடு ஒன்றுபட்டு உயர்ந்த நிலையிலே வாழ்வார்கள். ஆதலால் தான் நன்றி மறவாமை என்பதை எல்லாவற்றினும் உயர்ந்த பண்பாக நீதி நூலோர் உரைத்தனர்.

கம்பனுக்குப் பலவகையிலும் ஆதரவளித்தவர் சடையப்ப வள்ளல். சடையப்ப வள்ளலின் ஆதரவில்லாவிட்டால் கம்பனால் சிறந்ததொரு தமிழ்க் காவியத்தைச் செய்திருக்கமுடியாது. "தோமறுமாக்கதை, சடையன் வெண்ணெய் நல்லூர்வயின் தந்ததே. குற்றமற்ற இப் பெரிய காவியம், சடையப்ப வள்ளலின் ஆதரவால், வெண்ணெய் நல்லூரிலே உறைந்து, செய்து கொடுத்ததாகும்" என்று கம்பனே இவ் வுண்மையை உரைக்கின்றான்.

இவ்வாறுவள்ளல் சடையப்பரைக் கம்பன் பாராட்டிப் பாடியிருக்கிறான். தமிழ் உள்ளவரையிலும் கம்பன் காவியம் கதிரவனைப்போல் ஒளிவிட்டு நிற்கும்; கம்பன் காவியம்

உள்ளவரையிலும் சடையப்ப வள்ளலின் புகழ் குன்றாது. இந்த அளவுக்குக் கம்பன் நன்றியறிவுள்ளவன்; இதுவே உண்மைத் தமிழனுடைய உணர்ச்சி; பண்பு; இவ்வுணர்ச்சியும் பண்பும் போற்றத் தக்கவை.

விசுவாமித்திரன் தன் வேள்வியைக் காப்பதற்காக இளம்பருவத்திலேயே இராமனையும் இலக்குவனையும் அழைத்துச் சென்றான். வேள்வி தொடங்குவதற்கு முன் அவன் இராமனுக்குப் படைக்கலங்களைக் கொடுத்தான். இதைப்பற்றிக் கூறும்போது கம்பன் சடையப்ப வள்ளலை ஒரு உவமானமாகக்காட்டிப் பாடுகின்றான்.

"மன்னவர் வறுமை நோய்க்கு
மருந்தன சடையன் வெண்ணெய்
அண்ணல் தன் சொல்லே யென்ன
படைக்கலம் அருளினானே

இவ்வுலகில் உள்ளவர்களின் வறுமைப் பிணிக்கு மருந்து போன்றவன்; சடையன் என்ற பெயர் உள்ளவன்; வெண்ணெய் நல்லூரிலே வாழ்கின்றவன்; சிறந்த பெருமையுள்ளவன். அவனுடைய உறுதி மொழி, வாழ்க்கையை நாசமாக்கும் வறுமையை எப்படி அடித்துநொறுக்குமோ, அதுபோல், பகைவர்களை அடித்து நொறுக்கத் தகுந்த படைக்கலங்களை விசுவாமித்திரன் இராமனுக்குக் கொடுத்தான்."

இங்கே இராமன் பெற்ற படைக்கலங்களையும், சடையப்பன் உறுதிமொழிகளையும் ஒப்பிட்டான்.

"வண்ண மாலை கைபரப்பி
உலகை வளைந்த இருள் எல்லாம்
உண்ண வெண்ணித் தண்மதியத்து
உதயத் தொழுந்த நிலாக்கற்றை,
விண்ணும் மண்ணும் திசையனைத்தும்
விழுங்கிக் கொண்ட விரிநன்னீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்தன்
புகழ்போல் எங்கும் பரந்ததே

மாலைக் காலத்தின் பின் இருள் தன் கைகளை விரித்து இவ்வுலகை வளைத்துக்கொண்டது; அந்த இருளை உண்பதற்கு நினைத்துக் குளிர்ந்த சந்திரோதயத்திலிருந்து நிலவொளிதோன்றிப் பரவிற்று; அது நல்ல நீர்வளம் பொருந்திய வயல்கள் நிறைந்த வெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலின் புகழ் எங்கும் பரவியது போலிருந்தது; வானுலகம், மண்ணுலகம், ஏனைத் திசைகள் எல்லாவற்றிலும் உள்ள இருளை விழுங்கிக் கொண்டது''

இப்பாடலினால் சடையப்பவள்ளலின் புகழைப் போற்றினான்; எத்திசையிலும் அவன் புகழ் பரவியிருந்தது. நிலவொளி இருளை விழுங்குவதைப்போல் அவன் கொடை வறியவர் துன்பத்தைத் துடைத்தது; இதனால் அவன் புகழ்நிலவொளிபோல் எங்கும் பரந்தது; என்று கூறினான் கம்பன்.

இலங்கைக்குச் செல்ல சேது பந்தனம் நடைபெறுகின்றது; குரங்குப் படைகள் கடலிலே அணைகட்டுகின்றன. நளன் என்பவன்தான் அந்த அணையைக் கட்டும் சிற்பி. குரங்குகள் மலைகளைக் கொண்டுவந்து கொடுக்கின்றன. அவற்றை அலட்சியமாக வாங்கி அணைகட்டுகின்றான் நளன். இந்த நிகழ்ச்சியைக் கம்பன் பாடும்போது சடையப்பவள்ளலைப் புகழ்ந்துபோற்றுகின்றான்.

''மஞ்சினில் திகழ்தரு மலையை மாக்குரங்கு
எஞ்சுறக் கடிதெடுத்து எறியவே, நளன்
விஞ்சையால் தாங்கினன், சடையன் வெண்ணெய்
தஞ்சம் என்றோர்களைத் தாங்கும் தன்மைபோல்

(யுத்த. சேதுபந்தன. 9)

மேகம் தவழ்கின்ற ஒரு மலையைப் பெரிய குரங்கு ஒன்று அப்படியே பெயர்த்தெடுத்து நளன் கையிலே வீசிற்று; அவன் தன் சிற்பவித்தையினால் அதைத் தாங்கினான். சடையப்ப வள்ளல், தன்னூருக்கு வந்து தன்னிடம் தஞ்சம் புகுந்தவர்களை எப்படித் தாங்குவானோ, அப்படி அம்மலையைத் தாங்கினான் நளன்''.

தஞ்சம் என்று வந்தவர்களையெல்லாம் தளர்ச்சியடை யாமல் ஆதரிப்பவன் சடையப்ப வள்ளல் என்பதை இப் பாடலிலே எடுத்துக்காட்டினன்.

கம்பன் இவ்வாறு பலவிடங்களிலே சடையன் பெருமையைப் பாராட்டிக் கூறுகின்றான். இறுதியிலே எல்லாவற்றிலும் சிறப்பாக, இராமனுக்கு முடிசூட்டும் நிகழ்ச்சியைக் கூறுமிடத்தில் சடையப்ப வள்ளலுக்கு என்றும் அழியாத பெருமையை அளித்திருக்கிறான். சடையப்ப வள்ளலின் முன்னோர்கள் முடியை எடுத்துக்கொடுத்தனர். வசிட்டன் அதை வாங்கி இராமன் சிரத்திலே சூட்டினன்." என்று முடிக்கின்றான். தனக்கு நன்றிசெய்த சடையப்ப வள்ளலை, இத்தகைய அழியாத புகழுக்கு ஆளாக்கிய கம்பன் பெருமையே பெருமை.

"அரியணை அநுமன் தாங்க,
அங்கதன் உடைவாள் ஏந்தப்,
பரதன் வெண் குடை கவிக்க,
இருவரும் கவரி வீச,
விரைசெறி குழலி ஓங்க,
வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
மரபு உளோர் கொடுக்க, வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி (யுத்த. முடிசூட்டு 38)

அநுமான் அரியணையைச் சுமந்து நிற்கின்றான்; அங்கதன் உடை வாளைத் தாங்கி நிற்கின்றான்; பரதன் வெண் பட்டுக் குடை பிடிக்கின்றான்; இலக்குவன், சத்துருக்கனன் இருவரும் இருபுறத்திலிருந்து கவரி வீசுகின்றனர்; மணம் கமழும் கூந்தலையுடைய சீதை மகிழ்ச்சியுடன் பக்கத்திலே அமர்ந்திருக்கின்றாள்; வெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலின் முன்னோர்கள் முடியை எடுத்துக்கொடுத்தனர்; வசிட்டன் அதை வாங்கி இராமன் தலையிலே சூட்டினன்."

கம்பனுடைய நன்றியுணர்ச்சி எவ்வளவு பெரிது என்பதைக் காட்ட இந்த ஒரு பாடலே போதுமானது. இவ்வாறு தன்னைப் புரந்த சடையப்பரின் சொல்லுறுதியை — கொடையை — புகழை — பரம்பரைப் பெருமையைப் பாராட்டியிருக்கின்றான். கம்பன்காட்டும் இவ்வழியே தமிழர் வழி; தமிழ் முன்னோர்கள்வழி.

# 15. கம்பன் கண்ட அரசியல்

ஒரு நாடு எப்படியிருக்கவேண்டும்; ஒரு நகரம் எப்படி யிருக்கவேண்டும்; என்று கம்பன் கருதுகின்ருன் என்பதைப் பற்றிக் கம்பன் கருத்துக்கள் என்ற பகுதியிலே கூறப்பட்டது. ஒரு நாட்டை நல்ல நிலேயிலே சீர்திருத்தி அமைக்கவேண்டும் என்பது கம்பன் கருத்து.

கம்பன் காலத்தில் மன்னர்களே அரசாட்சியின் தலேவர்களாயிருந்தனர்; மன்னர்களேத் தவறு செய்யாமல் தடுக்க—நல்வழியிலே நடத்திச்செல்ல--மந்திரிகள் இருந்தனர். மந்திரிகள் நாட்டுமக்களின் மனப்போக்கறிந்து, அவ்வழியிலே ஆட்சிநடக்க அரசர்களுக்குத் துணேபுரிந்து வந்தனர்.

மன்னர்களும், மக்கள் உள்ளம் அறிந்து நடக்கும் மந்திரிகளும் சேர்ந்து அரசாண்ட காலத்தில் பல அறநூல்கள் தோன்றின. மந்திரிகள் கடமை என்ன? என்பவைகளேப்பற்றி அவ்வற நூல்களிலே அறிஞர்கள் கூறி வைத்தனர். அவைகளேப் பின்பற்றியே மன்னர்களும் மந்திரிகளும் நடந்துவந்தனர். இவைகளே ஒட்டியே கம்பனும் தன் கருத்துக்களே வெளியிட்டிருக்கின்ருன்.

## அரசும் குடிகளும்

"மன்னன் உயிர்த்தே மலர்தலே உலகம்" என்பது முன்னேர் கொள்கை. "உலகம் மன்னனே உயிராகக் கொண்டிருக்கின்றது." என்பதே இதன் கருத்து. இது புறநானூற்றுப் பாட்டின் ஒரு பகுதி.

மன்னன் இல்லாவிட்டால் உலகம் வாழமுடியாது,' என்பது முன்னேர் கருத்து. மன்னன் எல்லா அதிகாரங்களும் பெற்றிருந்த காலத்தில் எழுந்த கருத்து இது.

கம்பன் காலத்தில் இக்கருத்து மாறிவிட்டது. குடிகள் தான் உயிர்; மன்னன் தான் உடம்பு. உயிரில்லாவிட்டால் உடம்பு இயங்கமுடியாது. குடிகள் இல்லாவிட்டால்—

குடிகளின் ஆதரவு — ஒத்துழைப்பு — இல்லாவிட்டால் அரசாட்சி இயங்கமுடியாது; என்ற கருத்து கம்பன் காலத்திலேயே தோன்றிவிட்டது.

"வய்யம் மன்னுயிராக, அம்மன்னுயிர்
உய்யத் தாங்கும் உடலன்ன மன்னனுக்கு
அய்யம் இன்றி அறம்கூடவாது அருள்
மெய்யின் நின்றபின் வேள்வியும் வேண்டுமோ
(அயோத்தி. மந்தரை சூ. 17)

உலகத்தை உயிராகக்கொண்டு, அவ்வுயிர்களைத்தாங்கும் உடலாகத் தன்னை எண்ணிக்கொண்டு அதற்கேற்றபடி அரசு நடத்துகின்றவனே அரசன். ஐயம் இல்லாமல் அறம் என்பது அவனுக்குத் துணையாக நிற்கும். அரசன் இரக்கத்தையும், உண்மையையும் துணையாகக்கொண்டு நிற்பானுயின் அவன் வேள்வி செய்யவும் வேண்டுமோ?"

இச் செய்யுளிலே அரசன் கடமையைக் கூறினன். மக்கள கருத்தறிந்து ஆள்வதுதான் அரசன் கடமையென்று மொழிந்தான்.

## நாடு

"தள்ளாவிளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு

நீங்காத விளைவும், அறவோர் துறவோர் ஆகிய சிறந்தவர்களும், குறைவற்ற செல்வம் உள்ளவர்களும் சேர்ந்திருப்பதே சிறந்த நாடாகும்." என்று வள்ளுவர் கூறினர். இல்லாதவர்களும் உள்ளவர்களும் இணைந்த சமுதாய அமைப்பிலே இந்த நிலைமையிருப்பதே ஒரு நாட்டுக்குப் பெருமை என்று எண்ணினர் வள்ளுவர். கம்பன் காலத்திலும் இச் சமுதாய அமைப்புத்தான் நிலைத்திருந்தது. ஆதலால் கோசலநாடு வள்ளுவர் எடுத்துக்காட்டிய நாட்டைப் போலிருந்தது என்று காட்டுகின்றுன் கம்பன்.

"கதிர்படு வயலின் உள்ள;
கடிகமழ் பொழிலின் உள்ள;

முதிர்பல மரத்தின் உள்ள;
முதிரைகள்; புறவின் உள்ள;
பதிபடு கொடியின் உள்ள,
படிவளர் குழியின் உள்ள;
மதுவனம் மலரில் கொள்ளும்
வண்டென மள்ளர் கொள்வார் (நாட்டு. 22)

கதிர் முற்றி விளைந்திருக்கின்ற வயலில் உள்ள நெல்; மணம் வீசும் பொழிலில் உள்ள மலர்கள்; பல மரங்களிலும் முதிர்ந்திருக்கும் கனிகள்; பயறு வகைகள்; காட்டிலே உள்ள ஏனைய விளைபொருள்கள்; பதிக்கப்பட்ட கொடியிலே தோன்றிய பொருள்கள்; பூமிக்குள் வளர்ந்து ஆழத்தில் உள்ள கிழங்குகள்; இவைகளையெல்லாம், மதுவைக் காட்டு மலர்களிலே திரட்டும் வண்டுகளைப்போல உழவர்கள் திரட்டுவார்கள்."

கோசலநாடு தள்ளாவிளையுளையுடையது என்பதற்கு இப்பாட்டு உதாரணம்.

"அகில் இடும்புகை, அட்டில் இடும்புகை,
நகரின் ஆலை நறும்புகை நான்மறை
புகலும் வேள்வியின் பூம்புகையோடு அளாய்
முகிலின் விம்மி முயங்கின எங்கணும்
(மேற்படி 41)

அகில்கட்டைகளிலிருந்து வரும் புகை, சமையல் வீடுகளிலிருந்து வரும் புகை, விளங்குகின்ற கரும்பாலைகளிலிருந்து வருகின்ற புகை இவைகள் நான்கு வேதங்களும் கூறுகின்ற முறைப்படி செய்யும் வேள்விகளிலிருந்து எழும் புகைகளோடு கூடி மேகத்தைப்போல எங்கும் பரந்து நெருங்கியிருந்தன."

இதனாலே வேள்விசெய்யும், அந்தணர்கள், துறவிகள், இவர்களுக்கு உதவும் கொடையாளர் முதலியவர்கள் கோசல நாட்டிலே நிறைந்திருந்தனர் என்று கூறினான் கம்பன். தக்கார் அந்நாட்டிலே நிறைந்திருந்தனர் என்பதற்கு இப்பாட்டு உதாரணம்.

'வண்மை யில்லை ; ஓர் வறுமையின்மையால்
திண்மையில்லை நேர் செறுநர் இன்மையால்
உண்மையில்லை; பொய்யுரை இலாமையால்
வெண்மையில்லை ; பல கேள்வி மேவலால்''

(நாட்டு. 53)

அந்நாட்டிலே எல்லோரும் பொருட்செல்வம் உள்ளவர்கள்; வீரச்செல்வம் உள்ளவர்கள்; மெய்யுரைக்கும் பண்புச் செல்வம் உள்ளவர்கள்; கல்விச்செல்வமும் கேள்விச்செல்வமும் உள்ளவர்கள்; என்பதை இப் பாடலால் காணலாம். இத்தகைய தாழ்விலாச் செல்வரைக் கொண்டிருந்தது அந்நாடு.

ஒரு நாடு எப்படியிருக்கவேண்டும் என்று வள்ளுவர் கூறியதையே, கம்பன் தனது காவியத்திலே அமைத்துக் காட்டிய அருமையை மேலேகாட்டிய மூன்று பாடல்கள் காட்டுகின்றன.

## ஆளுவோர் கடமை

மக்களுக்கு நன்மை செய்வதே ஆளுவோர் கடமை; இதற்கு அடையாளமாகவே மன்னர்கள் வெண்பட்டுக் குடையின்கீழ் அமர்ந்திருப்பர் என்பது கம்பன் கருத்து.

''மண்ணிடை உயிர்தொறும் வளர்ந்து தேய்வின்றி
தண்ணிழல் பரப்பவும், இருளைத் தள்ளவும்.
அண்ணல்தம் குடைமதி அமையும், ஆதலால்
விண்ணிடை மதியினை மிகை இது என்னவே

(பால, அரசியல். 9)

உலகில் உள்ள உயிர்களுக்கெல்லாம் இனிய நிழலைத் தருவது; உலகில் உள்ள—உலக மக்களிடம் உள்ள—அறியாமையாகிய இருளை அகற்றிவிடவும் அண்ணலின் மதிபோன்ற குடைநிழலே போதும். ஆதலால் வானத்திலே உள்ள மதி மிகையாகும்; என்று சொல்லும்படி சிறந்திருந்தது தசரதன் குடை நிழல்.''

இப்பாடலைப் படிக்கும்போது நமக்குச் சிலப்பதிகாரத்தின் மங்கல வாழ்த்துப்பாடல் நினைவுக்கு வருகின்றது.

'திங்களைப் போற்றுதும்! திங்களைப் போற்றுதும்!
கொங்கு அலர் தார்ச்சென்னி, குளிர்வெண்குடை
போன்றுஇவ் அங்கண் உலகு அளித்தலால்

மன்னனுடைய குளிர்ந்த வெண்பட்டுக் குடையைப் போல் நின்று இவ்வுலகைக் காப்பாற்றுவதனால் சந்திரனைப் போற்றுவோம்!" என்று பாடினார் இளங்கோவடிகள்.

இக் கருத்தையே கம்பன் இன்னும் உயர்ந்த முறையிலே மாற்றியுரைத்தான். திங்களைவிடச் சிறந்த காரியங்களை தசரதன் குடை—ஆட்சி செய்து வருகின்றது; ஆதலால் சந்திரன் வேண்டியதேயில்லை" என்று கூறினான், இளங்கோவடிகள் கருத்தும் கம்பன் கருத்தும் ஒன்றுதான். கருத்தை எடுத்துக்காட்டும் முறையிலே கம்பன் ஒருபடி உயர்ந்துவிட்டான்.

தசரதனைப்பற்றி-அவன் குடிகளிடம் எவ்வளவு அன்பு வைத்து அவர்களைக் காத்துவந்தான் என்பதைப்பற்றிப் பேசும்போது,

"வய்யகம் முழுவதும் வறிஞன் ஓம்பும் ஓர்
செய்எனக் காத்து இனிது அரசு செய்கிறான்
(பால. அரசியல். 12)

என்று கூறுகின்றான். "ஒரு சிறிய நிலத்தைத் தனக்கு உரிமையாகக்கொண்ட வறிஞன் ஒருவன் அதைக் கண்ணும் கருத்துமாகப் போற்றிப் பாதுகாப்பான்; அதைப் போலவே தசரதனும் தனது நாட்டைப் பாதுகாத்தான்" என்று எடுத்துக்காட்டினான். ஒரு அரசன் தனது நாட்டை எப்படிப் பாதுகாக்கவேண்டும் என்பதை இதனால் அறியலாம்.

இராமனுக்கு முடிசூட்டுவதாகத் தீர்மானித்தபின், வசிட்டன் அவனுக்குச் சில அரசியல் நீதிகளை எடுத்துரைக்கின்றான். இவ்விடத்திலே கம்பன் குறித்திருக்கும் அரசியல் நீதிகள் தமிழர் பண்பை ஒட்டியவை.

"யாரொடும் பகை கொளிலன் என்றபின்
போர் ஒடுங்கும் புகழ் ஒடுங்காது.

(அயோத்தி. மந்தரை. 13)

ஆளுவோன் யாரோடும் பகைத்துக்கொள்ளாமலிருப்பானுயின், நாட்டிலே போர் தோன்ருது; மறைந்துவிடும். ஆனல் புகழ் ஒடுங்காது; சமாதானத்தை அடிப்படையாகக் கொண்டு ஆளுகின்ற மன்னவன் புகழ் பரந்து நிற்கும்.

இதனல், போரினுல்தான் புகழ்பெறமுடியும் என்ற பழய மூடநம்பிக்கையைக் கல்லியெறிகிருன் கம்பன். இது மிகச் சிறந்த கருத்தன்ருே!

''உமைக்கு நாதற்கும், ஓங்கு புள்ளூர்திக்கும்.
இமைப்பில் நாட்டம் ஓர் எட்டுடையானுக்கும்.
சமைத்த தோள்வலி தாங்கினர் ஆயினும்,
அமைச்சர் சொல்வழி ஆற்றுதல் ஆற்றலே,

(மேற்படி 15)

பரமசிவன், திருமால், நான்முகன், இவர்களைப்போன்ற புயவலிமையைப் பூண்டவனுயிருந்தாலும், அமைச்சர் சொல்வழி நடப்பதே ஆளுவோர்க்குச் சிறந்த வலிமையாகும்."

ஆளுவோர்க்கு எவ்வளவு ஆற்றலிருந்தாலும், அவர்கள் அறிவு நிரம்பிய அமைச்சர்களின் ஆலோசனைப்படி தான் நடக்கவேண்டும்; இன்றேல் அவர்களுடைய ஆற்றல் அழிந்து சிதையும் என்பதை இப்பாடல் விளக்கிற்று.

"இனிய சொல்லினன், ஈகையன், எண்ணினன்,
வினையன், தூயன், விழுமியன், வென்றியன்
நினையும் நீதி நெறிகடவான் எனின்
அனைய மன்னற்கு அழிவும் உண்டாம் கொலோ.

(மேற்படி 18)

இனியமொழி, ஈகைக்குணம், ஆழ்ந்த சிந்தனை, வினை செய்யும் வல்லமை, குற்றமற்ற பண்பு, சிறந்த குணம்,

செயலிலே வெற்றி பெறுந்தன்மை, நீதிநெறி கடவாமை, இக்குணங்களையுடையோனாக ஆளுவோன் இருப்பானாயின், அவனுக்கு எக்காலத்திலும் யாராலும் அழிவில்லை." இப்பாடலும் ஆளுவோருக்கு அமைந்திருக்க வேண்டிய பண்புகளை எடுத்துக் காட்டிற்று.

ஆளுவோன், அமைச்சர்களுடன்—நிர்வாகிகளுடன்—கலந்து ஆலோசித்தே எக்காரியங்களையும் செய்யவேண்டும்; என்பது கம்பன் கருத்து. இக்கருத்தை இராமன் சுக்கிரீவனுக்கு அரசியல் போதனை செய்யும்போது வெளியிடுகிறான்.

"வாய்மைசால் அறிவின் வாய்த்த
மந்திர மாந்த ரோடும்,
தீமைதீர் ஒழுக்கின் வந்த
திறத்தொழில் மறவரோடும்,
தூய்மைசால் புணர்ச்சி பேணித்
துகள் அறு தொழிலையாகிச்,
சேய்மையோடு அணிமையின்றித்
தேவரின் தெரிய நிற்றி! (கிட்கிந்தா, அரசியல் 28)

உண்மையை ஆராய்ந்து உணரும் அறிவுள்ள அமைச்சர்களோடும், குற்றமற்ற ஒழுக்கத்துடன் திறமையாக நிர்வாகத்தை நடத்தும் வீரர்களுடனும், மனங்கலந்து ஆலோசித்த பின்பே செயல்களைச் செய்யவேண்டும்; எல்லா மக்களோடும் நெருங்கியும் நெருங்காமலும் பழகவேண்டும்; விரும்புவோரிடம் நெருங்கியும், விரும்பாதோரிடம் நெருங்காமலும் தேவர்களைப்போல வாழவேண்டும்."

ஆளுவோன் எந்த நிலையிலிருந்து ஆட்சி நடத்த வேண்டும் என்பதை விளக்கிற்று இப்பாட்டு.

"பகையுடைச் சிந்தையார்க்கும்
பயன் உறுபண்பில் தீரா
நகையுடை முகத்தை யாகி,
இன்னுரை நல்கு, நாவால், (ஷை 29)

உன்னிடம் பகைகொண்ட உள்ள முடையவராயினும் சரி, அவர்களிடம் கடுகடுத்துப் பேசாதே! மகிழ்ந்த முகத்

துடன் பேசு! இனிய சொற்களைக்கூறு; இவைகளே பயன் தரும் சிறந்தகுணமாகும்.''

என்று மேலும் சுக்கிரீவனுக்கு அறிவுரை கூறினன் இராமன். ஆளுவோர்க்கு—ஆட்சிப் பீடத்திலே அமர்ந் திருப்போர்க்கு—இவை மிகவும் இன்றியமையாத பண்புகள்.

### அமைச்சர்கள்

அரசர்களுக்கு அறிவுரைகூறிய கம்பன் அமைச்சர்களையும் விட்டுவிடவில்லை. ஆளுகை வண்டி குடை சாயாமல் செல்வதற்கு அமைச்சர்கள் தாம் அடிப்படை யானவர்கள். அந்த அமைச்சர்கள் எப்படி யிருக்க வேண்டும் என்பதைப்பற்றி விளக்கமாகச் சொல்லியிருக் கின்ருன்.

''உற்றது கொண்டு மேல்வந்து
உறுபொருள் உணரும் கோளார்,
மற்றது வினையின் வந்தது ஆயினும்
மாற்றல் ஆற்றும்
பெற்றியர்; பிறப்பின் மேன்மைப்
பெரியவர்; அரிய நூலும்
கற்றவர்; மானம் நோக்கின்
கவரிமா அனைய நீரார். (அயோத்தி. மந்திர. 7)

நடந்த நிகழ்ச்சியைக்கொண்டு, இனி நடக்கப்போகும் நிகழ்ச்சியைத் தெரிந்துகொள்ளும் அறிவும் ஆற்றலும் உள்ளவர்கள்; முன் வினையினால் மூண்ட தீமையாயினும் அதை மாற்றும் வல்லமையுள்ளவர்கள்; நல்லொழுக்க முள்ள குடியிலே பிறந்தவர்கள்; சிறந்த நூல்களையெல் லாம் கற்றறிந்தவர்கள்; மானத்திலே, தன் மயிர்போனாலும் உயிர் வாழவிரும்பாத கவரிமானைப் போன்றவர்கள்''.

''தம் உயிர்க்கு உறுதி எண்ணார்;
தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி, நீதி
விடாதுநின்று உரைக்கும் வீரர்,

செம்மையின் திறம்பல் செல்லாத்
தேற்றத்தார்; தெரியும் காலம்
மும்மையும் உணர வல்லார்;
ஒருமையே மொழியும் நீரார். (ஷ 9)

தமக்குமட்டும் நன்மைவேண்டும் என்று கருதமாட்டார்கள்; அரசன் வெகுண்டாலும் அவன் கொடுமையைத் தாங்கிக்கொள்வார்கள்; நீதியைவிடாமல் பின்பற்றுவார்கள்; அரசனையும் நீதிநெறியிலே நடக்கும்படி வலியுறுத்தும் வீரர்கள்; நடுநிலையிலிருந்து தவறாத தெளிந்த அறிவுள்ளவர்கள்; ஆராய்ந்து தெரிந்து கொள்ளவேண்டிய இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் இவைகளைப் பற்றி அறிந்துகொள்ளும் மதிவன்மை படைத்தவர்கள்; தாம் நன்மையென்று கண்ட ஒன்றையே உறுதியுடன் உரைப்பவர்கள்."

இவ்வாறு அமைச்சர்களின் தகுதியைப்பற்றிக் கூறுகின்றான். வள்ளுவர் மொழிந்திருக்கும் அமைச்சர் இலக்கணத்தை இங்கே நினைவு கூரவேண்டும்.

"தெரிதலும், தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்லது அமைச்சு. (அதி. 64 கு. 4)

செய்யத்தக்க செயல்களை ஆராய்ந்து அறிவதும், அச்செயல் முடிவதற்குரிய வழிகளை ஆராய்ந்து செய்வதும், உறுதியாகத் தன் கருத்தை வெளியிடுவதும் ஆகியவற்றில் வல்லவனே அமைச்சனாவான்."

வள்ளுவர் அமைச்சர்களின் தகுதி பற்றிக்கூறிய இக்கருத்தே கம்பன் கருத்துக்கு அடிப்படையாக இருப்பதைக் காணலாம்.

அரசியல் திறம்பட நடக்கவேண்டுமானால் ஆளுவோரும், அமைச்சர்களும், அறிவுள்ளவர்களாயிருக்கவேண்டும்; ஆற்றல் உள்ளவர்களாயிருக்கவேண்டும்; நடுவுநிலைமையுள்ளவர்களாயிருக்கவேண்டும்; பொறுமையுள்ளவர்களாயிருக்கவேண்டும்; இன்சொல்லும் நகை முகமுங்கொண்டு எல்லோரையும் தம் வசமாக்கும் தன்மையுள்ளவர்களாயிருக்கவேண்டும்; என்ற கருத்துக்களைக் கம்பன் வெளியிட்டிருக்கின்றான்.

# 16. கருத்தில் சிறந்தவன் கம்பன்

வடமொழியிலே காளிதாசனை உயர்ந்த கவிஞனாகப் போற்றுகின்றனர்; ஆங்கிலத்திலே செகப்பிரியரைச் சிறந்த புலவராகக் கொள்ளுகின்றனர். இந்தியிலே துளசி தாசரை நல்ல கவிஞராகக் கூறுகின்றனர். இதுபோலவே ஒவ்வொரு மொழியிலும் ஒவ்வொரு புலவர் ஒப்பற்ற கவிஞராக விளங்குகின்றனர். இதுபோலத் தமிழிலே ஒப்பற்ற கவிஞனாக உயர்ந்து நிற்பவன் கம்பன் ஒருவனே யாவான்.

கல்வியில் சிறந்தவன் கம்பன்; கவியிலே உயர்ந்தவன் கம்பன்; விருத்தப்பாக்கள் பாடுவதிலே வல்லவன் கம்பன்; இவைகளோடு கருத்திலும் சிறந்தவன் கம்பன்; இக்காரணங்களாலே கம்பன் புகழ்பெற்று விளங்குகின்றான். இதற்கு முன்னே எடுத்துக் கூறியவற்றைக்கொண்டு கம்பன் எத்தகைய சிறந்த கருத்துக்களைக் கொண்டவன் என்பது விளங்கும்.

## இதற்குமுன் கூறியவை

கம்பன் காலத்திலே தமிழகத்தில் காவியங்கள் பல இருந்தன. ஆயினும் அவைகளால் மக்களுடைய காவியக் காதலை நிறைவேற்ற முடியவில்லை. ஆதலால் மக்கள் ஆவலை நிறைவேற்றவே அவன் ஒரு காவியத்தைச் செய்தான். கம்பன் தன் காவியத்தை யாருடைய வேண்டுகோளாலும் பாடவில்லை; தானே தான், மக்கள் எண்ணத்தை நிறவேற்றும் ஆவலுடன் பாடினான்.

கம்பன் காலத்து மக்கள் கதைகள் கேட்பதிலே ஆவல் உள்ளவர்கள். அவர்கள் இராமாயண வரலாற்றிலே நம்பிக்கை கொண்டிருந்தனர்; இராமனையும், சீதையையும் தெய்வங்களாகவே கருதிவந்தனர். இராமனை நற்பண்புகளின் உருவமாகவும், இராவணனைத் தீமைகளின் தோற்றமாகவும் எண்ணிவந்தனர். ஆதலால் தன் காலத்து மக்கள் விரும்பிய இராம காதையைத் தமிழிலே பாடினான்.

மறைந்துவந்த வள்ளுவர் அறத்தை மீண்டும் நினைப் பூட்ட இராமாயணத்தை ஒரு கருவியாகக் கொண்டான் கம்பன். திருக்குறள் ஒரு இலக்கணம்; அந்த இலக்கணத்திற்கு எடுத்துக் காட்டாக நிற்கும் இலக்கியம் கம்பராமாயணம்.

கம்பனுக்கு முன்னே சங்க இலக்கியங்களில் இராமாயணத்தைப் பற்றிய குறிப்புக்கள் இருந்தன. ஆசிரியப் பாவிலும், வெண்பாவிலும், இராமாயணங்கள் இருந்தன. ஆழ்வார்களும், நாயன்மார்களும் இராமாவதாரத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கின்றனர். இவைகளை யெல்லாம் அறிந்தே கம்பன் இராம காதையைப் பாடினன்.

கல்வியினல்தான் சமுதாய உயர்வு தாழ்வுகள் ஒழியும் என்ற முன்னோர் கருத்தைக் கம்பனும் ஆதரித்தான். பெண்களுக்குக் கல்வி கற்பிக்கவேண்டுமென்று விரும்பினன். எல்லார்க்கும் கல்வியும் செல்வமும் இருக்கும் வகையிலே மனித சமுதாயம் மாற்றமடையவேண்டும் என்பது அவன் கருத்து.

கம்பன் மதப்பற்றுள்ளவன்; வைணவத்தில் ஆழ்ந்த பற்றுள்ளவன்; இராமனிடம் பக்தியுள்ளவன். ஆயினும் அவன் எந்த மதத்தையும், வெறுக்கவில்லை; எந்தக் கடவுளையும் இகழவில்லை.

ஒழுக்கமே உயர்வு தாழ்வுக்குக் காரணம். பிறப்பினல் மட்டும் உயர்வு தாழ்வு பாராட்டுவது தவறு என்பது கம்பன் கருத்து. இவ்வுண்மையை, இராமன் குகனிடத்திலும், சுக்கிரீவனிடத்திலும், விபீடணனிடத்திலும் கொண்ட உடன் பிறப்புத் தன்மையைக்கொண்டு மெய்ப்பித்துக் காட்டுகின்றான்.

காலத்தையறிந்து கவிபுனைந்தவர்களிலே கம்பன் சிறந்தவன். கம்பன் காலத்திலே இருந்த அறிஞர்கள் மாமிசம் உண்ணலும், மது வருந்துதலும் ஒழுக்கத்திற்கு விரோதம் என்று கருதினர். இக்கருத்தை அவன் தன் காவியத்திலே அமைத்துப் பாடினன்.

கம்பன் காலத்திலே பலதார மணந்தான் சமுதாயத்தில் நிலைத்திருந்தது. ஆனல் ஏகபத்தினி விரதமே

சிறந்ததென்பது கம்பன் கருத்து. இக்கருத்துக்கு இராமன் வாழ்க்கை எடுத்துக் காட்டாகும். ஆகையால் இராமனை மக்கள் பின்பற்றும்படி செய்யவேண்டும் என்று ஆவல்கொண்டான்.

பிறர்மனை விழைதல் என்பது சமுதாயக் கட்டுப்பாட்டைச் சீர்குலைப்பது. மக்கள் சமுதாயம் நேர்மையுடன் வாழவேண்டுமானால், பிறனுக்குரியவளாயுள்ள ஒருத்தியை மற்றொருவன் விரும்புவது தகாது. அவ்வாறு செய்வதைப்போல சமுதாயக் கட்டுப்பாட்டைச் சிதைக்கும் கொடுஞ்செய்கை வேறொன்றில்லை. இத்தகைய கொடுஞ்செயல் புரிந்தவர்கள் வாலியும், இராவணனும் என்பது கம்பன் கருத்து. இதுவும் வள்ளுவர் அறத்தைப் பின்பற்றியதாகும்.

இராமன் தியாகத்திற்கு எடுத்துக்காட்டு; இராவணன் தன்னலத்திற்கு ஒரு எடுத்துக்காட்டு. இராமன் செய்கைகள் அனைத்தும் பொதுநலங் கருதியவை; இராவணனுடைய செய்கைகள் எல்லாம் தந்கலங்கருதியவை; இவைகளை இராமாயணத்தின் மூலம் விளக்கமாகக் கூறினான் கம்பன்.

தமிழ் நாட்டின் காதல், கற்பு, வீரம் இவைகளையெல்லாம் தன் காவியத்திலே அமைத்துக் காட்டினான் கம்பன்.

திருக்குறள் நீதியை விளக்கும், ஒரு சிறந்த இலக்கியமாகவே இராமாயணத்தைப் பாடினான்; ஆங்காங்கே திருவள்ளுவர் கருத்துக்களையும், திருக்குறள் சொற்களையும், சொற்றொடர்களையும் தன் பாடல்களிலே அமைத்திருக்கின்றான் கம்பன்.

கம்பன் தமிழ் மொழியின்மேல் அளவற்ற பற்றுள்ளவன்; தமிழுக்குத் தொண்டு புரிந்தவர்களைப் பாராட்டுகின்றான்; தமிழ் மொழியை—தமிழ் நாட்டை—தன் தாய் நாடாகிய சோழ நாட்டை—சோழ மன்னரைத் தன் காவியத்திலே பல விடங்களில் பாராட்டுகின்றான்.

தமிழர்களின் சிறந்த பண்பாகிய செய்ந்நன்றி மறவாமையைத் தலைமேற்கொண்டவன் கம்பன். தனக்கு உதவிசெய்த சடையப்பவள்ளலை அவன் தன் காவியத்திலே தொடக்க முதல் இறுதிவரையிலும் புகழ்ந்து போற்றுகின்றான்.

கம்பன் உயர்ந்த அரசியல் கருத்துக்களைக் கொண்டவன்; ஆளுவோரும், அமைச்சர்களும் குடிமக்களின் போக்கறிந்து அரசியல் நடத்தவேண்டும் என்ற கருத்துள்ளவன்; சிறந்த—திறமையான—ஆட்சியின் மூலந்தான் மக்களும், நாடும் மகிழ்ந்து வாழமுடியும் என்பது அவன் கருத்து. இக்கருத்துக்களை யெல்லாம் இதற்கு முன்னுள்ள பகுதியிலே காணலாம்.

## கம்பன் பண்பு

கம்பனிடம் மதவெறுப்பைக் காணமுடியாது; சாதி வெறுப்பைப் பார்க்கமுடியாது; இன வெறுப்பு உண்டென்று எண்ணவே முடியாது. இவைகளோடு மொழி வெறுப்பும் இல்லாதவன் என்பது குறிப்பிடத்தக்கது.

இக்காலத்திலே தமிழர்களில் சிலர் பிறமொழியை வெறுப்பதே தம் மொழிக்குச் செய்யும் பணி என்று எண்ணுகின்றனர். பிறமொழி வெறுப்பால் மட்டும் தமிழ்மொழி வளர்ந்துவிடாது. இவ்வுண்மையை உள்ளத்திற் கொள்ளாதவர்களே பிறமொழியின்மீது எரிந்து விழுவார்கள்.

கம்பன் தமிழின்மேல் அளவற்ற அன்புள்ளவன். கம்பனைப்போல் தமிழுக்குப் பணிபுரிந்தவர் வேறு யாரும் இல்லை. தமிழ்மொழி நிலைத்திருக்கும் வரையிலும் அழியாமலிருக்கும் அரிய காவியத்தைச் செய்தவன் கம்பன். அவன் வடமொழியை வெறுக்கவில்லை. அவன் பாடல்களிலே வடமொழிச் சொற்கள் கலந்திருப்பதைக் காணலாம். வடமொழியில் உள்ள வான்மீகி இராமாயணத்தையே தான் தமிழிற் பாடியதாகக் கூறுகின்றான்.

வேறு மொழிகளில் உள்ள சிறந்த நூல்களைத் தமிழிலே பெயர்த்தெழுதுதல் இலக்கிய வளர்ச்சிக்குச் சிறந்த வழி யென்று தொல்காப்பியங் கூறுகிறது.

"தொகுத்தல் விரித்தல், தொகைவிரி, மொழி பெயர்த்து
அதர்ப்பட யாத்தலோடு அனைமரபினவே.

ஒரு நூலைச் சுருக்கி எழுதுதல்; விரிவாக எழுதுதல்; சுருக்கவேண்டிய இடத்தில் சுருக்கியும், விரிக்கவேண்டிய இடத்தில் விரித்தும் எழுதுதல்; வேறு மொழியிலிருந்து தமிழிலே பெயர்த்துத் தமிழ் முறையிலே செய்தல், என்ற அத்தகைய நான்கு முறையைக் கொண்டது வழிநூல்."

இது வழி நூலுக்குத் தொல் காப்பியர் கூறிய இலக்கணம். முதனூல் என்பது தாமாகவே தோன்றியது. தொல் காப்பியர் கூறிய வழி நூல் இலக்கணத்தைப் பின்பற்றியே கம்பன் இராமாயணத்தைத் தமிழிலே பாடினான்.

இதனால் கம்பன் மொழி வெறுப்பின்றித் தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு உழைத்த தமிழன், கலைஞன், உயர்ந்த அறிஞன் என்று உணரலாம்.

கம்பன் ஆங்காங்கே எடுத்துக் காட்டும் உவமைகளின் சிறப்பை—இயற்கையை எடுத்துக் காட்டினால் அதுவே ஒரு தனி நூலாகிவிடும். அவன் கூறும் அழகான—பொருள் நிறைந்த—நீதி மொழிகளை யெல்லாம் திரட்டி எழுதினால் அது ஒரு அரிய நூலாகத்திகழும். ஆங்காங்கே வள்ளுவர் கருத்தைக் கதை நிகழ்ச்சிகளிலே அமைத்துச் செல்லும் இடங்களை யெல்லாம் எடுத்துக் காட்டினால், அது ஒரு இராமாயணமாகவே ஆகிவிடும்.

கம்பனுடைய ஒவ்வொரு கருத்துக்களையும் விளக்கிக் கூறத் தொடங்கினால், இன்றுள்ள கம்பராமாயணத்தைப் போல் பலமடங்கு பெருகிவிடும். "சான்றோர் கவி" என்று அறிஞர் கவிதையை கம்பன் பாராட்டியிருப்பது அவன் கவிக்கே பொருந்தும். இத்தகைய கருத்திற் சிறந்த கம்பனைப் போற்றுவதே—அவன் காவியத்தில்—கவிதைகளில் — உள்ள உண்மையான உயர்ந்த கருத்துக்களை உணர்ந்து மகிழ்வதே தமிழர் கடமை. வாழ்க தமிழ்! வாழ்க தமிழர்! வாழ்க கம்பன் கண்ட தமிழகம்! வாழ்க கம்பன் புகழ்!

